# இப்பொழுது

## உங்கள் அன்புக்குரிய ஆரோக்கியத்தை அளிக்கும்

# விட்டமின்கள்

## அடங்கிய டானிக்

# வாட்டர்பரீஸ் காம்பவுண்டை வாங்குங்கள் !

இப்பொழுது நீங்கள் இந்தியாவின் அன்புக்குரிய ஆரோக்கியத்தை அளிக்கும் விட்டமின்கள் மிகுந்த டானிக்கை வாங்கலாம். வாட்டர்பரீஸ் காம்பவுண்டின் புகழ்பெற்ற கலவையில் ஆரோக்கியத்துடனும், பலத்துடனும் இருப்பதற்குத் தேவையான அதிகப்படியான விட்டமின்கள் சேர்த்திருக்கின்றன. வாட்டர்பரீஸ் விட்டமின் காம்பவுண்ட் உங்களுக்கு அநேக விதங்களில் பயனளிக்கிறது. இது இரத்தத்தை பரிசுத்தமாக்குகிறது. இழந்த சக்தியையும், வீர்யத்தையும் மீண்டும் அளிக்கிறது. நரம்புகளைப் பலப்படுத்தி தசைகளுக்கு சமனூட்டுகிறது. சரீரத்தில் வியாதிகளை எதிர்க்கும் சக்தியை உண்டு பண்ணுகிறது. நோயுற்று குணமடைந்தபின் உடம்பு சீக்கிரமாகத் தேற மிகவும் உதவுகிறது.

குங்குமப்பூ கலர் மூடியைப்பார்த்து வாங்குங்கள்




குங்குமப்பூ கலர் லேபிலை பார்த்து வாங்குங்கள்

# வாட்டர்பரீஸ்

விட்டமின்

# காம்பவுண்ட்

உங்களுக்கு போஷாக்கை அளிக்கிறது.

இருமலையும், ஜலதோஷத்தையும் போக்குவதற்கு கிரியோஸோட் மற்றும் க்வயகால் சேர்க்கப்பட்ட சிகப்பு லேபிளுடைய வாட்டர்பரீஸ் காம்பவுண்டும் கிடைக்கிறது.



# பம்பாய் டெக்கான் சர்க்கரைத் தொழிற்சாலைகள் சங்கத் தலைவர்
# ஸ்ரீ எப். எட்வர்ட்ஸ் வெளியிட்டுள்ள

## பத்திரிகை அறிக்கை

மகாராஷ்டிர சர்க்காரின் உத்தேச நில உச்சவரம்புச் சட்டம் ஆபத்தான, அபாயகரமான ஒரு நடவடிக்கையாகும்! இப்படிப் பின்னோக்கி அடி எடுத்து வைத்திருப்பதை, சீரிய சிந்தனையுள்ள எந்த வர்த்தகரும், தொழிலதிபரும் ஆதரிப்பது சாத்தியமில்லை. மகாராஷ்டிராவில் சர்க்கரைத் தொழில் வெற்றி பெற்றிருப்பதற்கான அடித்தளமே குழி பறிக்கப்பட்டிருக்கிறது; 40 ஆண்டுகளாக நிர்மாணித்த அனுகூலம், அனுபவம், திறமை யாவும் காற்றோடு போகுமாறு விடப்பட்டுள்ளன. இந்தியாவிலேயே சர்க்கரைத் தொழிலில் பெரும் வெற்றி பெற்றிருப்பது மகாராஷ்டிரம்தான். பல காலத்துக்கு முன் நிறுவிய ஜாயிண்ட் ஸ்டாக் கம்பெனிகள் முன்னோடியாகப் புரிந்த பணியும், அவற்றின் விடாமுயற்சியும்தான் இதற்குக் காரணம். கரும்புச் சாகுபடியைத் தனது பூரண அதிகாரத்தில் வைத்துக் கொண்டிருந்தால்தான் ஓர் ஆலை தரமான சர்க்கரையைக் குறைந்த விலைக்குத் தயாரிக்க முடியும் என்பதை அவற்றின் அனுபவம் நிரூபித்துக் காட்டியுள்ளது. இந்த ஆலைகள் ஈட்டிய லாபத்துக்கு உயர்ந்த விற்பனை விலைகளோ, கொள்ளை லாப முறைகளோ காரணமல்ல. ஏனெனில் விலைகள் ராஜ்ய சர்க்காராலேயே நிர்ணயிக்கப்படுகின்றன. எனவே இந்த லாபத்துக்குக் கரும்புச் சாகுபடி, உற்பத்தி முதலியவற்றின் குறைவான அடக்கச் செலவே காரணமாகும். ஏகர் ஒன்றுக்குக் கிடைக்கும் மகசூல், ஓர் ஏகர் கரும்பிலிருந்து கிடைக்கும் சர்க்கரையின் அளவு இவற்றைக் கவனித்தால், ராஜ்ய சர்க்கார் இதில் ஏன் தலையிட வேண்டும்-அதுவும், உலக வர்த்தகத்தில் நாடு பங்கு பற்றி, கணிசமான அந்நியச் செலாவணி சம்பாதிக்க வசதி அளிக்கும் வகையில், குறைந்த விலைகளில், இன்னும் அதிகமாக உற்பத்தி செய்ய வேண்டுமென மத்திய சர்க்கார் வற்புறுத்தி வரும் போது—என்பது அறிவால் துளிக்கூடக் கிரகிக்கக் கூடியதாக இல்லை.

உலகில் சர்க்கரைத் தயாரிப்புக்குப் பெயர் பெற்ற, இதர நாடுகளின் சராசரிகளுக்குச் சமதையான பலன்களை மகாராஷ்டிராவும் கண்டு வருகிறது. ஜாவாவை உதாரணமாக எடுத்துக் கொண்டு, கீழ்க்காணும் புள்ளி விவரங்களைப் பார்ப்போம் :

| | ஏகர் ஒன்றுக்கு கரும்பு மகசூல் (டன்களில்) | கரும்பிலிருந்து கிடைக்கும் சர்க்கரையின் சராசரி சதவிகிதம் |
|---|---|---|
| ஜாவா | 56·20 | 11·49 |
| மகாராஷ்டிரா | 53·25 | 11·80 |
| அகில இந்தியா | 14·70 | 9·84 |

இந்திய சராசரியுடன் மகாராஷ்டிரா காணும் விளைவுகளை ஒத்திட்டுப் பார்த்தால், ''தேசத்தின் இதர பாகங்களில் சர்க்கரைத் தொழில் நிச்சயமாக நலிவுற்று, நொந்திருக்கும் போது மகாராஷ்டிராவில் ராஜ்ய சர்க்காரானது ஏன் இப்பேர்ப்பட்ட முன்னேற்றத்தைக் குலைக்க முயலுகிறது?'' என்று உங்களையே கேட்டுக் கொள்வீர்கள். தேச நலன், அல்லது ராஜ்ய நலனையோகூட முன்னிட்டு இவ்விதம் செய்வதாக விடைகூறவே முடியாது. ஏராளமான உண்மைகள் மூலம் இதை நிரூபிக்க முடியும். எனவே இவ்வாறான ஒரு சட்டம் கொண்டு வர மத்திய சர்க்கார் அனுமதி தந்திருப்பது பிரமிப்பூட்டுகிறது. இது முற்றிலும் ஓர் அரசியல் நடவடிக்கையே; ஏதோ ஒரு கொள்கையின் லட்சியத்தை—எந்த அல்லது எல்லா—விளைவு ஏற்பட்டாலும் அடைந்தே தீருவது என்பதற்கான முயற்சியே என்பதுதான் இதற்குக் கிடைக்கும் வெளிப்படையான விடை. அதோடு சமீப காலத்தில் மந்திரிகளும், திட்டக் கமிஷனும் கூறி வருவதையும், இதர ராஜ்யங்கள் தம் நிலவரம்பு மசோதாக்களில் தொழிற்சாலை நிறுவனங்களுக்கு விலக்களித்திருப்பதையும் கவனித்தால் இங்கு மட்டும் கரும்புப் பண்ணைகளுக்கு உச்சவரம்பு கட்ட உத்தேசித்திருப்பது மேலும் வியப்பளிக்கிறது. நிச்சயமாக ஆந்திரா, கேரளா, சென்னை முதலிய சர்க்கார்கள் மகாராஷ்டிராவைவிட அதிக அறிவு விளக்கம் பெற்றவை எனச் சொல்வதற்கில்லை. சென்னை மசோதா, இதுவரை பயிரிட்டுவரும் ஆலைகளே தொடர்ந்து கரும்புப் பண்ணைகள் நடத்தலாமா என்று முடிவு செய்வதற்காக உயர்நீதி மன்ற நீதிபதி ஒருவரை சேர்மனாகக் கொண்ட கரும்பு போர்டு ஒன்று அமைக்க இடமளித்திருக்கிறது. இது நியாயமானதே; ஏனெனில் இம்முடிவுகள் யதார்த்த உண்மைகள், தகுதிகள் இவற்றைப் பொருத்தே அமையும் என எதிர்பார்க்கப்படுகிறது. ஆனால் மகாராஷ்டிர சர்க்காரோ, தான் உரிமை பெறப் போகும் உபரி நிலங்களை என்ன செய்வது என்று தீர்ப்புக் கூறத் தன்னைத்தானே நியமித்துக் கொண்டிருக்கிறது. மசோதாவைச் சட்டமாக்கி அமுலாக்கும் போது சிக்கல் ஏதேனும் எழுந்தால் அதைச் சமாளிக்க, அவசியமெனக் கருதும் வகையில் ஷரத்துக்களை சரிக்கட்டவும், தீர்மானங்கள் செய்யவும் சர்க்கார் தனக்கே அதிகாரம் அளித்துக் கொண்டுள்ளது. இது மசோதாவின் மோசமானதோர் அம்சமாகும்; இதைத் தீவிரமாக எதிர்க்க வேண்டும். மேலும், இதனால் நாட்டின் சில சர்க்கரை ஆலைகள் மட்டும் தங்கள் பண்ணைகளை இழக்கவும், மற்றவை இழக்காமலிருக்கவும் நேரிடும். இம்மாதிரி பட்சபாதமாக நடப்பதற்கு மத்திய சர்க்கார் அனுமதிதரக்கூடாது.

தொழிலிலும் வர்த்தகத்திலும் அநாவசியமான அரசியல் தலையீடு இருப்பதற்கு இந்த மசோதா முழுவதுமே மற்றொரு உதாரணமாகும். தற்போதுள்ளது போலவே இம்மசோதா சட்டமாக்கப்பட்டால், அதன் விளைவாக, தக்காணத்தின் சர்க்கரைத் தொழில் முன்னேற்றத்துக்குக் குந்தகம் ஏற்படுவதைத் தவிர்க்கவே முடியாது. இறுதிக் கட்டமாயினும், இப்போதாவது சர்க்கார் மீண்டும் சிந்தனை செய்து, மசோதாவின் ஷரத்துக்களிலிருந்து நன்கு நடத்தப்படும் ஆலைகளைச் சேர்ந்த கரும்புப் பண்ணைகளுக்கு விலக்களிப்பது எவ்வளவோ விவேகமானது என்ற முடிவுக்கு வரக்கூடும் என நம்பப்படுகிறது.

# கல்கி பொருளடக்கம்

சார்வரி, தை 9 ❋ ஜனவரி 22, 1961



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே



சிகரெட்டின் விலை எவ்வளவுக்கெவ்வளவு அதிகமோ அவ்வளவுக்கவ்வளவு தரமும் உயர்வு என்ற கருத்து பற்பலரிடம் உண்டு. இது எப்போதுமேயோ, எல்லா விஷயங்களிலுமேயோ உண்மையாகிவிடுவதில்லை. ஏனென்றால், அத்தகைய விலையில் மிகப் பெரும் பங்கு பற்பலவான வரிகளுக்கே போய்ச் சேருகின்றன.

# புகையிலையின் வரலாறு... 10




## பனமா

ஒரு நல்ல சிகரெட்—
இறுதிவரை இன்பமூட்டுவது

பம்பாய்—57

பாரதத்தில் இத்தகைய தேசீய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது

GT 710 TM

Greens' Advtg.



மலர் 20 | தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 25

# சுதந்திரச் சின்னம்

டில்லி மக்கட் சபையில் சுதந்திரக் கட்சிக்குத் தேர்தல் சின்னம் வழங்குவது பற்றி விவாதம் எழுந்து, சர்க்காரின் சட்ட மந்திரி அளித்த பதிலைப் பார்க்கும்போது, தேர்தல் சம்பந்தப்பட்ட சட்ட திட்டங்களின் பலத்தைக் கொண்டு சுதந்திரக் கட்சிக்கு இடையூறு விளைவிப்பது ஆளும் கட்சியின் நோக்கம் என்று தோன்றுகிறது.

சமீப காலத்தில் ஆளும் கட்சியினர், நீதி நிர்வாகத்தில் புகுந்து குழப்புவது போல், இப்போது தேர்தல் கமிஷன் காரியாலயத்திலும் புகுந்து குழப்ப விரும்புகிறார்கள் என்பதே இந்த விவாதத்தின் சூசகம்.

இந்திய அரசாங்க நிர்வாகத்தில், சில இலாக்காக்கள், ராஜ்ய சட்ட சபைகளுக்கும் மத்திய சட்ட சபைகளுக்கும் அப்பாற்பட்டு இயங்க வேண்டும், அவற்றின் நிர்வாகத்தில் சர்க்கார் பிரவேசிக்கக் கூடாது என்பது அரசியல் நிர்ணயச் சட்டத்தின் விதி. அப்படிப் பட்ட இலாக்காக்கள், ராஜ்ய நீதி மன்றங்கள், உயர்நீதி மன்றம், ஆடிட்டர் ஜெனரல் காரியாலயம், தேர்தல் கமிஷன் காரியாலயம் முதலியன.

நடைபெற்ற தேர்தலில் இரண்டு சதவிகித வோட்டுக்கள் பெற்ற கட்சிக்குத்தான் தேர்தல் சின்னம் ஒதுக்க முடியும் என்ற ஒரு விதியின் அடிப்படையில், சுதந்திரக் கட்சி ஏற்கனவே தேர்தலில் நிற்காத கட்சியாதலால், அது விரும்பும் தேர்தல் சின்னம் கொடுக்க முடியாது என்று மறுத்துவிடக் காங்கிரஸின் சட்ட மந்திரி தேர்தல் கமிஷனுக்கு யோசனை கூறுகிறார்.

ஆளும் காங்கிரஸ் கட்சிக்கு எதிராக ஒரு பெரிய புதிய கட்சி தோன்றலாம் என்ற எண்ணமே இல்லாத போது அந்த விதி வகுக்கப்பட்டது. ஆகவே, அதை இன்றையச் சூழ்நிலையில் பிரயோகிக்கப் பார்ப்பது சரியல்ல.

தேர்தல் கமிஷன் நாட்டில் ஜனநாயகம் தழைக்க உதவுவதற்காக ஏற்பட்டது. ஆளும் கட்சிக்கு முற்றும் மாறுபட்ட கொள்கையுடைய கட்சி சுதந்திரக் கட்சி என்பதைத் தேர்தல் கமிஷன் மனத்தில் கொள்ளவேண்டும். காங்கிரஸின் சோஷலிஸக் கொள்கைக்கு முற்றும் மாறுபட்ட கொள்கை கொண்ட புதிய கட்சி இது. எல்லாம் சர்க்கார் உடைமையாக வேண்டும் என்ற கொள்கையுடைய காங்கிரஸ் கட்சிக்கு முற்றும் மாறாகத் தனி நபருக்கு அதிக சுதந்திரமும் உரிமையும், தொழில்கள் நடத்தும் வாய்ப்பு மிருக்க வேண்டும் என்ற கொள்கையுடையது சுதந்திரக் கட்சி.

மேலும் பார்லிமெண்டிலும், பல்வேறு ராஜ்ய சட்டசபைகளிலும் நூற்றுக்கு மேற் பட்ட சுதந்திரக் கட்சி அங்கத்தினர்கள் இப்பொழுதே இருக்கிறார்கள்.

ஆகவே, சுதந்திரக் கட்சிக்குச் சின்னம் கொடுக்க முடியாது என்று மறுப்பது எந்தவிதத்திலும் முடியாத காரியமாகும்.

தேர்தல் கமிஷன், அரசியல் நிர்ணயச் சட்டத்தில் வழங்கியுள்ள சுதந்திரத்தோடு செயல்படும் என்பதில் நமக்குச் சிறிதும் ஐயமில்லை.

# அந்நியக் கடனும் சுதந்திரக் கட்சியும்

பாவநகர் காங்கிரஸ், மந்திரிகளுக்கும் காங்கிரஸ் அங்கத்தினர்களுக்கும் ஒரு விஷயத்தை மிகத் தெளிவாக்கி விட்டது. பொது மக்களிடையே காங்கிரஸ் எவ்வளவு தூரம் செல்வாக்கு இழந்து விட்டது என்பதை மிகத் தெளிவாக எடுத்துக் காட்டி விட்டது. பெங்களூரில் நடைபெற்ற மகாநாட்டைவிட பாவநகர் மகாநாட்டில் கூட்டமும் உற்சாகமும் குறைவாக இருந்ததாகத் தெரிய வருகிறது. இதைப் பார்த்து விட்டு வந்த காங்கிரஸ் மந்திரிகள், காங்கிரஸின் செல்வாக்கை வளர்க்க, திட்டத்தைப் பற்றிப் பிரசாரம் செய்யத் தொடங்கி யிருக்கின்றனர். திட்டத்தை விட்டால், அவர்களுக்கு வேறு கதியில்லை!

சென்னையில் திட்டத்தைப் பற்றி நடத்திய ஆராய்ச்சி அரங்கில் மந்திரி திரு சி. சுப்பிரமணியம், "கடன் வாங்குவதில் தவறில்லை. எல்லா நாடுகளும் கடன் வாங்கித்தான் பொருளாதாரத் துறையில் முன்னேறியிருக்கின்றன" என்றார்.

இதை யாரும் மறுக்கவில்லை. வாங்கிய கடன்களை எப்படித் தீர்க்கப் போகிறீர்கள், என்ன பண்டங்களை மேல் நாட்டுக்குப் புதிதாக அனுப்பிக் கடன் சுமையைத் தீர்க்கப் போகிறீர்கள், இதற்கு என்ன திட்டம் போட்டிருக்கிறீர்கள் என்றுதான் கேட்கிறோம்.

இதை எடுத்துச் சொன்னால் சுதந்திரக் கட்சியினர் திட்டமே வேண்டாம் என்கின்றனர்; கடன் வாங்கவே கூடாது என்கின்றனர்; தேசம் முன்னேற்றமே அடையக்கூடாது என்று கூறுகின்றனர் - என்று பொய்ப் பிரசாரம் செய்கின்றனர்.

காங்கிரஸின் பதின்மூன்று வருட ஆட்சியில் நாட்டு மக்களின் முன்னேற்றத்தை யாரும் காணவில்லை; சுபிட்சத்தைக் காணவில்லை. ரூபாயின் மதிப்பு மூன்றரையணாவாகத் தேய்ந்திருப்பதைப் பார்க்கிறோம். விவசாயத்தை நம்பி வாழும் கூலிகளின் வாழ்வு இன்னும் சீரழிந்திருப்பதைப் பார்க்கிறோம்.

சுதந்திரக் கட்சி அன்னியக் கடன் உதவியே வேண்டாமென்று சொல்லவில்லை. நாட்டுக்கு லாபகரமாக இருக்கும் வகையில் அமையவேண்டும் என்றுதான் சொல்கிறது!

ஆட்சியினர் கடன் வாங்குவதைவிட வெளி நாட்டிலுள்ள தனிப்பட்ட தொழிலதிபர்களை இந்நாட்டிலுள்ளவர்களுடன் சேர்ந்து மூலதனம் போட்டுத் தொழில் வளத்தைப் பெருக்கச் சொல்லுவது நியாயமாகும். இதனால், தொழிலில் நஷ்டம் ஏற்பட்டால் பொறுப்பு அவர்களுடையதாகும். பொதுமக்கள் பேரில் கடன் சுமை ஏறாது.

இன்றுள்ள முறையில், சர்க்கார் கோடி கோடியாக வெளிநாட்டுச் சர்க்கார்களிடம் கடன் வாங்கித் தொழில் அனுபவமோ அக்கறையோ இல்லாத சர்க்கார் உத்தியோகஸ்தர்களைக் கொண்டு செலவழிக்கிறது. அதனால், தொழில் துறையில் பண்ட உற்பத்தி பெருகக் காணோம். ஆயினும் வெளி நாட்டுக் கடனைத் திருப்பித் தந்தே யாக வேண்டும். வெளிநாட்டிலிருந்து இந்திய சர்க்கார் கடன் வாங்குவதால் லாபம் உண்டானாலும் சரி, நஷ்டம் உண்டானாலும் சரி சர்க்கார் திருப்பிக் கொடுத்தே தீரவேண்டி யிருக்கிறது. பண்டங்களை அனுப்பித் தீர்க்க வேண்டும்.

சுதந்திரக் கட்சியின் திட்டத்தை அனுசரித்தால், லாபம் உண்டானால் அதில் வெளிநாட்டவர்களுக்கும் பங்கு உண்டு; இந்நாட்டவர்களுக்கும் பங்கு உண்டு. நஷ்டமுண்டானால் பொறுப்பு அந்தத் தனி மனிதர்களையே சாரும். சர்க்கார் பாதிக்கப்படாது. நாட்டு ஏழை மக்கள் மறைமுக வரிகளால் பாதிக்கப்பட மாட்டார்கள்.

# பிளாக் டெவலப்மெண்டு தர்பார்

**திரு கோவை அய்யாமுத்து அவர்கள் அடியில் காணப்படும் ஒரு சுற்றறிக்கையை நமக்கு அனுப்பியிருக்கிறார்.**

வட்டார வளர்ச்சி அலுவலகம்
திருக்கடவு, தேதி 10-1-61

ந. க. எண் - 61

**சுற்றறிக்கை**

ஐயன்மீர்,

1961-ம் வருஷம் ஜனவரி மாதம் 24 முதல் நான்கு நாட்களுக்குச் சென்னை தேனாம்பேட்டையில் ஒரு கதர், மற்றும் கிராமக் கைத் தொழில் கண்காட்சி நடைபெறும். அது சமயம், சென்னை சர்க்காரின் மிருக வைத்தியம், விவசாயம், ஸ்தல ஸ்தாபனம், கிராம அபிவிருத்தி, காதி, வட்டார வளர்ச்சி முதலிய பல இலாக்காக்கள் கலந்து கொள்ளும். 1958-ம் வருஷத்திய சென்னை பஞ்சாயத்து சட்டத்தின் கீழ் அமைக்கப்படவிருக்கும் பஞ்சாயத்து ராஜ்யத்தின் பல அம்சங்களைப் பற்றியும், பிரச்னைகளைப் பற்றியும் சிந்தித்து ஆராய்ந்து பார்க்கவும், தீர்த்துக் கொள்ள

# செய்தி தெரியுமா? சாமா


பணக்காரர்களிடமிருந்து பணம் வசூல் செய்யும் இந்த அசுத்தமான வேலையை என்னால் செய்ய முடியாது. நீ பாட்டீல் தான் செய்ய வேண்டும்
பாடீல்
தேர்தல் நிதி சேகரிக்கும் மந்திரி
பணம்
"எலெக்ஷன் 'காம்பெயின்?'"
"இல்லை! 'கலெக்ஷன்' காம்பெயின்."
இலவசப் பகல் உணவு
இந்தப் பக்கமும் கொஞ்சம் வாருங்கள்
அரசாங்கம்
ஆசிரியர்கள்
மந்திரவாதி வேலை!
இதில் என்ன?
பஞ்சாபி சூபா
தற்சமயம் அதை மூடுகிறேன்
ஆ! மந்திரக்கோல்
இதோ மாற்றி விட்டேன் ஆரஞ்சு ஜூஸாக! உடனே பஞ்சாபிகளிடம் கொடுங்கள்!

## சுதந்திர நிதி

கல்கி பொங்கல் மலரில் ராஜாஜி அவர்கள் விடுத்திருந்த வேண்டுகோளுக்கு இணங்கிக் கீழ்க்கண்ட அன்பர்கள் சுதந்திர நிதிக்குப் பொருளுதவி செய்திருக்கிறார்கள்.

(ஜனவரி 15-ந் தேதி முடிய)

| | | | |
|---|---|---|---|
| என். மகாதேவன் | ... | 4 | 00 |
| டி. ஆர். கிருஷ்ணமாச்சாரி | ... | 10 | 00 |
| வாகலி கிருஷ்ணமூர்த்தி | ... | 5 | 00 |
| டி. வி. இராமகிருஷ்ணன் | ... | 5 | 00 |
| எஸ். கோபாலகிருஷ்ணன் | ... | 2 | 01 |
| கே. ஆர். நாராயணன் | ... | 2 | 00 |
| எம். கோவிந்த் ஐயங்கார் | ... | 1 | 00 |
| வி. எஸ் நாகஸ்வாமி | ... | 1 | 00 |
| டாக்டர் கே. ராமச்சந்திரன் | | 10 | 00 |
| பி. எஸ். கிருஷ்ணமூர்த்தி | ... | 2 | 00 |
| கே. நாராயணன் | ... | 1 | 00 |
| வி. பாலசுப்பிரமணியன் | ... | 1 | 00 |
| கே. மாணிக்க முதலியார் | ... | 1 | 00 |
| டாக்டர் எச். ஸ்ரீபாதராவ் | ... | 50 | 00 |
| கோகலே கதர் ஸ்டோர்ஸ் | ... | 5 | 00 |
| ஏ. கே. கிருஷ்ணமூர்த்தி | ... | 1 | 00 |
| ஏ. குலாம் தஸ்தகீர் சாயபு | ... | 1 | 00 |
| எம். பெரியசாமி | ... | 1 | 00 |
| ஜி. கே. வெங்கடேசன் | ... | 1 | 00 |
| ஏ. கே. வெங்கடாசலபதி | ... | 1 | 00 |
| எஸ். முருகன் | ... | 10 | 00 |
| கே. ரங்கநாத ஐயர் | ... | 81 | 00 |
| ஜி. ஏ. மகாலிங்கம் | ... | 10 | 00 |
| எஸ். கோபால கிருஷ்ணன் | | 10 | 00 |
| ஸ்ரீமதி மீனாக்ஷி | ... | 25 | 00 |
| ஸ்ரீநிவாசன் | ... | 5 | 00 |
| மார்க்கபந்து | ... | 5 | 00 |
| ஸ்ரீமதி லக்ஷ்மி | ... | 30 | 00 |
| ஸ்ரீமதி நாகம்மாள் | ... | 10 | 00 |
| சி. வி. ராமச்சந்திரய்யர் | ... | 5 | 00 |
| எச். எஸ். ராஜகோபால் | ... | 1 | 00 |
| கே. நாகராஜன் | ... | 1 | 00 |
| ஸ்ரீமதி என். அலமேலு | ... | 1 | 00 |
| ரங்கசாமி | ... | 2 | 00 |
| கே. எஸ். பலராமன் | ... | 2 | 00 |
| ஸ்ரீமதி ரேணுகாம்பாள் | ... | 5 | 00 |
| ஸ்ரீமதி வி. சீதாலக்ஷ்மி | ... | 10 | 00 |
| வெங்கடசுப்பிரமணியம் | ... | 5 | 00 |
| மாணிக்கமணி | ... | 1 | 00 |
| ஈசுவரன் | ... | 3 | 00 |
| ரமணி | ... | 1 | 00 |
| அன்னபூரணி | ... | 1 | 00 |
| சந்துரு | ... | 1 | 00 |
| ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி | ... | 1 | 00 |
| ஸ்ரீமதி லக்ஷ்மி ராமமூர்த்தி | ... | 1 | 00 |
| கிருஷ்ணய்யர் | ... | 1 | 00 |
| வெங்கடராமன் | ... | 1 | 00 |
| | | 334 | 01 |

வும் இந்தக் கண்காட்சி எல்லா பிரசிடெண்டுகளுக்கும் ஓர் அரிய வாய்ப்பாகும். இந்த ஜில்லாவிலுள்ள எல்லா பிரசிடெண்டுகளும் குறிப்பிட்ட நாளில் கோவையில் கூட வேண்டும். கோவையிலிருந்து சென்னைக்கு பஸ்ஸில் ஏற்றிச் செல்லப்படுவார்கள். வசதியுள்ள ஜாகை, தேனாம்பேட்டையிலேயே கண்காட்சிச் சாலையில் ஏற்படுத்தப்பட்டுள்ளது. பிரசிடெண்டுகள் சென்னையிலோ, அல்லது அருகிலுள்ள இடத்தில் ஒன்று அல்லது இரண்டு தொழிற்சாலைகளுக்குக் கூட்டிச் செல்லப்படுவார்கள். அங்கேயுள்ள தொழில் முறைகளும், இயந்திர நுட்பங்களும் அவர்களுக்கு விளக்கப்படும். சாப்பாடு, சிற்றுண்டி அவர்களுடைய சொந்தச் செலவிலேயாகும். இந்த அரிய வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ள எல்லாத் தலைவர்களும் இந்த அறிக்கையைக் கொண்டு வரும் சேவகன் வசம் தங்கள் சம்மதத்தை எழுத்து மூலமாக அறிவித்துக் கொள்ள வேண்டியது.

எந்தெந்த பிரசிடெண்டுகள் வருவதற்குச் சம்மதிக்கிறார்கள் என்கிற விவரங்களை உடனே கோவை ஜில்லா கலெக்டர் அவர்களுக்கு ரிப்போர்ட் செய்யவேண்டியிருப்பதால் இது மிக மிக அவசரம். சென்னையில் 26-1-61 தேதியில் மாலை 8 மணியளவில் பிரசிடெண்டுகள் இருக்க வேண்டும் என்பது சர்க்கார் விருப்பம்.

மேலும் பிரயாணச் செலவுக்காக நபர் ஒன்றுக்கு ரூ. 10 வீதம் அளிக்கப்படும். சென்னையில் உள்ள நாட்களுக்கு நாள் ஒன்றுக்கு ரூ. 3 வீதம் மேற்படி நான்கு நாட்களுக்குச் சம்பந்தப்பட்ட பஞ்சாயத்து போர்டின் அனுமதியின் பேரில் **பஞ்சாயத்து போர்டு பணத்திலிருந்து படிச்செலவு தரப்படும்.** பிரயாணச் செலவு ரூ. 10 சர்க்காரிலிருந்து கொடுக்கப்படும். கோவையிலிருந்து சென்னைக்குப் பஸ் புறப்படும் தேதியும் நேரமும் தங்களுக்குப் பின்னால் அறிவிக்கப்படும்.

**10—1—61** **(ஒம்) பி. சுப்பையா**

வட்டார வளர்ச்சி அதிகாரி, மெளத்துக்கடவு.

நகல் உத்தரவின்படி எல்லாப்பஞ்சாயத்துத் தலைவர்களுக்கும் அனுப்பப்பட்டுள்ளது.

**கோவை அய்யாமுத்து இதைப் பற்றி எழுதுவதாவது:**

மெளத்துக்கடவு
12—1—61

பஞ்சாயத்து போர்டு நிதியிலிருந்து தரப்படும் என்று சர்க்கார் சொல்கிறார்கள்! இதிலிருந்தே பஞ்சாயத்துக்களின் சுயேச்சை அம்பலமாகிறது.

26—1—61 குடியரசு விழாவுக்குக் கூட்டம் எவ்விதம் சேர்க்கப்படுகிறது!

அத்தினத்தில் மக்கள் அவ்விழாக்களைப் பகிஷ்கரிக்க வேண்டும்.

பஞ்சாயத்து விழா என்று முன்பு ஜில்லாக்கள்தோறும் கூட்டம் சேர்த்து லட்சக்கணக்கில் செலவழித்தார்கள்.

இப்போது மாகாணத் தலைநகரில் கூட்டுவிக்கப் பஸ்கள், படிச்செலவுகள்! இது பெரிய அக்கிரமச் செயல்!

# என்ன சேதி?

## நகரசபையின் நல்ல முடிவு

சென்னையில் தற்சமயம் நடைபெற்று வரும் அகில இந்திய வர்த்தக-தொழில் பொருட்காட்சியில் சென்னை நகரசபை கலந்துகொள்ள வேண்டியதில்லை என்று முடிவு செய்தது குறித்துப் பாராட்ட வேண்டியிருக்க, நகரசபையிலுள்ள காங்கிரஸ் அங்கத்தினர்கள் கண்டித்திருக்கின்றனர்.

சென்னை நகரசபை, பெரும் தொழில் ஏதும் நடத்தவில்லை; வர்த்தகமும் செய்யவில்லை. அதனால் இந்தப் பொருட்காட்சியில் அது கலந்து கொள்வது பொருத்தமில்லை. சமீபத்தில் பெய்த மழையின் காரணமாக, சாலைகள் படுமோசமாகிவிட்டதால், நடக்கவும் முடியாமல், வண்டியிலும் போகமுடியாமல் இருக்கின்றன. இந்தச் சாலைகளே நகரசபையின் பெருமையை எடுத்து இயம்பிக் கொண்டிருக்கும்போது, பொருட்காட்சியில் நகர சபைப் பகுதி, சென்னை மக்களுக்கு இந்த வசதி செய்து கொடுத்திருப்பதாகவும் அந்த வசதி செய்து கொடுத்திருப்பதாகவும் சொல்லிக் கொண்டால் ஊரார் சிரிக்க மாட்டார்களா?

இந்தப் பொருட்காட்சியில் கலந்து கொண்டிருந்தால் நகர சபைக்கு ரூ. 37,000 செலவாகியிருக்குமாம். அதைச் சாலைகள் செப்பனிடுவதிலாவது செலவழிக்கலாம் என்று நகரசபையில் செய்த முடிவைப் பாராட்டுகிறோம். எளிமையும் சிக்கனமும், அடக்கமுமே அணிகலன் என்று காந்தி மகான் சொல்லி வந்தார். அவர் பெயரைச் சொல்லிக் கொண்டிருக்கும் காங்கிரஸ்காரர்கள் 'ஏன் இந்த டம்பாச்சாரிச் செலவு செய்யவில்லை?' என்று கேட்பதைப் பார்க்கும்போது, காங்கிரஸ் எவ்வளவு கீழே போய் விட்டது என்பதை வருத்தத்தோடு நினைக்கவேண்டியிருக்கிறது.

## மதுரைக்கு ஒரு பல்கலைக் கழகம்

மூன்றாவது திட்ட காலத்தில் சென்னை ராஜ்யத்தில் ஒரு புதிய பல்கலைக் கழகம் ஸ்தாபிப்பதற்காக 30 லட்சம்

கர்நாடக சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான" தியாகராஜ சுவாமிகளின் 114-வது ஆராதனை உத்ஸவம் இந்த வருஷம் திருவையாற்றில் வெகு விமரிசையாக நடைபெற்றது. சங்கீத ரஸிகர்களும், சங்கீத வித்வான்களும் திருவையாற்றுக்குத் திரளாக வந்திருந்து தியாகப் பிரும்மத்துக்குத் தங்கள் அஞ்சலியைச் செலுத்தினர். ஜனவரி ஆறாந் தேதி காலையில் தியாகராஜ சுவாமிகளின் பூர்வீக இல்லத்திலிருந்து அவரது திருவுருவப் படத்தைப் பஜனையோடு ஊர்வலமாக எடுத்துச் சென்றனர். வேத கோஷத்தோடு, விசேஷ அபிஷேகங்களும், அர்ச்சனைகளும் நடைபெற்றன. அரியக்குடி ஸ்ரீ ராமானுஜ அய்யங்கார், மகாராஜபுரம் ஸ்ரீ விசுவநாதய்யர், செம்மங்குடி ஸ்ரீ சீனிவாசய்யர், ஸ்ரீ ஜி. என். பாலசுப்பிரமணியம், ஸ்ரீ கல்யாணகிருஷ்ண பாகவதர், ஆலத்தூர் சகோதரர்கள் ஆகியோரும் மற்றும் பல வித்வான்களும் ஸ்ரீ பாப்பா வெங்கட்ராமையா, ஸ்ரீ டி. என். கிருஷ்ணன், ஸ்ரீ லால்குடி ஜயராமன் வயலின் இசையோடு கோஷ்டியாகப் பஞ்சரத்தினக் கீர்த்தனை பாடியது மெய் சிலிர்க்க வைத்தது. பாலக்காடு ஸ்ரீ மணிஅய்யரும் இவ்விழாவில் கலந்துகொண்டு சிறப்பித்தார்.



ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதை எந்த இடத்தில் அமைக்கலாம் என்பதில் அபிப்பிராயபேதமே இருக்கத் தேவை இல்லை. ஏற்கனவே சென்னையிலும், அண்ணாமலை நகரிலும் இரண்டு சர்வ கலாசாலைகள் செயல்புரிந்து வருகின்றன. தென்னகத்தில் மூன்றாவது சர்வ கலாசாலைக்கு இடமுண்டு. இதற்கு எந்த விதத்திலும் தகுதி வாய்ந்த நகரம் மதுரை. சங்க காலத்திலிருந்தே கல்வியை வளர்ப்பதில் மதுரையம்பதி புகழ்பெற்றுள்ளது. இப்போதும் பல கல்வி நிலையங்கள் அங்கே செயல்புரிந்து வருகின்றன. முதல்தரமான ஒரு நூல் நிலையமும் அங்கே உள்ளது. சென்னைமாநிலத்திலே மதுரையம்பதிதான் சென்னைக்கு அடுத்ததாகப் பெரிய நகரம். நகரசபையும் தீவிரமாகவும் சுறுசுறுப்பாகவும் செயல்புரிகிறது. தொழில்வளமும் நிரம்பி, போக்குவரத்து, சுகாதார, குடியிருப்பு வசதிகள் யாவும் நல்லமுறையில் அமையப் பெற்ற நகரம். நிபுணர்கள் அடங்கிய ஒரு குழு எங்கே புதிய சர்வ கலாசாலையை அமைக்கலாம் என்பது பற்றிச் சீக்கிரத்திலேயே முடிவு செய்யவிருக்கிறது. மதுரைமாநகரை இதற்கு உகந்த இடமாக அவர்கள் தேர்ந்தெடுப்பார்கள் என்று நம்புகிறோம்.

# மகாராணி எலிஸபெத்

சிவஸ்வாமி

'பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் சூரியன் அஸ்தமிப்பதே இல்லை' என்று அடிக்கடி முன்பெல்லாம் சொல்லப்படுவது உண்டு. அந்தச் சாம்ராஜ்யம் எவ்வளவு விரிவானது என்பதை எடுத்துக் காட்டவே அவ்வாறு சொல்லப்பட்டது. பூமண்டலப் பரப்பில் ஏறக்குறைய நான்கில் ஒரு பாகம் அவர்களுடைய ஆதிக்கத்துக்கு உட்பட்டிருந்தது. உலக மக்களில் நாலில் ஒருவர் இந்தப் பரந்த சாம்ராஜ்யத்தைச் சேர்ந்தவர். அவர்கள் எல்லோரும் பலதரப்பட்டவர்கள். ஜாதியிலும், மதத்திலும், பண்பாட்டிலும், பழக்கவழக்கங்களிலும் மாறுபட்டவர்கள். வெள்ளையர்களிலிருந்து மஞ்சள், சிவப்பு, கறுப்பு மனிதர்கள் வரையிலும் கிறிஸ்துவர்கள், யூதர்கள், பௌத்தர்கள், முஸ்லீம்கள் முதல் இதர மதஸ்தர்கள் வரையிலும் இந்தப் பரந்த சாம்ராஜ்யத்தில் வசிக்கின்றனர். அவ்வாறே நாகரிக வளர்ச்சியில் முதிர்ந்து முன்னேற்றம் அடைந்துள்ள சமூகத்தினர்களிலிருந்து ஆஸ்திரேலியா கண்டத்து ஆதிவாசிப் பழங்குடிகள் வரையில் இதில் அடங்கியுள்ளார்கள். அரசியல் முன்னேற்றத்திலும் அந்தஸ்திலும் இப்படியே குடியேற்ற நாடுகள் என்றும், சுதந்திர நாடுகள் என்றும், தர்மகர்த்தா நாடுகள்என்றும்பல்வேறு ஏற்றத் தாழ்வுகள் மலிந்த பிரதேசங்கள் இந்தச் சாம்ராஜ்யத்தில் இருக்கின்றன.



பிரிட்டிஷ் அரசி எலிஸபெத் ராணியார்

சாம்ராஜ்யம் என்ற சொல் பழங்காலத்திய சொல். பழங்கால ஆட்சி முறை, ஆதிக்க அமுல், வெள்ளையர்களின் உயர்ந்த மனப்பான்மை முதலிய கருத்துக்களைத் தோற்றுவிக்கும் சொல். இப்பொழுதெல்லாம் அந்தச் சொல்லை உபயோகப்படுத்துவதில்லை. காலனி ஆட்சி முறையும் வேகமாக மறைந்து வருகிறது. முன்பு காலனியாக இருந்த நாடுகள் இப்போது சுதந்திர நாடுகளாக மாறிக் கொண்டு வருகின்றன. இந்த மாற்றத்தைக் குறிப்பதற்கும் தற்போதுள்ள மாறுபட்ட நிலைமைகளுக்கு ஏற்றபடிக்கும், ''காமன்வெல்த்'' என்ற சொல்தான் கையாளப்படுகிறது. முன்பு சாம்ராஜ்யத்தில் இருந்த நாடுகளெல்லாம் இந்தக் காமன்வெல்த்தில் இப்போதும் இடம் பெற்றிருக்கின்றன. வெவ்வேறான அரசியல் முறைகளையும் பண்பாட்டையும், நாகரிகத்தையும், ஆர்வங்களையும் கொண்ட மக்கள் சமூகத்தினர் அனைவரையும் ஒரு குடும்பமாக இணைத்து அவர்களுக்குள்ளே சகோதர மனப்பான்மையை உண்டாக்கி அவர்களுடைய முன்னேற்றத்துக்கு ஒருவரைக்கொண்டு மற்றவர்களுக்கு உதவி, ஒற்றுமையை வளர்க்கும் பொருட்டு, இந்தக் காமன்வெல்த் குடும்பம் இயங்குகிறது. வயது வந்த பிள்ளைகளும் பெண்களும் திருமணம் செய்து கொண்டு தனிக்குடித்தனம் நடத்தி வந்தாலும் குடும்ப பாசத்தினால் இணைக்கப்பட்டு ஒற்றுமையுடன் இயங்கி வரும் பழங்கால இந்துக் குடும்பத்துக்குச் சமமாக ஒரு வகையில் இந்தக் காமன்வெல்த் குடும்பத்தைச் சொல்லலாம். சில்லறை வேற்றுமைகளும், பூசல்களும், ஏற்றத் தாழ்வுகளும் இருந்தாலும் ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் என்ற ஓர் உணர்ச்சியின் பிணைப்பில் ஒற்றுமை நிலவுவது போல, இந்தக் காமன்வெல்த் குடும்பத்திலும் அதில் இடம்பெற்றுள்ள நாடுகளிடையே வேற்றுமையும் சண்டித்தனமும் சச்சரவுகளும் காணப்பட்டாலும், ஒருவித ஒற்றுமை உணர்ச்சியும் ஊடுருவிச் சென்று கொண்டிருக்கிறது என்பது கண்கூடு.

வேற்றுமையிலும் ஒற்றுமை உணர்ச்சியை வளர்த்துக் கொண்டு வருவது பிரிட்டிஷ் மக்களின் பண்பாட்டின் சிறப்பு. நிர்வாகத் திறமையும், அரசியல் சாமர்த்தியமும் உள்ளவர்கள் ஆங்கிலேயர் என்பது பிரசித்தம். ஆனால் காமன்வெல்த் உறவைத் துண்டித்துப் போகவிடாமல் பாதுகாப்பதுடன் அதை வலுப்பெறச் செய்வதற்கு அரசியல் சாமர்த்தியம் மட்டும் போதாது. மனிதத் தன்மையும் சகோதர உணர்ச்சியும்



குழந்தைப் பிராயத்தில்

ஊடுருவிச் செல்லும் உயர் பண்பாடும் வேண்டும். இந்தப் பண்பாடும் ஒரு தலைமுறையிலோ, ஒரு நூற்றாண்டு காலத்திலோ உண்டாவது அன்று. தலைமுறை தலைமுறையாக உறவாடல் செய்வதன் மூலம் வளர்ந்து, பிரிட்டிஷ் சமூகத்தினரிடையே பரவி, அவர்களுடைய நடவடிக்கைகளில் கலந்து நிற்க வேண்டும். அத்தகைய பண்பாட்டைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாகவும் அப்பண்பாட்டுக்கு உறைவிடமாகவும் விளங்குபவர் இந்தியாவுக்கு இப்போது விஜயம் செய்யும் பிரிட்டிஷ் மகாராணி எலிஸபெத் அம்மையார். பிரிட்டிஷ் மகாராணி என்னும் முறையில் பிரிட்டிஷ் காமன்வெல்த் என்ற பெரிய குடும்பத்துக்குத் தலைமைப் பதவியும் வகிக்கிறார். இந்தக் குடும்பத்தில் இரண்டு நூற்றாண்டுகள் வாழ்ந்து பதின்மூன்று ஆண்டுகளுக்கு முன் தனிக் குடித்தனம் செய்யப் புறப்பட்ட பின்னரும், பிரிட்டிஷ் மக்களின் உயர் பண்பாட்டிலும் மனிதத் தன்மையிலும், நன்னடத்தையிலும் மனத்தைப் பறி கொடுத்து, காமன்வெல்த் குடும்பத்தில் தொடர்ந்து இணைந்திருக்க வேண்டும் என்று செயலாற்றி வரும் நமது பாரத நாட்டுக்கு எலிஸபெத் மகாராணியார் விஜயம் செய்கிறார். அவருக்கு நல்வரவு கூறுகிறது இந்திய நாடு.

சுதந்திர இந்தியாவுக்குச் சமீப ஆண்டுகளில் விஜயம் செய்துள்ள அயல் நாட்டுத் தலைவர்களின் வரிசை நீண்டது. ஆனால் பிரிட்டிஷ் மகாராணி விஜயம் செய்வது இதுதான் முதல் தடவை. அவருக்கும் இது புது அனுபவமாகவே இருக்கும். தம்மை நேரடியாகத் தங்களது மகாராணி என்று கருதாத நாடு இந்தியா. எனினும் காமன்வெல்த் குடும்பத்தின் தலைவி என்ற உயர் பதவிக்கேற்ற கௌரவத்துடனேயே அவருக்கு மரியாதைகளும் உபசாரங்களும் நடக்கும். சுதந்திரமடைந்த மக்கள் சுயேச்சையாக மனமுவந்து காட்டும் அன்பின் தன்மையை அவர் காண வாய்ப்புகள் இருக்கும். ஏற்கனவே நமது அன்பில் சொக்கிப் போனவர் பிரிட்டிஷ் அரச குடும்பத்தைச் சேர்ந்த மவுண்ட்பேட்டன் பிரபு. இதை மகாராணியார் இப்போது நேராகவே பார்த்து அறிந்து கொள்ள முடியும்.



சின்னஞ்சிறு வயதில்

அதைக் காணுவதில்தான் அவருக்கும் ஆசை அதிகம். பல நாடுகளுக்கு மகாராணி விஜயம் செய்யும் போதெல்லாம், இதர விஷயங்களைக் கண்டு களிப்பதுடன் மக்களின் நலன் எப்படி மேம்பட்டிருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளுவதில் அவருக்கு ஆர்வம் அதிகம். சிறுவர்கள், பலவீனர்கள், அங்கஹீனர்கள், செயலிழந்தவர்கள், கஷ்டப்படுபவர்கள் — இத்தகையோர்களின் நலனில் அக்கறையுள்ளவர். தாம் விஜயம் செய்யும் நாடுகளில் முக்கியமாக வைத்தியசாலைகளையும் குழந்தை இல்லங்களையும், விளையாட்டு மைதானங்களையும், மருத்துவ விடுதிகளையும், மாதர் சேவா சங்கங்களையும், சமூகப் பொது நலச் சங்கங்களையும் பார்வையிடுவதில் அவருக்கு விருப்பு மிக உண்டு. ஆப்பிரிக்காவிலுள்ள நைஜீரியாவுக்கு விஜயம் செய்தபோது, அங்குள்ள ஒரு குஷ்டரோகி விடுதிக்குச் சென்றார். இதற்கு அவர் இரண்டு காரணங்கள் கூறினார். நோயாளிகளும் தன்னை நேரில் காண வேண்டும் என்ற ஆசை ஒரு காரணம்; குஷ்டம் என்பது ஒரு காலத்தில் எண்ணப்பட்டு வந்தது போல அருவருக்கத்தக்க ஒரு நோய் அல்ல, அது ஒட்டுவாரொட்டி எனப் பரவும் நோயும் அல்ல என்பதை வெளியுலகத்துக்கு உணர்த்த வேண்டும் என்ற ஆசை மற்றொரு காரணம்.



பத்தொன்பது வயதில்

மேலும், சிறுவர்களையும் சிறுமிகளையும் காண எவ்வளவு வாய்ப்பிருக்குமோ அவ்வளவையும் அவர் பூரணமாகப் பயன்படுத்திக் கொள்ளத் தவறுவதில்லை. தூரத்திலிருந்து காண வேண்டிய காட்சிப் பொருளாகத் தம்மைக் கருதாமல் நெருங்கித் தனிமையில் சிறுவர்கள் தம்மைக் காண வேண்டுமென்பதற்காக, அவர்கள் கூட்டத்தில் திறந்த மோட்டாரில் பவனி செல்லுவதில் அவருக்கு ஆனந்தம். நியூ ஸவுத் வேல்ஸ் (ஆஸ்திரேலியாவில்) ஸிட்னி நகரத்தில் ஒருசமயம் ஒரே நாளில் 140,000 சிறுவர் சிறுமிகள் அடங்கிய கூட்டத்தில் நீண்ட நேரம் குலவி மகிழ்ந்தார்.

மக்கள் பொது வாழ்க்கையிலும், அவர்களுடைய குடும்ப வாழ்விலும், அவர்களுடைய கைத்திறன், கலைத் திறன் முதலிய வற்றிலும் மகாராணிக்கு அக்கறை அதிகம். கிராம மக்கள் மத்தியில் சில நேரம் கழிப்பதிலும் அவர் அடையும் மகிழ்ச்சி

யைப் போல, இதர சூழ்நிலைகளில் அவர் அடைவதில்லை. அவர்களுடைய பண்ணைகளையும் கால்நடைகளையும் காண்பதில் அவருக்கு ஆசை. மகாராணி என்ற அந்தஸ்திலும் பல சமயங்களில் பொருட்காட்சிகள் மூலம், அந்தந்த நாட்டு மக்களின் கைத்திறன்களைப் பற்றியும், கலைத்திறன்களைப் பற்றியும் அறிந்து கொள்ளவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு விடுகிறது. எனினும் சமயம் வாய்க்கும் போதெல்லாம், சாதாரண மக்களை அவரவர்கள் வசிக்கும் இடங்களில் காணவே அவர் விரும்புகிறார்.

இத்தகைய மனிதத்தன்மை, ஆடம்பரத்துக்காகப் பிரயாணம் செய்யும் போதும், வெளிநாடுகளுக்கு விஜயம் செய்யும் போதும் மேற்கொள்ளப்படும் பகட்டு அல்ல. பிரிட்டிஷ் நாட்டு அரசி என்றாலும், சாதாரண மக்களுக்குள்ள மனவெழுச்சிகள் நிரம்பியவர். மற்றவர்களைப் போலவே தனது குடும்பத்தில் பற்று மிகுதியாக உண்டு. ராஜாங்க அலுவல்களிடமிருந்து ஓய்வு கிடைக்கவேண்டுமானால் அவருடைய குடும்பத்துக்குள் அவருடைய தனி இல்லத்தில் தான் அமைதியை நாடுகிறார். மற்றப் பெற்றோர்களைப் போலவே தங்கள் குழந்தைகளைக் கூட்டிச் சென்று அவர்களுடன் விளையாடி, அவர்களுக்கு மகிழ்வளித்துத் தங்கள் பொழுது போக்குகளில் அவர்களுக்கும் ஆர்வம் ஊட்டுவதில் மகாராணி இன்புறுகிறார். முடிந்தால் அவர்களுக்குப் பாடங்கள் கூடச் சொல்லித் தருகிறார்.



ஸ்காட்லாந்திலுள்ள பால்மோரா அரண்மனையில் எலிஸபெத் ராணியார் தம் கணவர் பிலிப். இளவரசர் சார்லஸ். இளவரசி ஆன் ஆகிய தம் குடும்பத்தோடு விடுமுறையை மகிழ்ச்சியோடு கழிப்பதைக் காணலாம்.

காலையில் வெகு சீக்கிரமாகவே எழுந்துவிடும் பழக்கம் உடையவர். காலைச் சிற்றுண்டியைத் தம் கணவருடன் தமது தனி விடுதியில் தான் சாதாரணமாக உண்பார். பள்ளிக்கூட விடுமுறை நாட்களில் இளவரசர் சார்லஸும், இளவரசி ஆனும் காலை உணவின் போது கூட இருப்பார்கள். தினசரி விருந்துகளுக்குச் சாப்பாடு பட்டியல்கூட மகாராணிக்குக் காட்டப்பட்டு அவருடைய அங்கீகாரம் பெறவேண்டும். பல தடவைகளில் சாப்பாடு வகைகளில் மாற்றங்கள் செய்து விடுவாராம். விருந்துகளில் விருந்தினர்கள் அமர வேண்டிய வரிசை, தமது அரண்மனைக் கணக்குகள், சிப்பந்திகள் நியமிப்பு முதலிய சில்லறை விஷயங்களைக் கூட அவசியம் நேரும் போதெல்லாம் கவனிக்கத் தவறுவதில்லை. ஓய்வு கிடைக்கும்போதெல்லாம் தம் குழந்தைகளுடன் தோட்டத்தில் உலாவச் சென்று விடுவார். அங்கேயே ஒரு மரத்தடியில் உணவு உண்டு பசும் புல்வெளியில் வெகு தூரம் நடந்து செல்வது அவருக்கு வழக்கம். ஓடையோரங்களிலும், மர நிழல்களிலும், புல்வெளியிலும் தாமே சுலபமாகச் சிற்றுண்டி தயாரித்துத் தம் குழந்தைகளுடன் உண்பதில் அவருக்கு அதிக மகிழ்ச்சி. பியானோ வாசிப்பதில் திறமையுள்ளவர் மகா ராணியார். தம்முடைய அன்னையாரைப் போலவே தாமும் நடனத்தில் தேர்ச்சியுள்ளவர். மிகப் பிரசித்தி பெற்ற ஸ்காட்லாந்து நடன வகையில் இவர் அபாரத் திறமை வாய்ந்தவர். சமயம் கிடைக்கும் போதெல்லாம் பியானோ வாசித்து அமைதி அடைவார்.

குதிரைப் பந்தயத்தில் மகாராணிக்குப் பிரியம் அதிகம். செல்வச் சீமான்கள் களிப்புறும் உல்லாசம், உபரிப் பணத்தை வாரி இறைக்க உகந்த வழி, என்று சாதாரணமாகக் கருதப்படும் இந்தப் பொழுதுபோக்கை லாபகரமாகக் கூடச் செய்துவிடக் கூடிய சாமர்த்தியம் உள்ளவர் மகாராணியார். 1954ம் ஆண்டில் அவருடைய பந்தயக் குதிரைகளின் வெற்றி மூலம் கிடைத்த தொகை மாத்திரம் 40,000 பவுன்கள். தாமே குதிரை சவாரி செய்வதில் மிக்க விருப்பம் உள்ளவர் மகாராணியார். முக்கியமான அணிவகுப்புகளைப் பார்வையிடும்போதும், பகட்டுக்கான சந்தர்ப்பங்களின் போதும் குதிரைமீது பக்கவாட்டமாகவே அமர்ந்து செல்வார். தமது பொழுது போக்குக்காகவோ, வேட்டைக்காகவோ செல்லும்போது ஆண்களைப்போலவே கம்பீரமாக அமர்ந்து செல்லுவார்.

மகாராணியாரின் கணவர் பிலிப்ஸ் கோமகனார் ஏற்கனவே இந்தியாவுக்கு விஜயம்செய்துள்ளார். தொழில் வளர்ச்சியிலும் பொறியியல் முன்னேற்றத்திலும் அவருக்கு அளவு கடந்த அக்கறை. பாரத மக்களின் அன்பையும் நல்லெண்ணத்தையும் பூரணமாகப் பெற்றுள்ள மகாராணியாரின் படத்தையும் அவருடைய கணவர் பிலிப்ஸ் கோமகனாரின் படத்தையும் இவ்வார இதழ் அட்டையில் வெளியிடுவதில் மகிழ்ச்சியடைகிறோம்.

நம்மாழ்வார் பாடிய

# பக்தி நெறி

**ராஜாஜி**

54

**கொண்டல் வண்ணா! குடக்கூத்தா!**
**வினையேன் கண்ணா! கண்ணா! என்**
**அண்ட வாணா! என்று, என்னை**
**ஆளக் கூப்பிட்டு அழைத்தக்கால்,**
**விண் - தன்மேல் - தான், மண்மேல் - தான்,**
**விரி நீர்க் கடல்-தான், மற்றுத்தான்,**
**தொண்டனேன் உன் கழல் காண,**
**ஒருநாள் வந்து, தோன்றாயே.**

*மேக வண்ணத்தானே! குடக்கூத்தாடிய கண்ணா! தீவினையேனுடைய நாள், கண்ணா! கண்ணா! பரமபதத்தில் நாதனாயிருக்கிறவனே! என்றெல்லாம் நான் உன்னை என்னை ஆள்வதற்காக அழைக்கிறேன். ஆகாயத்திலோ, பூமியிலோ, கடலிலோ அந்தராத்மாவிலோ எங்கேயாகிலும் உன் திருவடிகள் காண வந்து ஒருநாள் தரிசனம் தர வேண்டுமே என்கிறார்.*

*'விண்மேல்', 'மண்மேல்', 'கடல்மேல்', 'மற்றுத்தான்' என்றது முறையே திருமால் பரம பதத்தில் இருக்கும் இருப்பு, அவதார சொரூபங்கள், பாற்கடல் அனந்தசயனம், அந்தராத்மாவாக உள்ளத்தில் வீற்றிருக்கும் சொரூபம் இவற்றைக் குறிக்கின்றன.*

*எப்படியாவது எந்த நிலையிலாவது எனக்கு நன்றாகக் கோசரமாகும்படி அருள்வாய் என்கிறார்.*

• • •

*இந்தப் பூவுலகில் நான் வாழ்வது என்னத்துக்கு? உடனே உன் தரிசனம் இங்கே எனக்குத் தா அல்லது என்னை உன் பாதத்துக்கு இப்போதே சேர்த்துக்கொள். எனக்கு இந்த உயிர் வாழ்க்கை வேண்டாம் என்கிறார்.*

**வந்து தோன்றாய்; அன்றேல், உன்**
**வையம் தாய மலர் அடிக்கீழ்**
**முந்தி வந்து யான் நிற்ப,**
**முகப்பே கூவிப் பணி கொள்ளாய் —**
**செந்தண் கமலக் கண், கை, கால்**
**சிவந்தவாய் ஓர் கரு நாயிறு**
**அந்தம் இல்லாக் கதிர் பரப்பி**
**அலர்ந்தது ஒக்கும் அம்மானே!**

*உன் வையம் தாய மலரடி — திரிவிக்கிரமாவதாரத்தில் உலகளந்த உன் பாதங்கள்.*

*மலரடிக்கீழ் முந்தி வந்து யான் நிற்ப முகப்பே கூவிப் பணிகொள்ளாய் — அதாவது எனக்கு இப்போதே மரணம் தந்து உன் திருவடிமுன் நிற்கச் செய்.*

*இவ்வாறெல்லாம் ஆழ்வார் "மாயன் வடிவழகைக் காணாத" துக்கத்தைப் பாடி அழுது அலறுகிறார்.*

*கருநாயிறு — சூரியனைப்போல் ஜொலிக்கும் உருவம், ஆனால் திருமாலின் நிறம் கறுப்பு.*

• • •

*திருக்கடித்தானத்து க்ஷேத்ரத்தை வைத்துப் பாடுகிறார். முதலாழ்வார் 'உளன் கண்டாய்' என்று பாடியதை இவரும் பாடுகிறார். தாமும் அனுபவித்து நமக்கும் உபதேசிக்கிறார்.*

**திருக்கடித்தானமும் என்னுடைச்**
**சிந்தையும்**
**ஒருக்கடுத்து, உள்ளே உறையும்**
**பிரான் கண்டீர் —**
**செருக் கடுத்து அன்று திகைத்த**
**அரக்கரை,**
**உருக்கெட, வாளி பொழிந்த**
**ஒருவனே,**

*ஒருக்கடுத்து — ஒருங்க அடுத்து. திருக்கடித்திலும் என் மனத்திலும் ஒக்கக் காதல் கொண்டு என் உள்ளே வசிக்கிறான். உள்ளே உறையும் பிரான் — மனத்திலே நித்திய வாசம் பண்ணுகிறான். யார்? என்பதற்குப் பதில் சொல்லுகிறார் — அரக்கரை அம்பு மாரி பெய்து அழித்த ராமசந்திரன். இனி எனக்கு என்ன பயம் என்கிறார்.*

*அரக்கர்களைப் போல் காமக் குரோதாதிகள் நமக்கு விரோதிகள். அவர்*

களை உள்ளே நித்தியவாசம் பண்ணும் என் ராமசந்திரன் துவம்சம் செய்வான்.

செருக்கு அடுத்து திகைத்து அரக்கரை—போர் செய்து இம்சிக்கவே ஆசைப்பட்டுக் கர்வம் கொண்டு மதியிழந்த அரக்கர்களை, உருக்கெட—சின்னாபின்னம் செய்து கொளுத்த அம்புமாரி பொழிந்த ராமன்.

திருக்கடித்தான மூர்த்தியும் அரக்கர்களை அழித்த ராமசந்திரனும் என் உள்ளத்தில் நித்திய வாசம் செய்யும் பிரானும் ஒருவனே.

* * *

ஒருவர் இருவர், ஓர்மூவர், என
நின்று,
உருவு கரந்து, உள்ளும் தோறும்
தித்திப்பான் -
திரு அமர் மார்வன், திருக்கடித்
தானத்தை
மருவி உறைகின்ற மாயப்பிரானே.

திரிமூர்த்திகளாகவும் தானேயாகியும் மற்ற இருமூர்த்திகளாகியும் இப்படித் தன் வடிவத்தைப் பலவாறாகச் செய்துகொண்டு நிற்பவன்.



தன் வடிவத்தை மறைத்து உள்ளத்தில் புகுந்து நினைக்கும்தோறும் மகிழ்ச்சி தருபவன், மார்பில் திருமகள் அமர்ந்திருக்கும் பிரான், திருக்கடித்தானத்துக் கோயிலில் வந்து இருப்பவன், மாயப் பிரான்.

* * *

மாயப்பிரான், என வல்வினை
மாய்ந்து அற,
நேசத்தினால் நெஞ்சம் – நாடு குடி
கொண்டான் –
தேசத்து அமரர் திருக்கடித்தானத்தை
வாசப் பொழில் மன்னு கோயில்
கொண்டானே.

திருமால் எனக்காக என்னுடைய தீவினைகள் வாசனையோடு அழியும்படி அன்போடு என் நெஞ்சத்தில் அது தனக்கு ஒரு திருநாடாகக் கொண்டு திருநாட்டை விட்டு வந்து வாசம் செய்கிறான். பரமபதத்தைப் போல் என் உள்ளத்தைத் தன் குடியிருப்பாக அமைத்துக் கொண்டான்.

தேசத்து அமரர் — பூசுரர்கள், பக்தர்கள், அவர்களுடைய ஊராகிய திருக்கடித்தானம்; வாசப் பொழில் மன்னு - வாசனை வீசும் சோலைகள் இருக்கும் (ஊர்)

திருக்கடித்தானத்தை நித்திய வாசத்துக்குரிய இடமாகக் கருதிக் கோயிலாகக் கொண்டவன். கோயில் கொண்டானாகிய மாயப்பிரான் என் வினை மாய்ந்து அற (என்) நெஞ்ச(த்தில்)ம் குடிகொண்டான் என்று அமைத்துப் படிக்க வேண்டியது.

* * *

அற்புதன் நாராயணன், அரி,
வாமனன்
நிற்பது – மேவி இருப்பது என்
நெஞ்சகம் –
நல்புகழ் வேதியர் நான்மறை
நின்று அதிர்
கற்பகச் சோலைத் திருக்கடித்தானமே.

எம்பெருமான் நிற்பது திருக்கடித்தானம். மேவியிருப்பது என் நெஞ்சகம். அல்லது இரண்டும் சேர்த்து நிற்பதும் மேவியிருப்பதும் என் நெஞ்சம் என்றும் கொள்ளலாம்.

# காண்ட்வா ஹிங்கோலி இணைப்பு



இந்திய ரயில்வே என்றால் சாதாரணமாகக் கட்டண உயர்வு, பிரயாண நெருக்கடி, வண்டிகள் "லேட்டா"க வருவது. இப்படிப்பட்ட விஷயங்கள்தான் மக்கள் கவனத்துக்கு வரும். மக்களின் கவனத்துக்கு வராத ஆனால் மிகவும் முக்கியமான காரியங்களும் இந்திய ரயில்வே இலாகாவில் அவ்வப்போது நடைபெறுகின்றன. புதுப் பாதை வேய்தல், புதிய பாலம் அமைத்தல், புதுத் தொடர்பு உண்டாக்குதல் போன்ற வேலைகள் சில சமயங்களில் பிரமிப்பை உண்டாக்கும் வகையில் கூட அங்கே நடைபெறுகின்றன. சமீபத்தில் கட்டி முடித்துத் திறந்து வைக்கப்பட்ட மத்திய ரயில்வேப் பகுதியைச் சேர்ந்த காண்ட்வா—ஹிங்கோலி ரயில் பாதை இத்தகைய முக்கிய சம்பவங்களில் ஒன்று.

நமது ரயில்கள், சின்ன ரயில் என்றும் பெரிய ரயில் என்றும் இரண்டு பிரிவுகளாக இருப்பது நமக்குத் தெரியும். பெரிய ரயில் என்ற 'பிராட் கேஜ்' மூலம் நாட்டின் ஒரு கோடியிலிருந்து மறு கோடி வரையில் மனிதர்களும் செல்லலாம். சாமான்களையும் அனுப்பி விட முடியும். ஆனால் சின்ன ரயில் என்ற மீட்டர்கேஜ் மூலம் அவ்வாறு செய்ய முடியாது. 10372 மைல் நீளமுள்ள வடபகுதிச் சின்ன ரயிலுக்கும் 4933 மைல் நீளமுள்ள தென் பகுதிச் சின்ன ரயிலுக்குமிடையே 187·95 மைல் நீளத்துக்கு ஓர் இணைப்புப் பாதை இல்லாத குறையினால், பிரயாணிகளாகட்டும், சாமான்களாகட்டும், சின்ன ரயிலிலிருந்து பெரிய ரயிலுக்கு மாறி மாறித்தான் போக வேண்டும். பிரயாணிகளுக்கு இதனால் அதிக தொந்தரவுகள் இல்லாவிட்டாலும், சாமான்கள் அனுப்புவதில் கஷ்டங்கள் மிக உண்டு. செலவு அதிகம். சேதம் அதிகம். எல்லாவற்றையும்விடக் காலதாமதம் அதிகம்.

15000 மைல் நீளமுள்ள ஒரு ரயில் அமைப்பில், கேவலம் 188 மைல் நீளமுள்ள அவசியமான ஓர் இணைப்பை ஏற்படுத்த ஏன் இதுகாறும் முற்படவில்லை என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா? இதன் சரித்திரத்தைக் கேட்டால் இதிலுள்ள கஷ்டம் தெரியும். 1882ல் இதைப் பற்றி உத்தேசிக்கப்பட்டது. 1899 வரையில் உத்தேசத்திலேயே உறங்கிக் கிடந்தது. 1900 பூர்வாங்க ஆராய்ச்சி நடைபெற்றது. 1903ல் சேனைத் தலைவர் கிச்னெர் பிரபு, மக்கள் நலனுக்கில்லாவிட்டாலும், ராணுவ முக்கியத்துவம் பற்றியாவது இத்திட்டத்தை நிறைவேற்றும்படி வற்புறுத்தினார். 1911-ம் வருஷத்தில் இந்தத் திட்டம் உயிர் பெற்றது. ஆனால் இந்த இணைப்பைச் சின்ன ரயிலாகப் போடுவதா, பெரிய ரயிலாகப் போடுவதா என்ற விவாதத்தில் மறுபடியும் அது மடிந்து விட்டது. 1942ல் இரண்டாவது யுத்த காலத்தில் புது உற்சாகத்தில் மீண்டும் ஆராய்ச்சி நடந்தது. கடைசியில் 1954ல் இதை நிறைவேற்றி வைப்பது என்று முடிவு செய்யப்பட்டது. 1960 டிசம்பரில் முற்றிலும் முடிவு பெற்றது. எதற்கும் வேளை வரவேண்டாமா!



ஸான் கணவாய்

இவ்வளவு தாமதங்களுக்கும் காரணம் இந்தப் பகுதியில் புது ரயில் பாதை போடுவதில் உள்ள கஷ்டங்கள்தான். வேலை நடந்தபோதுதான் இவை எத்தகையன என்பதும் தெரிந்தது. ஆறு மைல் நீளத்துக்கு ஸாத்பூரா மலைத் தொடரில் மேல்காட் பகுதியில் பல வாராவதிகளைக் கட்ட வேண்டியிருந்தது. இரண்டு சுரங்கங்கள் வெட்ட வேண்டியிருந்தது.

மலைப் பாறைகளை வெடி வைத்துத் தகர்த்துப் பாறை உடைக்க வேண்டியிருந்தது. ஓரிடத்தில் ரயில் பாதை ஒரு முழுவட்டமாகச் சுற்றிக் கொண்டு செல்லும்படி போடவேண்டியிருந்தது. தபதி நதியின் மேல் ஒரு பெரிய பாலம் அமைக்க வேண்டியிருந்தது. அதே



டி. ஆர். கன்னு
ஜெனரல்மானேஜர்

போல் பூர்ணாநதிமீது மற்றொரு பாலம் போட வேண்டியிருந்தது. ஒவ்வொரு வேலையும் பொறியியல் நிபுணர்கள் கண்டு பிரமிக்கத்தக்கதாகும்.

இவையெல்லாம் இப்போது பூர்த்தி செய்யப்பட்டுவிட்டன. அஸ்ஸாம் ரயில் பாதை, போர் மலைச்சரங்கப் பாதை, எர்ணாகுளம் — கொல்லம் ரயில் இணைப்பு—முதலிய பெரிய சாதனைகளுக்கு ஒப்பானது இந்தக் காண்ட்வா — ஹிங்கோலி ரயில் இணைப்பு. இதன் விளைவாக, இந்தியாவின் வடகிழக்குக் கோடியிலுள்ள டின்ஸுகியாவும், வட கோடியிலுள்ள பட்டிண்டாவும், தென் கோடியிலுள்ள திருவனந்தபுரம் தூத்துக்குடியும் சின்ன ரயில் பாதை மூலம் இணைக்கப்பட்டிருக்கின்றன. இடையில் எவ்விதத்திலும் ஏற்றி இறக்காமல் சாமான்களைத் தென் கோடியிலிருந்து வடகோடிக்கு அனுப்பி வைக்க முடியும். இதைத்தவிர விதர்ப்பா பிரதேசத்தையும் மார்த்வாடா பிரதேசத்தையும் இணைப்பதுடன், மத்தியப் பிரதேசத்தையும் ஆந்திரப் பிரதேசத்தையும் கூட நெருங்கி உறவாடும்படி இந்தக் காண்ட்வா—ஹிங்கோலி ரயில் இணைப்புச் செய்துவிட்டது.

'மேல்காட்'களில் அடாது மழை பெய்த போதிலும், போக்குவரத்துக்கு அடிக்கடி தடைகள் ஏற்பட்ட போதிலும், கோடையில் தண்ணீர் கஷ்டம் ஏற்பட்டபோதிலும், உடலுக்கு ஒத்துக் கொள்ளாத நிலைமையாயிருந்த போதிலும் அவற்றை யெல்லாம் பொருட்படுத்தாமல் இத்திட்டத்தில் முழு மூச்சுடன் கருமமே கண்ணாக ஈடுபட்ட இன்ஜினியர்கள் குறித்த காலத்துக்குள் வேலைகளைமுடித்தது அரியசாதனையாகும்.



வி. எஸ். ஸாத்தே
பிரதம இன்ஜினியர்

இந்த அற்புதமான இணைப்புப் பாதையை அமைப்பதில் பெரும்பங்கு கொண்டவர்களுள் மத்திய ரயில்வேயைச் சேர்ந்த பிரதம என்ஜினீயர் திரு வி. எஸ். ஸாத்தே முக்கியமானவர். இந்த ரயில் பகுதியின் பொது நிர்வாகஸ்தர் திரு டி. ஆர். கன்னு தம்முடைய பதவிக் காலத்தில் இந்தச் சாதனை கனவிலிருந்து நினைவாக மாறியதைக் குறித்துப் பெருமை கொள்ளலாம். ஸாத்பூரா மலைத் தொடரின் கம்பீரத்தையும் தபதி நதியின் மனோகரமான தோற்றங்களையும் காண்பதற்காகவேனும் இப்புதிய இணைப்புப் பாதை வழியே செல்லலாம்.

—''பிஷி'



சென்னை ஆள்வார்ப்பேட்டை எத்திராஜ கல்யாண மண்டபத்தில் குமாரி அபயாவும் அவரது சகோதரிகளும் 'ரங்கோலி' கலையான வர்ணக் கோலத்தில் கணபதி, சுப்பிரமணியர், சீனிவாசர், லக்ஷ்மி, சரஸ்வதி ஆகியவர்களது உருவங்களை உருவாக்கிக் காட்டியிருந்தனர். இவர்கள் மின்சார இன்ஜினியர் திரு என். வி. ராஜன் அவர்களின் புதல்விகள். வர்ணப் பொடிகளினால் தெய்வங்களின் மெய்யுருவைக் காட்டிய இந்தக் காட்சிக்கு டாக்டர் வே. ராகவன் தலைமை வகித்துச் சிறப்பித்தார். சென்னை மக்கள் திரளாக வந்து ரசித்தனர்.



# காஷியர் குழந்தைவேலு

அன்று ஏதோ பண்டிகை நாள். சென்னைக் கைத்தொழில் பொருட்காட்சிப் பேட்டைக்குள் ஓர் இடத்தில் நிலைத்து நிற்க விடாமல் கூட்டம் நெரிந்தது. சுற்றிச் சுற்றிக் கால்கள் சென்றன. எங்கேயாவது உட்கார இடம் கிடைக்குமா என்று கண்களை ஓட்டிக் கொண்டு நின்றேன். பக்கத்தில் பழகிய குரல் கேட்டது. திரும்பிப் பார்த்தேன்.

ஆரோகணம் அண்டு கம்பெனியின் கணக்கர் ஆராவமுதன். அவர் தம்முடனிருந்தவரிடம், ''அதோ, ஸார் அந்தப் பலூன் கடைக்கு முன்னால் குழந்தைக்குப் பலூன் வாங்கிக் கொடுக்கிறானே, அவன்தான்'' என்றார்.

அவர் கை காட்டிய திசையில் பார்த்தேன். குழந்தைவேலு அவன் மனைவி காந்தி, நான்கு குழந்தைகள், அந்தப் பைத்தியம் புடைசூழ நின்று பலூன் வாங்கிக் கொண்டிருந்தான். இரண்டு குழந்தைகளுக்கு நான்கும், ஆறும் வயதிருக்கும். மற்ற இருவருக்கும் பன்னிரண்டும், பதினான்கும் இருக்கும்.

அவன் ஒரு பலூனைச் சின்னக் குழந்தையின் கையில் கொடுக்கப் போனான். பைத்தியம் அதை லபக்கென்று பறித்துக் கொண்டு சிரித்தது. அவன் இன்னொன்று வாங்கிக் குழந்தை கையில் கொடுத்து, எல்லோரையும் நடத்திக் கொண்டு அங்கிருந்து நகர்ந்தான்.

மறுபடியும் ஆராவமுதன் குரல் கேட்டது. அவர் ''மந்தையை ஓட்டிக் கொண்டு புறப்பட்டு விட்டான் ஸார்! அவனுக்கு இவ்வளவு அழகான மனைவி வாய்த்திருக்கிறாள். அவன் அந்தப் பைத்தியக்காரியைக் கட்டிக் கொண்டு அழுகிறான். பெரிய குழந்தைகள் இரண்டும் பைத்தியத்தினுடையவை. யாரோ மோட்டார் டிரைவரின் மனைவியாம். விதவை. அவன் மனைவியும் அதற்கு உடன்பட்டு இருப்பதுதான் இதில் வேடிக்கை. மாதம் இருபதினாயிரம் ரூபாய் ரொக்கம் புரளும் ஒரு கம்பெனியில் ஓர் அணுக்கூட ஜாமீன் இல்லாமல் எங்கள் முதலாளி அவனைக் காஷியராக வைத்திருப்பது அதைவிட விந்தை!'' என்றார்.

அங்கேயே அவருக்குப் பதில் சொல்லி அந்த வேடிக்கையையும், விந்தையையும் விளக்கி விட வேண்டுமென்ற வேகம் மூண்டது என்னுள்ளே. குழந்தைவேலுவின் மனைவியும் ஆரோகணம் கம்பெனியின் முதலாளி மானேஜர் மாணிக்கவாசகமும் அவனிடம் வைத்திருக்கும் நம்பிக்கைக்குக் காரணம் அதிகமானால் பத்துப் பேர்களுக்குத்தான் தெரிந்திருக்கும்.

ஏறக் குறைய பன்னிரண்டு ஆண்டுகள் ஆகின்றன அது நடந்து.

அப்போது ஆரோகணம் அண்டு கம்பெனி நாலைந்து இறக்குமதிச் சரக்குகளுக்கு மொத்த ஏஜன்ஸி பிடித்திருந்தது. அவற்றில் புதிதாக வந்த குழந்தை உணவுச் சரக்கும் ஒன்று. குழந்தைவேலு அப்போது கம்பெனியின் விற்பனைப் பகுதியில் இருந்தான்.

செகந்திராபாத்தில் விஜயராகவ ரெட்டி என்பவர் அந்தக் குழந்தை உணவுக்கு நைஜாம் சமஸ்தானத்துக்கு 'ஸப் ஏஜண்டு' உரிமை பெற்றிருந்தார். அவருக்கு பம்பாய்த் துறைமுகத்திலிருந்தே சரக்கு அனுப்பப்பட்டது. அந்த வகைக்கு அவர் அனுப்பிய ஐயாயிரம் ரூபாய் செக் மாறாமல் திரும்பி வந்து விட்டது. இரண்டு கடிதங்கள் எழுதியும் அவரிடமிருந்து சரியான பதில் இல்லை. மாணிக்கவாசகம் நேரில் போய்ப் பார்த்துப் பணத்தை வசூலிக்கக் குழந்தைவேலுவை அனுப்பி வைத்தார்.

அவன் அங்கே போய்ச் சேர்ந்த நேரத்தில் தான் ஜெனரல் ராஜேந்திர சிங் தலைமையில் இந்தியப் படைகள் அந்த சமஸ்தானத்தில் போலீஸ் நடவடிக்கை தொடங்கின. குழந்தைவேலு அந்தக் கெடுபிடியில் சிக்கிக் கொண்டான். அவனருகில் ஒரு கைவீச்சு குண்டு வெடித்து அதன் துண்டு ஒன்று அவன் இடது காலில் பாய்ந்து விட்டது. அவன் செகந்திராபாத் ஆஸ்பத்திரியில் பத்து நாட்கள் இருந்து விட்டுச் சென்னைக்குத் திரும்பினான்.

அவன் செக்குக்குரிய பணத்தை ரொக்கமாக வசூலித்து விட்டான். காயம் பட்ட பொழுதிலும் அவன் பணத்தைக் காப்பாற்றி வைத்திருந்து ஆஸ்பத்திரியிலிருந்து கம்பெனிக்கு அனுப்பி வைத்தான். அங்கிருந்து திரும்பி வந்த பிறகு, பதினைந்து நாட்கள் ரஜா வாங்கிக் கொண்டு போய் விட்டுப் பிறகுதான் வேலையில் வந்து சேர்ந்தான்.

மூன்று மாதங்களுக்குப் பிறகு ஒரு நாள் மாணிக்கவாசகம் கம்பெனிக் காரியாலயத்தில் தமது அறையில் தபால்களைப் பார்த்துக்

பி.எஸ்.ராமையா

கொண்டிருந்தபோது ஏவல் பையன் வந்து, "சார்! பட்டுக்கோட்டை சடையப்பபிள்ளையாம். வந்திருக்கிறார். உங்களை அவசரமாகப் பார்க்க வேண்டும் என்கிறார்" என்றான்.

சடையப்பபிள்ளை மாணிக்கவாசகத்தின் தந்தை காயாரோகணம் பிள்ளைக்கு அடிநாட்களில் சமயத்தில் கைகொடுத்து உதவியவர். மாணிக்கவாசகம் தபால்களையெல்லாம் ஒரு புறம் ஒதுக்கி வைத்துவிட்டு அவரை உள்ளே அழைத்து வர உத்தரவிட்டார்.

அவர் செய்த மரியாதைகளை ஏற்றுக்கொண்டு சடை



யப்பபிள்ளை அவர் எதிரில் உட்கார்ந்து, "உங்கள் கம்பெனியில் இருக்கிறானே குழந்தைவேலு, அவனைப் பற்றியறிய வந்திருக்கிறேன்" என்றார்.

மாணிக்க வாசகம், "அவனுக்கு என்ன?" என்று கேட்டார்.

சடையப்பபிள்ளை, "அவன் எனக்குச் சற்று எட்டிய உறவு. என் இளைய மகள் காந்தியை அவனுக்குக் கட்டி வைக்கப் பேசிப் போன ஐப்பசியில் நாள்கூடக் குறித்தாகி விட்டது. நீங்கள் திடீரென்று அவனை ஹைதராபாத்துக்கு அனுப்பி விட்டீர்கள்" என்றார்.

"ஆமாம். போனதுதான் என்று நான் கருதிவிட்ட ஐயாயிரம் ரூபாயை அவன் வசூலித்துக் கொண்டு வந்து விட்டான். அப்போது அவன் காலில் அடிபட்டு விட்டதுதான் துர்ப்பாக்கியம்."

"அவன் உங்களுக்கு நம்பிக்கையாக நடந்து விட்டான். ஆனால் எங்களிடம் அப்படி நடந்து கொள்ளவில்லை."

"ஏன்? உங்கள் மகளைக் கட்டிக் கொள்ள முடியாதென்று சொல்லி விட்டானா?"

"அவன் கட்டிக் கொள்ளுகிறேன் என்று சொல்கிறான். அந்தப் பெண்ணும் அவனைத்தான் கட்டிக் கொள்ளுவேன் என்று வீம்பு பிடிக்கிறது.



அகாடமியில் பாடிய இளம் வித்வான்கள்-1

1. வி. ஆர். கிருஷ்ணனின் கச்சேரி. டி என். மணி பிடில்; ஷண்முகானந்தம் மிருதங்கம். 2. கே. வி. சிங்கராச்சாரியின் வேணுகானம், ராமசந்திரய்யா பிடில், ராமமூர்த்தி மிருதங்கம். 3. மணி கிருஷ்ணசுவாமி பாட்டு, சாவித்திரி ஸத்யமூர்த்தி வயலின், எஸ். வனிதா மிருதங்கம். 4. கண்டதேவி அளகிரிசாமியின் பிடிலினுடனும் உபேந்திரனின் மிருதங்கத் துடனும் டி. ஆர். சுப்ரமணியம் பாடினார். 5. என். ஆர். ஸ்ரீநிவாசன் பாட்டு, ஹரிஹரன் வயலின்; மாஸ்டர் பாலசந்திரன் மிருதங்கம்.

ஆனால் இரண்டு குழந்தைகள் பெற்ற ஒருத்தியை அவன் சேர்த்து வைத்துக் கொண்டிருக்கும்போது, எப்படி மனமறிந்து அவனுக்கு மகளைக் கொடுக்க முடியும்?''

மாணிக்கவாசகம் திடுக்கிட்டு நிமிர்ந்து உட்கார்ந்தார். ''ஒருத்தியைச் சேர்த்து வைத்துக் கொண்டிருக்கிறானா? எங்கே இந்த ஊரிலேயேவா வைத்திருக்கிறான்?'' என்று வியப்புடன் கேட்டார்.

சடையப்பபிள்ளை, ''ஹைதராபாத்திலிருந்து திரும்பி அவன் ஊருக்கு வந்தான். என்னிடம், 'ஹைதராபாத்தில் என் பழைய நண்பன் ஒருவனைச் சந்தித்தேன். அங்கே நடந்த ராணுவ நடவடிக்கைக் கெடுபிடியில் ஒரு குண்டு வெடித்து அவன் இறந்து விட்டான். அவன் மனைவிக்கும் இரண்டு குழந்தைகளுக்கும் வேறு திக்கே இல்லை. நான் அவர்களை ஆதரிக்கப் போகிறேன்' என்றான். 'ஆதரிக்கிறது என்றால் என்னப்பா?' என்று கேட்டேன், 'அந்தக் குடும்பத்தைக் காப்பாற்றிக் குழந்தைகளை வளர்க்கப் போகிறேன்' என்றான். 'யாரோ எங்கேயோ தற்செயலாகச் செத்தால் அதற்கு நீயா பிணை? வேண்டுமானால் உன்னாலான பண உதவியைச் செய். ஒரு பெண் பிள்ளையைக் கொண்டு வந்து வைத்துக் காப்பாற்றுவது என்பதெல்லாம் என்ன பேச்சு?' என்று கேட்டேன்.

''அவன் 'அந்தக் குடும்பத்தை நான் காப்பாற்றித்தான் தீர வேண்டும். நான் அதைப் பற்றிக் காந்திமதியிடம் பேசி விட்டேன். அவள் அவர்களையும் உடன் வைத்து வாழத் தயாராக இருக்கிறாள். வேண்டுமானால் நீங்களே கூப்பிட்டுக் கேளுங்கள்' என்றான்.

''நான், 'அவளை என்ன கேட்கிறது? உண்மையைச் சொல்லு. அந்தப் பெண்ணுக்கும் உனக்கும் என்ன உறவு?' என்று கேட்டேன். அவன் 'அந்த மாதிரி கேள்வி யெல்லாம் என்னை யாரும் கேட்க வேண்டியதில்லை' என்று சொல்லி விட்டுப் போய் விட்டான்.

''இவ்வளவு கரடும் முரடுமாகப் பேசி விட்டுப் போகிறவனைக் கட்டிக் கொண்டு தான் மகள் என்ன சுகப்பட்டுவிடப் போகிறாள் என்று நான் விட்டு விட்டேன். என் குடும்பத்தில் மற்றவர்களெல்லாம் என் கட்சி. அந்தப் பெண் மட்டும் பாருங்கள், மூன்று மாதமாகிறது; சரியாகச் சாப்பிடுவதில்லை; எந் நேரமும் அழுகை. 'கட்டிக் கொண்டால் அவரைத்தான் கட்டிக் கொள்வேன். இல்லையென்றால் எனக்குக் கலியாணமே வேண்டாம்' என்கிறாள். இன்னொரு நல்ல இடத்திலிருந்து வந்து பெண் கேட்டார்கள். அந்த மாதிரிப் பேச்சு நடக்கிறது என்று தெரிந்ததிலிருந்து அந்தப் பெண் வீட்டில் செய்யும் அட்டகாசத்துக்கு அளவே யில்லை. அதுதான் உங்களிடம் சொல்லி அவனிடம் பேசிப் பார்க்கும்படி கேட்கலாமென்று வந்தேன்'' என்று முடித்தார்.

மாணிக்கவாசகம், ''குழந்தைவேலு இந்த மாதிரி ஒரு சிக்கலில் அகப்பட்டுக் கொண்டிருப்பானென்று என்னால் நம்பவே முடியவில்லை. எங்கள் கம்பெனி வேலையைப் பொறுத்த வரையில் அவன்மேல் அப்பழுக்குச் சொல்ல முடியாது. நான் அவனைக் கூப்பிட்

டுப் பேசுகிறேன். இது அவன் சொந்த விஷயம். ஊம்...?'' என்று சொல்லிக் கொண்டே வந்தவர் சிறிது தயங்கிப் பிறகு, ''இன்று மாலைக்குள் அவனிடம் பேசி விடுகிறேன்'' என்று சொல்லி மணியை அடித்தார்.

அன்று மாலை சரியாக ஐந்து மணிக்குக் குழந்தைவேலு மானேஜர் அறைக்குள் நுழைந்தான். தபாலில் சேர வேண்டிய கடிதங்களில் கையெழுத்துப் போட்டுக் கொண்டிருந்த மாணிக்கவாசகம் அவனிடம், ''உட்கார், குழந்தைவேலு! இரண்டு நிமிஷம்'' என்று சொல்லி விட்டுத் தமது வேலையில் முனைந்தார்.

கடிதங்களை அனுப்பி விட்டு அவர் நிமிர்ந்து அவனைப் பார்த்தார். அவன் முகத் தோற்றத்தில் முறை தவறி நடப்பவனின் கூச்சம் குளறல் எதுவுமில்லை. அவன் நிமிர்ந்து அவர் கண்களுடன் கண் கலந்து பார்த்தான்.

மாணிக்கவாசகம், ''பட்டுக்கோட்டை சடையப்பபிள்ளை இங்கு வந்திருந்தார். உன்னைப் பற்றிச் சொன்னார்'' என்றார்.

அந்தப் பெயரைக் கேட்டவுடன் அவன் முகம் கன்டிபதை அவர் கண்டார். அவன் பதிலே சொல்லவில்லை. அவரே பேசட்டும் என்பது போல் நின்றான்.

மாணிக்கவாசகம், ''உட்காரேன்'' என்றார். அவன் ஒரு நாற்காலியில் உட்கார்ந்தான். பிறகு அவர், ''அவர் மகள் காந்தியை வேறு இடத்தில் கட்டிக் கொடுக்கப் பேசினார்களாம். அவள் வேறு யாரையும் கட்டிக் கொள்ள மாட்டேன் என்று சொல்லி அழுது கொண்டேயிருக்கிறாளாம்'' என்றார்.

குழந்தைவேலு அதற்கும் ஒன்றும் பதில் சொல்லவில்லை.

மாணிக்கவாசகம், ''நீ இங்கே குடித்தனம் போட்டிருப்பதாக அவர் சொன்னார். யாரோ இரண்டு குழந்தைகள் பெற்ற ஒருத்தியைக் கொண்டு வந்து வைத்திருக்கிறாயாம்'' என்று கூறினார்.

குழந்தைவேலு, ''ஆமாம். கொண்டு வந்து வைத்துக் காப்பாற்றுகிறேன்'' என்றான்.

அவன் குரலைக் கேட்டு மாணிக்கவாசகத்தின் புருவங்கள் மேலே ஏறின. அவன் காப்பாற்றுகிறேன் என்று அழுத்திச் சொன்ன தன் பொருளைப் புரிந்து கொள்ள முயலுவது போலச் சிறிது தயங்கி விட்டு அவர், ''ஏன், எதற்காக அந்தப் பொறுப்பைச் சுமக்கிறாய் என்பதை உனக்குப் பெண் கொடுக்கப் போகிறவரிடம் விளக்கிச் சொல்லியிருக்கலாமே?'' என்றார்.

குழந்தைவேலு ஒரு நொடி தயங்கினான். பிறகு, ''கேட்டு விட்டு நான் செய்வது சரியென்று பட்டால் அவருக்கும் விளக்கிச் சொல்லுங்கள். என்னால் காந்தியின் வாழ்க்கை வீணாகிவிடக் கூடாது'' என்று தொடங்கி அதைப் பற்றி விரிவாகச் சொன்னான்.

அவன் செகந்திராபாத்துக்குப் போய் விசாரித்தபோது விஜயராகவ ரெட்டி குடும்பத்துடன் சதாசிவப் பேட்டைக்குப் போய் விட்டதாக அறிந்தான். அப்போது அங்கே ரஜாக்கர் குண்டர்களின் ஆர்ப்பாட்டம்



**அகாடமியில் பாடிய இளம் வித்வான்கள் 2**

6. குன்னக்குடி வெங்கடராமஅய்யர் வேணு கானம், கிருஷ்ணமூர்த்தி வயலின், பி. சீனிவாசன் மிருதங்கம். 7. எஸ். கிருஷ்ணமூர்த்தி இன்னிசை, ராஜம் வயலின், பழனி வி. குமார் மிருதங்கம், நாராயணஸ்வாமி கடம். 8. டி. ஏ. ஜெயராமன் பாட்டு, கிருஷ்ணமூர்த்தி வயலின், மாஸ்டர் ஈசுவரன் மிருதங்கம். 9. ஷேக் சின்ன மௌலா சாயிப்பு-ஷேக்ஹாஸன் சாயிப் நாதஸ்வரம், ஏமனி ராகவைய்யா தவில். 10. சேலம் ஜயலட்சுமி பாட்டு, என். பாலம் பிடில், எம். ஜீ. மோகன்ராம் மிருதங்கம்.



அகாடமியில் பாடிய இளம் வித்வான்கள்-3

1. ரமணமூர்த்தி பாட்டு. 2. கோவிந்தராஜ் பாட்டு, நாராயணஸ்வாமி பிடில், கோபால கிருஷ்ணன் மிருதங்கம். 3. கோதண்டராமன் பாட்டு, பாஸ்கரன் பிடில், சுவாமிநாதன் மிருதங்கம். 4. ராதா சகோதரிகள் பாட்டு, நடராஜன் பிடில், கிருஷ்ணமூர்த்தி மிருதங்கம். 5. ராமநாதன் பாட்டு, ராமமூர்த்தி பிடில், ராஜகோபாலன் மிருதங்கம்.

பிருந்திருந்தது. விஜயராகவ ரெட்டிக்கு மணமாகாத தங்கையொருத்தி யிருக்கிறாள். இரண்டு காலிகள் அவளிடம் வம்பு செய்யத் தொடங்கினார்கள்.

ரெட்டி போலீஸில் போய் முறையிட்டார். பயனில்லை. காலிகளால் குடும்பத்தின் மானமே போய்விடும் என்ற நிலைமை வந்து விட்டது. ரெட்டியார் யாரையோ பிடித்து நிஜாமுக்கே விண்ணப்பம் அனுப்பினார். அதி லும் பலனில்லை. அதனால் குடும்பத்துடன் சதாசிவப்பேட்டைக்குப் போய்விட்டார்.

குழந்தைவேலு சதாசிவப் பேட்டைக்குப் போனான். காலிகள் அந்தப் பெண்ணைத் துரத்திக் கொண்டு அங்கேயும் வந்து விட்ட தால் ரெட்டி குடும்பத்துடன் விக்ராபாத்துக் குப் போய்விட்டார் என்றார்கள்.

அங்கே போய்த் தேடியபோது, விஜயராகவ ரெட்டி மொஹினாபாத்தில் இருப்பதாக அறிந் தான். மொஹினாபாத்தில் செல்வாக்குடைய நவாப் ஹுசேன் ஜங் என்பவர் விஜயராகவ ரெட்டியின் தந்தையின் நண்பர். அவர் ரெட்டி குடும்பத்துக்கு அடைக்கலம் அளித்து ஆதரித்தார். காலிகள் அங்கும் போய்ச் செம்மையாக உதைபட்டு ஓடி விட்டார்கள்.

குழந்தைவேலு மொஹினாபாத்துக்குப்போய் விஜயராகவ ரெட்டியைப் பிடித்தான். அவர் தமது வியாபாரத்தையே மூடிச் சரக்கையெல் லாம் இன்னொருவரிடம் ஒப்படைத்து விட்ட தாகவும், ஆனாலும் பணத்தை ரொக்கமாகக் கொடுத்து விடுவதாகவும், ஒரு நாள் தங்கும் படியும் சொன்னார்.

அங்கே குழந்தைவேலு வெள்ளியங்கிரி யைச் சந்தித்தான். அவனுக்கு உடுமலைப் பேட்டை பக்கத்தில் ஒரு கிராமம். போரின் போது ராணுவத்தில் டிரைவராக இருந்த வன். போர் முடிந்த பிறகு அவன் சென்னை யில் ஒரு டாக்ஸி ஓட்டிக் கொண்டிருந்தான். அப்போதுதான் குழந்தைவேலுவுக்கு அவனு டன் அறிமுகம் நேர்ந்தது.

வெறும் அறிமுகம்தான். ஆயினும் அவ் வளவு தொலைவில் உருதுவும், தெலுங்கும் மட்டும் பேசிய மக்களிடையே தமிழ்பேசும் இருவரும் சந்தித்தவுடன் நெடுங்காலத்து நண்பர்களாக முகம் மலர்ந்து அளவளாவி னார்கள். வெள்ளியங்கிரி நவாப் ஹுசேன் ஜங்கின் மைத்துனரிடம் கார் ஓட்டியாக இருந்தான்.

குழந்தைவேலு அவனிடம், "இந்தக் கார் ஓட்டும் வேலை உனக்குச் சென்னைப் பக்கத்தி லேயே கிடைக்கவில்லையா? எதற்காக மொழி தெரியாத ஊரில் இவ்வளவு தொலை வில் வந்து வேலை பிடித்தாய்?" என்று கேட்டான்.

வெள்ளியங்கிரி, "இவ்வளவு சம்பளம் அங்கே கிடைக்காது. இங்கே என் சாப்பாடு செலவெல்லாம் கழிந்து மாதம் அறுபது ரூபாய் மிச்சம் பிடிக்கிறேன்" என்றான்.

அவன் தன் கதையை யெல்லாம் குழந்தை வேலுவிடம் சொன்னான். அவனுக்கு மண மாகி இரண்டு குழந்தைகள் இருந்தன. அவன் மனைவி அங்கச்சிக்கு மணமாகுமுன் பேய் பிடித்திருந்தது. என்னென்னவோ மந்திரம் செய்து விரட்டினார்கள். இருந்தும் அவன் மனம் இன்னும் தெளிவடையவில்லை. அவனு

டைய மூத்த குழந்தைக்கு இரண்டு வயது. இரண்டாவது பிறந்து ஆறு மாதங்கள் தாம் ஆகியிருந்தன.

குழந்தைவேலுவும் அவனுக்குத் தன் கதையைச் சொன்னான். "எனக்குப் பெண் பேசிக் கலியாணத்துக்கு நாள் கூடக் குறித்து விட்டார்கள். இந்த விஜயராகவ ரெட்டியைத் துரத்திக் கொண்டு வரும்படி நேர்ந்து விட்டது" என்றான்.

பெரியவர்கள் பேசி உறுதி செய்யும் முன்பே அவனும் காந்தியும் சந்தித்துக் காதலித்தார்கள். காந்தி அவனுக்காக இரண்டு மாதமல்ல, இரு நூறு ஆண்டுகள் வேண்டுமானாலும் காத்திருப்பாள் என்று பெருமையோடு சொன்னான்.

அவன் மொயினாபாத்துக்குப் போய்ச் சேர்ந்த அன்று பகலில் ரேடியோவில் இந்தியப் படைகள் நைஜாம் சமஸ்தானத்தில் போலீஸ் நடவடிக்கை தொடங்கி விட்டதாக அறிவிக்கப்பட்டது.

விஜயராகவ ரெட்டி சொன்னபடி மறுநாள் பணம் கொடுக்கவில்லை. அதற்கு அடுத்த நாள்தான் கொடுத்தார்.

இந்தியப் படைகள் மிக மிக வேகமாக ஹைதராபாத்தை வளைத்துக் கொண்டு முன்னேறி வருவதாகச் செய்திகள் வந்தன. ஹைதராபாத் நகரிலிருந்து ரஜாக்கர்கள் சிதறி ஓடி அங்கங்கே பதுங்குவதாகவும், நிஜாம் படைகளும், ரஜாக்கர்களும் இந்தியப் படைகளை எதிர்த்துக் கடுமையாகப் போரிடுவதாகவும் மாறுபட்ட செய்திகளும் வதந்திகளும் பரவிக் கொண்டிருந்தன.

மொயினாபாத்திலிருந்து ரயிலடிக்குப் பதினைந்து மைல். நாட்டிலிருந்த கலவர நிலையில் பணத்துடன் ரயிலுக்குப் போய்ச் சேருவது எப்படி என்ற கவலை குழந்தைவேலுவை வளைத்துக் கொண்டது.

வெள்ளியங்கிரி அவனைக் காரிலேயே விக்ராபாத்தில் கொண்டு போய்ச் சேர்க்க முன் வந்தான். அதற்கு அவனுடைய எஜமானரிடம் அனுமதி பெற்று விட்டதாகவும் சொன்னான். இருவரும் காரில் கிளம்பினார்கள்.

கார் மொயினாபாத்திலிருந்து ஏழு மைல் தூரத்திலிருந்த ஒரு பெரிய கிராமத்தின் எல்லையை எட்டிக் கொண்டிருந்தது. எதிரில் சாலை வழியாகவும், பக்கங்களில் நிலபுலன்களின் வழியாகவும் இந்தியப் படையாட்கள் துப்பாக்கிகளை நீட்டிக் கொண்டு ஓடி வருவதைக் கண்டு வெள்ளியங்கிரி காரைச் சாலையின் ஓர் ஓரத்தில் நிறுத்தினான். அவன் காரிலிருந்து இறங்கிக் குழந்தைவேலுவையும் இறங்கச் சொன்னான்

கார் நின்ற இடத்துக்கு நேர் எதிரில் சாலையின் எதிர்ப்புறத்தில் ஒரு பெரிய பழைய வீடு இருந்தது. இரண்டு பெரிய மாடிகளுள்ளது. அதன் வாயில்கள், ஜன்னல்களெல்லாம் அடைத்து மூடப்பட்டிருந்தன.

படைவீரர்கள் அந்தக் கட்டடத்துக்கு இருபது கஜ தூரத்தில் வந்து விட்டார்கள். திடீரென்று அதன் மாடியில் ஒரு ஜன்னல் கதவு திறக்கப்பட்டது. ஒரு கை வெளியே நீண்டு எதையோ வீசியது தெரிந்தது.

அடுத்த நொடி குழந்தைவேலுவுக்கு எதிரில் பத்தடி தூரத்தில் ஒரு குண்டுவந்து விழுந்தது.



**அகாடமியில் பாடிய இளம் வித்வான்கள்-4**

7. வைதேகி பாட்டு, கோமளவல்லி சீனிவாசன் பிடில், கனகாம்புஜம் மிருதங்கம். 8. ராஜி சகோதரிகள் பாட்டு, கமலா சர்மா வயலின், ஜெயலட்சுமி மிருதங்கம். 9. பசுபதி பாட்டு, தக்ஷிணாமூர்த்தி வயலின், ராகவன் மிருதங்கம் 10. பத்மா பாட்டு, ரங்கம்மாள் பிடில், நாராயணன் மிருதங்கம். 11. கண்ணன் பாட்டு, சுந்தரம் பிடில், ராம்மோகன் ராவ் மிருதங்கம்.

வெள்ளியங்கிரி, ''கிரனேட் வெடி'' என்று கூவிக் குழந்தைவேலு கையைப் பற்றி இழுத்து, ''ஓடி விடு ! ஓடு!'' என்று சொல்லி விட்டு முன்னால் பாய்ந்தான். அதே சமயம் ஓடி வந்த படையாட்கள் அப்படி அப்படியே தரையோடு தரையாக விழுந்ததையும் குழந்தைவேலு கண்டான்.

என்ன நடந்தது, எப்படி என்பது அவன் மனத்தில் பதியக்கூட நேரமில்லை. வெள்ளியங்கிரி ஒரே தாவில் அந்தக் குண்டின் மேல் போய் விழுந்து அதைத் தன் உடலால் மூடினான். காதையடைக்கும் வெடிச் சத்தம் கேட்டது. குழந்தைவேலுவின் இடது கணுக் காலில் ஒரு குண்டு வந்து பாய்ந்தது. அவன் அலறிக்கொண்டு காரின் அருகில் சாய்ந்தான்.

படையாட்கள் எழுந்து காரின் பின்னாலும், அருகிலிருந்த மரங்களின் மறைவிலும் போய் நின்று அந்த வீட்டை நோக்கிச் சுட்டார்கள்.

''நான் தரையில் ஊர்ந்து ஊர்ந்து வெள்ளியங்கிரி கிடந்த இடத்துக்கு நகர்ந்தேன்'' என்று தொடங்கினான் குழந்தைவேலு.

''அந்தக் கோரக் காட்சியை இப்போது நினைத்தாலும் என் குடல் நடுங்குகிறது, ஸார்! வெள்ளியங்கிரியின் இடுப்புப் பகுதி அடிபோன மண் சட்டியைப் போலத் திறந்து கிடந்தது. ரத்தம் பீச்சி அடித்து அடங்கி மெதுவாக வந்துகொண்டிருந்தது.

''அவன் உயிரோடிருப்பானென்ற நம்பிக்கையில்லை. இருந்தும் நான் அருகில் போய், 'வெள்ளியங்கிரி' என்றேன். அவன் கண்கள் ஒரு தடவை இமைத்தன. இன்னும் உயிர் இருக்கிறது என்று அருகில் நகர்ந்தேன்.

''அவன் உதடுகள் அசைந்தன. ஆம்! அவன் பேசினான். அவன் குரலில் காற்று மட்டும்தானிருந்தது. ஆனால் அது வேலின் முன் வேகத்துடன் என் செவிகளில் பாய்ந்தது. 'போய் அந்தப் பெண்ணைக் கட்டிக்க. உனக்காகக் காத்திருப்பா' என்ற சொற்கள் தெளிவாகக் கேட்டன. அதைச் சொல்லுவதற்காகவே அவன் உயிரைப் பிடித்துக் கொண்டிருந்திருக்கிறான். அவன் தலை சாய்ந்தது.

''மேலும் பதினைந்து நிமிஷங்களில் படை வீரர்கள் அந்த வீட்டுக்குள் பதுங்கியிருந்த இருபது குண்டர்களை வெளியே நடத்தி வந்தார்கள். ஒரு ஸ்டெச்சரில் என்னைத் தூக்கிப் போட்டு லாரியில் ஏற்றிக் கொண்டு போனார்கள். போகும் வழியிலேயே அதிலிருந்த ஒருவர் என் காலில் கட்டுப்போட்டு ரத்தம் வராமல் தடுத்தார்.

''என்னை ஒரு ராணுவ அதிகாரியிடம் கொண்டு போனார்கள். நான் ஏன், எப்படி அந்த நேரத்தில் அந்த இடத்தில் இருக்க நேர்ந்தது என்பதை அவர் கேட்டார்.

''அந்த அதிகாரி சொன்ன பிறகுதான் வெள்ளியங்கிரி எவ்வளவு துணிச்சலாக, எவ்வளவு பெரிய தியாகம் செய்து என் உயிரையும், நமது படை வீரர்கள் உயிரையும் காப்பாற்றி விட்டான் என்பது எனக்கு விளங்கியது. அவர் 'அந்த டிரைவர் ராணுவத்தில் இருந்தவனா?' என்று கேட்டார். நான் 'ஆம்' என்றவுடன் அவர், 'வேறு யாருக்கும் கையெறிக் குண்டைப் பற்றி அவ்வளவு தெரிந்திருக்காது. தெரிந்திருந்தாலும் தன் உடலையே போட்டு அதை மூடி மற்றவர்களைக் காக்கும் யோசனை உதித்திருக்காது' என்றார்.

''அவர்தான் என்னைச் செகந்திராபாத் ஆஸ்பத்திரிக்கு அனுப்பி வைத்தார். ஆஸ்பத்திரியிலிருந்து நான் மொயினுபாத்துக்குத் தந்தியடித்தேன். அதற்குள் நமது படைகள் கலகக்காரர்களை ஒடுக்கி விட்டன. விஜயராகவ ரெட்டியே ஆஸ்பத்திரிக்கு வந்தார்.

''அவர் வழியாக வெள்ளியங்கிரியின் முதலாளிக்குத் தகவல் அனுப்பினேன். அவன் ஊர் முகவரியையும் தெரிந்து கொண்டேன்.

''நான் சென்னைக்கு வந்து ரஜா வாங்கிக் கொண்டு அவன் ஊருக்குப் போனேன். அவனுடைய முதலாளி அவனுடைய மரணத்தைப் பற்றி அவன் குடும்பத்துக்குக் கடிதம் எழுதியிருந்தார். அதைப் படிக்கக் கேட்டவுடன் அவன் மனைவி, 'ஆ'வென்று அலறிக் கையால் தலையில் அடித்துக் கொண்டதுதானாம். அந்த அதிர்ச்சியில் அவள் மனம் நிலை தடுமாறி விட்டது.

''அவளையும் அவன் குழந்தைகளையும் நேரில் பார்த்த போது என் நெஞ்சில் நிகழ்ந்ததை எப்படிச் சொல்லிக் காட்டுவதென்றே எனக்குத் தெரியவில்லை.

''அந்த ராணுவ அதிகாரி அவனைப் பற்றி எழுதினாரா, சர்க்காரிலிருந்து அந்தக் குடும்பத்துக்கு ஏதாவது உதவி கிடைக்குமா

என்பது எனக்குத் தெரியாது. ஆனால் அந்தக் குடும்பத்தைக் காப்பாற்றுவது என்பொறுப்பு. புனிதமான கடமை என்று நம்புகிறேன். அவன் மனைவிக்குப் பைத்தியம். குழந்தைகள் இரண்டும் மூன்று வயதுக்குட்பட்டவை" என்று சொல்லி முடித்தான்.

மாணிக்கவாசகத்துக்குப் பேசத் துணிவில்லை. உணர்ச்சிப் பெருக்கில் குரல் நடுங்கி விடுமோ என்ற அச்சம் அவருக்கு. ஒரு நிமிஷத்துக்குப் பிறகு அவர், "மற்றவர்களுக்கும் இவ்வளவு விவரமாகச் சொன்னால் புரியாமலிராது" என்றார்.

குழந்தைவேலு துன்பச் சிரிப்புச் சிரித்தான். "எனக்கு நம்பிக்கையில்லை. நீங்கள் வேண்டுமானால் சொல்லிப் பாருங்கள்" என்றான்.

மாணிக்கவாசகம் சடையப்ப பிள்ளைக்கு அதைப் புரியவைத்தார். அவரே முன் நின்று காந்தி குழந்தைவேலுவின் திருமணத்தையும் நடத்தி வைத்தார்.

மூன்று ஆண்டுகளுக்கு முன் ரொட்டிக் கடைகளுக்குக் கோதுமை மாவு விநியோகிக்கும் வியாபாரம் தொடங்கினார். ஒரு பெரிய மில்லுடன் குத்தகை ஒப்பந்தமும் செய்து கொண்டார். அந்த வியாபாரத்தில் மாதம் இருபதினாயிரம் ரூபாய்வரையில் ரொக்கம் புரளும். அதற்குக் குழந்தைவேலுதான் காஷியர்.

வெள்ளியங்கிரியின் குடும்பம்தான் அந்தப் பதவிக்கு அவன் கட்டியிருக்கும் பிணைத் தொகையாகும்.


மிக அழகிய...
அடர்ந்த நீண்ட ஒளியுள்ள கூந்தல்!
பிரதிதினமும் கால்கேட் பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில் தடவி வந்தால், கூந்தலானது அடர்த்தியாகவும், நீளமாகவும் வளருவதுடன் இளமையின் ஒளியுடனும், அற்புத ஜ்வலிப்புடன் விளங்குவதைக் கண்டு நீங்கள் பரவசமடைவீர்கள். அது உங்கள் கூந்தலின் இயற்கை அழகை எடுத்துக்காட்டி எல்லோரையும் பிரமிக்கச்செய்யும்.
மகிழ்ச்சியூட்டும் நறுமணம்—
உங்கள் குடும்பம்
முழுவதும் விரும்புவது!
COLGATE
HAIR OIL
கால்கேட்
பெர்பியூம்டு
காஸ்டர்
ஹேர் ஆயில்
எக்கானமி சைஸை வாங்கி பணத்தை மிச்சப்படுத்துங்கள்!


C
A
Q
ஸ்பென்ஸர் அளிக்கும் சேவை
சீதளம், ஜலதோஷம், தலை வலி
ஜுரம் முதலியவைகளுக்கு
C.A.Q
REGD. TRADE MARK
கேள்வியும் சந்தேகமும் வேண்டாம்
திரவ மருந்தாகவும், கேப்ஸூலாகவும் எல்லா
மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்
ஸி. ஏ. க்யூ. ஒன்றே.
அதை தயாரிப்பவர்
ஸ்பென்ஸரே
ஸ்பென்ஸர் & கம்பெனி லிமிடெட்
மதராஸ் : : பம்பாய் : : கல்கத்தா : டில்லி மற்றும் கிளைகள்

# அக்கரைச் சீமையில் ஆறு மாதங்கள்

சோமு

## 8. சமுதாய வாழ்க்கை!

இந்தக் கட்டுரைத்தொடரைப் படித்து வரும் அன்பர்களில் இருவர் திருச்சியிலிருந்தும் இராஜபாளையத்திலிருந்தும் ஒரு முக்கியமான சந்தேகத்தை எழுதிக் கேட்டிருக்கிறார்கள். ஆங்கிலேயர்கள் பிறரிடம் பேசுவதற்கு மீனம் மேஷம் பார்ப்பார்கள் என்று கேள்விப்படுகிறோமே, அப்படியானால் பிறருக்கு ஒத்தாசை செய்வதில் அவர்களுக்கு இத்தனை அக்கறை இருக்கிறதா?—என்று இந்த இரண்டு அன்பர்களும் கேட்டிருக்கிறார்கள்.

லண்டனுக்குப் போய் வந்த என்னுடைய நண்பர் ஒருவர் தமக்கு நேர்ந்த ஓர் அனுபவத்தை அடிக்கடி எடுத்துச் சொல்வதுண்டு. ஒரு சமயம் அவர் லண்டனிலிருந்து ஸ்காட்லாந்துக்குப் போய்க் கொண்டிருந்தாராம். அவர் ஏறியிருந்த ரயில் வண்டியில் அவரும் ஒரே ஓர் ஆங்கிலேயரும் மட்டும்தானாம்! ஊர் போய்ச் சேருகிற வரையில் ஆசாமி உதட்டை அசைக்கவில்லையாம்! சிகரெட்டை மட்டும் ஊதிக்கொண்டே யிருந்தாராம்! இதைச் சொல்லிவிட்டு ஆங்கிலேயர்கள் கொஞ்சம் 'இறாப்பு' உள்ளவர்கள் என்று அவர் கூறுவார்!

மேல்நோக்காக ஆங்கிலேயர்களைப் பார்க்கும்போது அவருடைய சில பழக்க வழக்கங்கள் இப்படிப்பட்ட ஓர் அபிப்பிராயத்தையே உண்டாக்கும்.

அறிமுகம் செய்துவைத்தாலொழியச் சாதாரணமாக ஓர் ஆங்கிலேயர் தாமாக வலிய வந்து பேச்சுக் கொடுப்பதில்லை. அறிமுகம் செய்துவைத்த பிறகும்கூட அனாவசியமாக நம்முடைய சொந்தச் சமாசாரங்களை அவர்கள் நோண்டுவதில்லை! ரயில் வண்டியில் பிரயாணம் செய்து கொண்டிருக்கும் போது, வினைகெட்டு வந்து நம்மிடம் பேச்சுக் கொடுப்பது, நம்மிடம் சம்பந்தம் செய்ய வருகிறவரைப் போல் நம்முடைய கொடிவழி முழுவதையும் விசாரிப்பது, நமக்கு என்ன சம்பளம், கிம்பளம் ஏதாவது உண்டா போன்றெல்லாம் கேள்விகள் கேட்பது ஆகிய பழக்கம் ஆங்கிலேயர்களிடம் கிடையாது. தம்முடைய உதவி தேவை என்று நிச்சயமாகத் தெரிந்தாலன்றி ஓர் ஆங்கிலேயர் மற்றவர்கள் விஷயத்தில் குறுக்கிடமாட்டார். தாங்கள் பிறர் காரியங்களில் பிரவேசிக்காதது போலவே, பிறரும் தங்கள் காரியங்களில் தலையிடுவதை அவர்கள் விரும்புவதில்லை!

கலகலப்பாக எதிலும் புகுந்து அடிக்கிற மனிதர்களுக்கு ஆங்கிலேயர்களின் இந்தக் குணம் பிடிப்பதில்லை. அருவருப்பாகக் கூட இருக்கும். ஆனால் அவர்களுடன் நன்கு பழகிப் பார்த்தால் இது எவ்வளவு நல்ல பழக்கம் என்பது புலனாகும்.

தங்கள் சௌகரியத்தைக் கவனித்துக் கொள்வது போலவே பிறருடைய சௌகரியத்தையும் கவனித்துக் கொள்ளும் விதத்தில் ஆங்கிலேயர்களுடைய சமூக வாழ்க்கையும் அதற்கான வசதிகளும் யோசனையோடு நன்றாக அமைக்கப்பட்டுள்ளன.

தொலை தூரத்திலிருந்து லண்டன் செல்கிற நமக்கு மிகவும் முக்கியமாகத் தேவைப்படுகிற வசதி தபால் வசதியாகும். இந்தத் தபால் போக்குவரத்து முறையையும் தபால் நிலையங்களின் பணிமுறைகளையும் எல்லாருக்கும் பெருதவியாக இருக்கும் விதத்தில் மிகவும் ஆலோசனையோடு திட்டம் செய்திருக்கிறார்கள்.

இந்தியா கிளப்புக்கு அருகிலேயுள்ள தபால் நிலையம் இரவு ஏழுமணி வரையில் திறந்திருக்கும். இன்னும் கொஞ்ச தூரம் நடந்து சென்றால் ''மூடாத தபால் ஆபீஸ்'' ஒன்று இருக்கிறது. இரவு பகல் இருபத்துநாலு மணி நேரமும் இந்த அஞ்சல் அலுவலகம் 'அஞ்சேல்' என்று சொல்லும் அடையா நெடுங்கதவுமாகத் திறந்தேயிருக்கிறது! எப்பொழுதும் தந்தி கொடுக்கலாம், ரிஜிஸ்டர் அனுப்பலாம், தபால் தலைகளும் வாங்கலாம். இன்னொரு பெரிய வசதி, லண்டன் நகரத்தின் பல இடங்களிலும் தபால் மெஷின்கள் இருக்கின்றன. இந்த இயந்திரங்களில் ஒரு பென்னி, இரண்டு பென்னி, அரைப்பென்னி என்று எழுதிய துவாரங்கள் இருக்கும். உரிய நாணயத்தை அந்தத் துவாரத்திலே போட்டுவிட்டுக் கீழேயுள்ள ஒரு சிறு மூடியைத் திறந்தால், ஸ்டாம்பு தனது தலையை நீட்டிக்கொண்டு வெளியே வந்து நிற்கும். அப்படியே அதை இழுத்தால் கையிலே வந்துவிடும். இன்னொரு ஸ்டாம்பு வேண்டுமானால் மறுபடியும் இன்னொரு நாணயத்தைத் துவாரத்திலே போட வேண்டும். பிறகு அடுத்த தலை வெளியே வந்து எட்டிப் பார்க்கும்! எந்த இரவிலும் இந்த இயந்திரம் தூங்காமல் ஏமாறாமல் தனது பணியைச் செய்கிறது!



அஞ்சல் அலுவலகம்

ஸ்டாம்பு இயந்திரங்கள் தவிர, பல விதஸ்டாம்புகள் அடங்கிய சிறுசிறு துண்டுப் புத்தகங்கள் தபால் நிலையங்களில் விற்கிறார்கள். இவற்றை வாங்கி வைத்துக் கொண்டு தேவைப்படும்போது வேண்டிய தலைகளைக் கிழித்துக் கொள்ளலாம். இந்தப் புத்தகங்களில் தபால் கட்டணங்கள், பொது விதிகள் ஆகியவற்றை அச்சடித்திருக்கிறார்கள். பிறரிடம் கேட்பதற்கு அவசியமின்றி இந்தப் புத்தகங்களிலேயே எல்லாத் தகவல்களையும் பார்த்துக் கொள்ளலாம்.

''யுனைடெட் கிங்டம்'' எல்லைக்குள்ளே 24,300 தபால் ஆபீஸ்கள் இருக்கின்றன. தொலைபேசிகளுக்கோ கணக்கே இல்லை: தெருவுக்கு இரண்டு மூன்று என்று கூண்டுகள் நின்ற வண்ணம் இருக்கின்றன.

பாங்கு வசதிகள் எப்படி அமைத்திருக்கிறார்கள், தெரியுமா? லண்டனில் பாங்கு இல்லாத வீதி அபூர்வம். பணத்தைக் கட்டுவது, செக் மாற்றுவது இதற்கெல்லாம் இரண்டு மூன்று நிமிஷங்களுக்குமேல் நேரம் ஆவதில்லை. கூட்டல் கழித்தல் பெருக்கல் ஐந்தொகை எடுத்தல், ஆகிய காரியங்களை இயந்திரங்களே சில விநாடிகளில் செய்து முடித்து விடுகின்றன! ஒவ்வொரு முறை கட்டும்போதும் ஒவ்வொரு தொகை வருமே நமக்கு, இந்தத் தலைவலி யெல்லாம் இல்லாமல் இயந்திரங்களே திருத்தமாகச் செய்து விடுகின்றன. இது ஒரு பெரிய ஆச்சரியம்! இன்னொரு பெரிய ஆச்சரியம், இந்தப் பாங்குகளிலேயுள்ள பரஸ்பர நம்பிக்கை! செக்கைக் கொடுத்த மறுவிநாடி ''சில்லறையாக வேண்டுமா, சிறு நோட்டுக்களாக வேண்டுமா, அல்லது பெரிய நோட்டுகளாக வேண்டுமா?'' என்ற கேள்விதான் ''கௌண்டரி''லிருந்து வரும். நமது கணக்கில் என்ன மிச்சம் இருக்கிறது என்று சோதிப்பது, ''டோக்க''னைக் கொடுத்து விட்டுக் காத்திருக்கும்படி செய்வது ஆகிய தெல்லாம் அங்கே கிடையாது! நம்மூரில் இவையெல்லாம் சாத்தியமா என்றால் அது வேறு விஷயம்.

லண்டனுக்குப் போன புதிதில் ஒரு நாள் நான் பாங்குக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்த போது, நண்பர் ஒருவர் என்னிடம் ஐ ந் நூ று பவுனைக் கொடுத்துத் தம்முடைய கணக்கிலே கட்டிவிடும்படி சொன்னார். பணத்தை வாங்கிப் பாங்குக்குக் கொண்டு போனவன் 'க்யூ'வில் நின்று ஜன்னல் வழியாகக் கொடுத்தேன். ''தாங்க்யூ'' என்று சொல்லிப் பணத்தை வாங்கிக் கொண்டவர் மறு விநாடி 'க்யூ'வில் என் பின்னால் நின்ற அடுத்த மனிதரிடம் தமது பார்வையைத் திருப்பினார்! அவர் சொன்ன பக்குவத்தைப் பார்த்தால் ரசீது கேட்கத்தோன்றவில்லை எனக்கு. ஆனாலும் பணம் இன்னொருவருடையது என்பதால் கேளாமல் இருக்கவும் முடியவில்லை. என்னுடைய இந்த நிலையைப் புரிந்துகொண்ட பாங்கு அதிகாரி, ''தாங்க்யூ. யூ மே கோ ப்ளீஸ் (நீங்கள் போகலாம்)'' என்றார் சிரித்துக் கொண்டே. மறு பேச்சில்லாமல் வந்துவிட்டேன். வந்து ஐந்நூறு பவுனை என்னிடம் கொடுத்தனுப்பிய அந்த மகானுபாவனைத் தேடினேன். மூன்று நாட்கள் இரவு எனக்கு உறக்கமில்லை! பிறகு நாலாம்நாள் மாலை ஒரு சினிமாக்கொட்டகையின் வாசலில் அவரை வழிமறித்துப் பிடித்து நடந்ததைச் சொன்னேன்! அவர் சர்வ சாதாரணமாகச் சொல்கிறார், ''இதற்கா இவ்வளவு கவலைப்பட்டீர்கள்? ரசீது வாங்குவது இங்கே பழக்கமில்லை!'' என்று! உடனே கொஞ்சம் மூச்சுவிட ஆரம்பித்தேன். அதன் பிறகு அவர் மேலும் சொன்னார்: ''நீங்கள் வற்புறுத்தியிருந்தால் ரசீது கொடுத்திருப்பார்கள். ஆனால் அப்படியெல்லாம் கேட்பது நாகரிகம் இல்லை!''

நாகரிகம் என்றால் என்னவென்பதை அப்பொழுது தெரிந்து கொண்டேன்! இதன் பிறகு நான் எப்பொழுது அந்த பாங்குக்குப் போனாலும் கண்ணைத் திறக்காமலே பணத்தைக் கொடுப்பேன்! கண்ணைத் திறக்காமலே செக்கையும் கொடுப்பேன்! ஆச்சரியம் என்னவென்றால் அவர்களும் கண்ணைத் திறக்காமலேயே என்னுடைய செக்குகளுக்குப் பணம் கொடுத்து வந்தார்கள்!

லண்டனில் பத்திரிகைகளை விற்பனை செய்யும் முறையைப் பற்றி எல்லாருமே வியந்து சொல்லக் கேட்டிருக்கிறோம் அல்லவா? நடைபாதைகளிலேயே அம்பாரம் அம்பாரமாகப் பத்திரிகைகளைக் குவித்து வைத்திருப்பார்கள். நாம் அந்த அம்பாரத்துக்குப் பக்கத்திலே காசுகளைப் போட்டுவிட்டு அவரவருக்கு உரிய பத்திரிகையை எடுத்துக் கொண்டு மேலே நடந்து விடலாம். ஏனென்று கேட்பார் கிடையாது. சில்லறைகளுக்கோ, பத்திரிகைகளுக்கோ இறகு முளைப்பதில்லை!

பால், தபீர் இவற்றின் விநியோக முறையும் அதிசயமானது. பெரிய பெரிய கார்



சுத்தமான வீதிகள்

களிலே ஆயிரக்கணக்கான பால் பாட்டில்களும், தயிர் பாட்டில்களும் கொண்டு போவார்கள். ஒவ்வொரு வீட்டு வாசலிலும் காலிப் பாட்டில்கள் — முந்தின நாள் உபயோகித்தவை — வைத்திருக்கும். அவற்றை எடுத்துக் கொண்டு புதிய பாட்டில்களை வைத்துவிட்டுக் கார் சென்றுவிடும். உரியவர்களைத் தவிர வேறு யாரும் அந்தப் பாட்டில்களைத் தொட மாட்டார்கள். வாரத்தின் கடைசி நாளன்று பால்காரர்கள் வந்து பணம் வாங்கிச் செல்லுவார்கள்.

இங்கிலாந்து உள்படப் பதினொரு தேசங்களைச் சுற்றிப் பார்த்தேன். வேறெங்கும் இல்லாத ஒரு பழக்கம் இங்கிலாந்தின் சில ஓட்டல்களிலே கண்டேன். அதாவது தங்குகிறவர்களிலே பலர் தங்கள் அறையைப் பூட்டுவது இல்லை! மற்ற ஐரோப்பிய நாடுகளில் அறையைப் பூட்டிச் சாவியை ஓட்டலிலேயே கொடுத்து விடுவதுண்டு. இந்த அறைகளைப் பார்த்து வருகிற பணிப் பெண் நாம் ஆபீஸ்களுக்குப் போனபிறகு அறைக்குள்ளே வந்து சுத்தம் செய்து படுக்கைகளையும் ''திருத்தி''விட்டுச் செல்வாள். நமக்கு வேண்டிய சாமான்களை ஒரு காகிதத்தில் எழுதி மேஜையின்மேல் பணத்தையும் வைத்துவிட்டால், மாலையில் நாம் அறைக்குத் திரும்பும்போது சாமான்களும் பாக்கிச் சில்லறையும் இருக்கும்!

ஓட்டல்களின் வாடகை என்பது படுக்கை, காலை உணவு இரண்டுக்குமாகச் சேர்த்துப் ''பெட் அண்ட் ப்ரேக் பஸ்ட்'' என்றே பெயர்.

துணிகளைச் சலவை செய்வதற்கு என்று சொந்தக் காரிலே வருகிற சலவைத் தொழிலாளிகள் உண்டு. அறைக்கு வெளியே அழுக்கு மூட்டையையும் பட்டியலையும் வைத்து விட்டுப் போய் விடலாம். மறு வாரம் நம்முடைய அறைக்கு வெளியே சலவை செய்த ஆடைகள் நமக்காகக் காத்திருக்கும்! பணத்தை ஓட்டல் மூலம் கொடுத்து விடலாம்.

லண்டன் நகரத்தின் தெருக்கள் மிகவும் சுத்தமாக இருக்கும். குப்பை கூளங்களைத் தெருவிலே எறிந்தால் நியாய சபைவரை சென்று விசாரணைகள் நடத்துகிற அவசியமின்றி, அந்த இடத்திலேயே 'ஐந்து பவுன்' அபராதம்! குப்பைகளைப் போடுவதற்காக அங்கங்கே நடைபாதைகளிலே பெட்டிகளும், தொட்டிகளும் வைத்திருக்கிறார்கள். மக்களும் இவற்றை உபயோகிக்கிறார்கள்!!

நடைபாதைகளை விட்டு நடுவீதியிலே நடந்து போகிற பழக்கம் லண்டனிலேயுள்ள குழந்தைகளுக்குக்கூடக் கிடையாது! சென்னையில் நான் குடியிருக்கும் வீதியில் நம்முடைய எதிர்கால மன்னர்கள் கிரிக்கெட்டும், கிட்டிப் புள்ளும் நடுத்தெருவிலேதான் விளையாடுகிறார்கள்! மட்டைக்கும் பந்துக்கும் பயந்து தினம் நான் நடைபாதையிலே ஒதுங்கி நடந்து செல்கிறேன்! லண்டனில் எங்குமே தெருக்களில் குழந்தைகளைப் பார்க்க முடியாது!

தெருச் சந்திகளிலேயெல்லாம் எழும்பூரில் இருப்பதுபோன்று வழிகாட்டி விளக்குகள் அங்கங்கே இருக்கின்றன. அவற்றில் ''நடக்கலாம்'' என்று எழுத்து வரும்போது, வண்டிகளெல்லாம் நின்றுவிடும். நாம் குறுக்கே நடந்து செல்லலாம். மற்ற வேளைகளில் ''நடக்காதீர்கள்!'' என்ற குறிப்பு தெரியும். அவசரமாக நடந்து போக வேண்டியவர்கள் விளக்கின் பித்தானை அமுக்கினால், சில விநாடிகளில் 'நடக்கலாம்' என்ற அறிக்கை வரும்.

இந்த வழிகாட்டி விளக்குகள் தவிர, "ZEBR CROSS" 'ஸீப்ரா க்ராஸ்' என்று வீதிகளில் சில குறுக்குக் கோடுகள் போட்டு இரண்டு பக்கத்திலும் கண் சிமிட்டுகிற மின்சாரக் குண்டுகள் எரிந்து கொண்டிருக்கும். இந்தக் குறுக்குக் கோடுகளிலேதான் ஜனங்கள் நடந்து சென்று தெருக்களைக் கடந்து போகலாம். கார்களெல்லாம் இந்தக் கோடுகள் இருக்கும் விளக்குகளுக்குப் பக்கத்திலே வரும்போது வேகத்தைக் குறைத்துக் கொண்டு ஜனங்கள் கடந்து செல்வதற்கு உதவி புரியும்.

இத்தனை வசதிகளும் கட்டுப்பாடுகளும் இணைந்து ஒரு மனித சமூகம் தனது சமுதாய வாழ்க்கையை அமைத்துக் கொண்டிருக்கிறது என்றும் அங்கே விபத்துக்கள் நடப்பதில்லையா, திருட்டுக்கள் கிடையாதா, போலீஸ்காரர்களுக்கே அந்த ஊரில் வேலையில்லையா என்று சந்தேகங்கள் எழும்.

இந்த நியாயமான சந்தேகங்களை நன்றாகத் தெளிவுபடுத்திக்கொள்ள வேண்டும் என்றும் லண்டன் நகரத்தின் பாதுகாவலர் படை பற்றியும் இவர்கள் மரியாதையோடு நடந்து கொள்வது போலவே சட்டத்தில் எவ்வளவு கண்டிப்பாக இருக்கிறார்கள் என்பது பற்றியும் தெரிந்துகொள்ள வேண்டும். இதைத் தெரிந்து கொள்வதற்கு வாய்ப்பான ஒரு நிகழ்ச்சி ஒரு நாள் ஒரு பெரிய அரசாங்க அதிகாரியின் காரிலேயே நேர்ந்தது! அதன் பிறகுதான் ஆங்கிலேயரின் நாகரிகத்துக்கும் பண்புக்கும் அடிப்படையாக உள்ள சமுதாய நெறி எனக்குப் புலனாயிற்று. (தொடரும்)



காட்சிக்குக்
கச்சிதமாக
இருக்கிறது,
ஆனால்
...சலவைக்குப் பிறகு சுருங்கிவிடுகிறது! பாடுபட்டுச் சம்பாதித்த பணத்தைப் போட்டு, 'பருத்தி மற்றும் தயாரான ஆடைகள் வாங்கு முன் அவற்றில் 'ஸான்பொரைஸ்ட்' முத்திரை இருக்கிறதா என்று மட்டும் இவர் தவறாது பார்ப்பாரானால்...?
லேபில் மேல்
SANFORIZED
என்ற முத்திரையுள்ளதா என்று பாருங்கள். உங்கள் உடைகள் உடம்புக்குப் பொருந்தாதபடி சுருங்காது.

# கடவுள்

வி. வரதாச்சாரி

“சர்வதர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம்வ்ரஜ: அஹம்த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச:”

இந்த ஸ்லோகத்துக்கு ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாயஸ்தர்கள் சரம ஸ்லோகம் என்று பெயரிட்டிருக்கிறார்கள். சரம ஸ்லோகம் என்றால் மோக்ஷ தர்மத்தை உபதேசிக்கும் கடைசி உபாயம் என்று அர்த்தம். இதை ப்ரபத்தி சாஸ்திரம் என்றும் கூறுவார்கள். பகவான் இந்த ஸ்லோகத்தில் மிகவும் சிறந்த தொரு விதையை ஊன்றி யிருக்கிறான். இந்த விதையானது முளைத்து, செடியாகி, மரமாகிப் பலனளிக்கும் நிலைமைக்கு இப்போது வந்திருக்கிறது. இந்த ஸ்லோகத்தில் புதைந்துள்ள மிகவும் ஆழ்ந்த தேவரகசியங்களை சமயபேதமில்லாமல் பண்டிதர்களும், பாமரர்களும், சந்நியாசிகளும், மடாதிபதிகளும், அரசியல் சீர்திருத்தக்காரர்களும், அந்நிய மதஸ்தர்களும், ஆண்களும், பெண்களும், நாஸ்திகர்கள் உள்பட சகலரும் பொறுமையாய் ஆராய்ந்து பார்க்க வேண்டியது மிகவும் அவசியம். அறிந்தால் மாத்திரம் போதாது. அவைகளை வாழ்க்கைக்கு அநுகூலமாக்கிக் கொள்ள வேண்டும். அப்போதுதான் இந்த உலகத்தை, இப்போது சூழ்ந்துள்ள காரிருள் நீங்கி, இடிமின்னலோடு கூடிய யுத்த மேகத்திலிருந்து விடுவிக்க முடியும். மூட நம்பிக்கை ('uperstition) என்று சொல்லிக் கொண்டு, இதன் பெருமையையும், சீர்மையையும் உணராமல் உதாசீனம் செய்து விடுவார்களேயானால், உலகம் அழிவது உறுதி. உலகத்தின் விதியை நிர்ணயிக்க வேண்டிய பொறுப்பு கடவுள் கையில் இருக்கிறது. விஞ்ஞான மோகத்தில் புத்தியைப் பறி கொடுத்து, சுயநலத்திலேயே கருத்துள்ளவர்களாய், அஞ்ஞானம் என்கிற காரிருளில் அகப்பட்டுக்கொண்டு, அதிலிருந்து மீள வழி தெரியாத அரசியல் தலைவர்களால் உலகத்தின் விதியை நிர்ணயிக்க முடியாது.

இந்த ஸ்லோகத்துக்குண்டான அப்படிப்பட்ட சிறப்பு என்னவென்பதை மேலெழுந்த வாரியாக மிகவும் சுருக்கமாக இப்போது விமரிசனம் செய்ய விரும்புகிறேன். விரிவான விமரிசனத்தைப் பிற்பாடு எடுத்துக் கொள்ளலாம்.

1. அனந்தகல்யாண குணங்களோடு கூடிய கருணைக்கடலான பகவானுடைய உண்மையான ஸ்வரூப ரகசியங்களும், அவனுடைய இவ்வுலக ஸ்ருஷ்டி ஸ்திதி, சம்ஹார ரகசியங்களும் இந்த ஸ்லோகத்தில் பூர்ணமாய் அடங்கியிருக்கின்றன.

2. அவனுடைய சம்ஹார ரகசியங்கள் நிக்ரக சக்தி அநுக்கிரக சக்தி என்று இருவித தன்மைகளோடு கூடியவை. அதில் நிக்ரக சக்தியை அர்ஜுனனுக்கு விஸ்வரூப தரிசனத்தில் பகவான் காட்டியிருக்கிறான். மற்றொரு ரகசியம் இந்த ஸ்லோகத்தில் புதைந்திருக்கிறது.

3. சத்தியம், ஞானம், அனந்தம், ஆனந்தம், பிரம்மா என்கிற சுருதி வாக்கியத்தின் இரகசியங்கள் இதில் அடங்கியிருக்கின்றன.

4. பகவான் சிறந்த ஜனநாயகக் கொள்கையைப் பின்பற்றுபவன். அதன் ரகசியங்களும் இந்த ஸ்லோகத்தில் அடங்கியிருக்கின்றன.

5. பல மதஸ்தர்கள், பலவித சம்பிரதாயங்கள் இவைகளுக்கிடையேயுள்ள அபிப்பிராய பேதங்கள் எல்லாம் நசித்து, பெரியதொரு மனித சமுதாய சீர்திருத்தத்துக்கு வழிவகை செய்யும் போக்கியதை, அதாவது ஹிந்து மதத்தின் அடிப்படையான உயர்ந்த கொள்கைகளோடு கூடிய சநாதன தர்ம ரகசியங்கள் இந்த ஸ்லோகத்தில் உண்டு. அப்போதுதான் ஜாதி, மத பேதங்கள் ஒழிவதற்கு மார்க்கங்கள் ஏற்படும். அப்போது தான் நாடு ஆன்மீக, பொருளாதார முன்னேற்றமடையச் சிறந்ததொரு வழிகோல முடியும். இதை பண்டித ஜவாஹர்லால் நேரு போன்றவர்களும், 'ஜாதி மதத்தை ஒழிப்பதற்குக் கத்தியைக் கையில் எடு' என்று ஆர்ப்பரிக்கும் பெரியார் ஈ. வே. இராமசாமி நாயக்கர் போன்றவர்களும் முக்கியமாகக் கவனிக்க வேண்டும். இந்த ஸ்லோகத்தின் ரகசியங்களை அறிய விரும்பாமல் உதாசீனம் செய்து தங்கள் வழியே செல்ல விரும்பும் மனிதர்கள் அவர்கள் எவ்வளவு உயர்ந்த அந்தஸ்திலிருந்தாலும் விவேகம் என்பது சிறிதுமில்லாத ஆதிகால மனிதர்களுக்கும், விலங்குகளுக்கும் ஒப்பாவார்கள். இவர்கள் தங்களுக்குத் தாங்களே அழிவைத் தேடுவதோடு நாட்டுக்கும் உலகுக்கும் அழிவைத் தேடுபவர்கள் ஆவார்கள்.

6. விஞ்ஞான விசித்திரங்கள் என்று இந்தக் காலத்தில் கருதப்படும் ஒவ்வொரு காரியத்துக்கும் மூலகாரணம் பகவானேயாவான். அவனுடைய நிக்ரக சக்திக்குட்பட்டு அழிவு மார்க்கத்தில் இப்போதிய விஞ்ஞான நிகழ்ச்சிகள் நடந்து வருகின்றன. அவனுடைய அநுக்கிரக சக்திக்குட்பட்ட ஆக்கல் விஞ்ஞானம் வேறு. இதன் இரகசியங்களையும் இந்த ஸ்லோகத்தின் விரிவான விமர்சனத்தின் மூலமாக அறியலாம்.

கடவுள் என்ற பதத்துக்குச் சில கற்றுணர்ந்த பெரியோர்கள் இந்த உலகத்தைக் கடந்தவன், இந்த உலகத்துக்கு அப்பாற்பட்டவன் என்று அர்த்தம் கூறுகிறார்கள். அப்படியானால், கடவுளுக்கும் இந்த உலகத்துக்கும் சம்பந்தமில்லையா? தற்கால மனித சமுதாயத்தின் மன நிலையை ஆராயும்போது, கடவுள் என்கிற ஒரு வஸ்துவே இல்லை; அது மனிதனுடைய வெறும் கற்பனை என்பது ஒரு சாராருடைய அபிப்பிராயம். மற்றும் ஒரு சாரார், கடவுள் உண்டு, ஆனால் அவருக்கும் இந்த உலகத்துக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை என்கிற அபிப்பிராயத்தோடு இருப்பதாகத் தோன்றுகிறது. வேதங்களையும், சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்த ஆஸ்திகப் பெரியோர்களிடமே, அத்துவைதம், விசிஷ்டாத்துவைதம், த்வைதம் என்கிற பரம்பரா முரண்பாட்டோடு கூடிய பிரிவினைகள் ஏற்பட்டு,

கடவுளைப் பற்றியும் அவருடைய லீலைகளைப் பற்றியும் தெளிவான ஞானமில்லாமல் இருக்கிறார்கள். கடவுள் என்ற பதத்துக்கு மேலே சொல்லிய அர்த்தம் பொருத்தமானதல்ல. இந்த உலகத்தில் காணப்படும் உயிருள்ளவை, உயிரற்றவை முதலான பஞ்சேந்திரியங்களாலும் உணரக் கூடிய சகல ஸ்தூல ஸூக்ஷ்ம வஸ்துக்களையும் தனக்குச் சரீரங்களாகக் கொண்டு, தான் அவைகளில் பிரவேசித்து, தன்னுடைய உலக ஸ்ருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் முதலிய திருவிளையாடல்களை நடத்திக் கொண்டு போகிறபடியினாலே மூல காரணமாயுள்ள இந்த வஸ்துவுக்குக் கடவுள் என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது.

இந்த விஞ்ஞான உலகத்தில், விஞ்ஞானத் திறல் ஜனங்கள் ஏதோ சில நன்மைகளை அடைந்திருந்தபோதிலும், தீமைகள் மிகவும் பெரிது. மனித சமுதாயம் கடவுளைப் பற்றியும், அவருடைய லீலைகளைப் பற்றியும் நன்கு உணர முடியாதவர்களாய், மனிதத்தன்மையை அடியோடு இழந்து, மிருகத்தன்மையோடு கூடியவர்களாய், தங்களுக்குத் தாங்களே அழிவைத் தேடிக்கொண்டு வருகிற படியால்,--அடியேன் சீலமில்லாத சிறியவனாயிருந்த போதிலும், நாடும், உலகமும் தற்காலம் இருக்கும் நிலைமையைக் கவனித்து, பகவத் கைங்கர்ய ரூபமாக இந்தக் கட்டுரையை எழுதத் துணிந்தேன். குற்றம் குறைகளை மன்னித்து, வாசகர்கள் சாரத்தைக் கிரகித்துக் கொள்ள வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்.

வேதத்தைப் பிரமாணமாகக் கொண்ட ஹிந்துமதக் கொள்கைப்படி பகவான் இம் மண்ணுலகின் க்ஷேமார்த்தமாக அநேக அவதாரங்கள் எடுத்திருக்கிறார். எல்லா அவதாரங்களிலும் அரச சம்பந்தமுண்டு. இவைகளில் கடைசியாயுள்ள ராம, கிருஷ்ணாவதாரங்களில் நெருங்கிய அரசியல் சம்பந்தம் உண்டு. தவிர தனிப்பட்ட புருஷன், ஸ்திரீ, குடும்பம் இவை பிறவித் துன்பத்திலிருந்து விடுபட்டு, மோக்ஷம் என்கிற பெரும் பதவியை அடைந்து, அந்தப் பரம்பொருளோடு ஒன்று கூடச் சுலபமான மார்க்கத்தையும் காண்பித்துக் கொடுத்திருக்கிறது. இந்த மார்க்கத்தைத் தெளிவுபடுத்தவே அர்ஜுனனுக்கு பகவத்கீதையை உபதேசம் செய்ததும். கீதையை உபதேசம் செய்யும் காலத்தில், அர்ஜுனனுக்கு விஸ்வரூப தரிசனம் கொடுத்து, தன்னைப் பற்றிய ரகசியங்களைப் பிரத்தியட்சமாக, பகவான் காண்பித்துக் கொடுத்தார். ஆனால் அர்ஜுனன் கண்ட அதுவே பகவானுடைய முடிவான ஸ்வரூபம் என்று நிஷ்கர்ஷை செய்ய முடியாது. கால தேச வர்த்தமானங்களை அனுசரித்து, எந்த எந்தக் காலத்தில், என்ன என்ன விதமாக, தன்னை பக்தர்கள் ஸாக்ஷாத்கரிக்க வேண்டுமென்று, அவன் திருவுள்ளமோ, அதேமாதிரி தன்னை ஸாக்ஷாத்கரிப்பிக்கிறார். இங்கே அர்ஜுனனுக்கு யுத்தபூமியில், யுத்தம் செய்ய மறுத்தபடியினாலே, ஸம்ஹாரரூபியாய், தன்னை ஸாட்சாத்கரிப்பித்து, அவனுக்கு விசேஷமான அச்சத்தையும் உண்டுபண்ணி, கருணைக் கடலான தன்னுடைய நித்ய கல்யாணகுண ஸ்வரூபத்தை அவனுக்கு அப்போது காண்பித்துக் கொடுக்கவில்லை. அசல் ரகசியங்களை யெல்லாம் "ஸர்வதர்மான் பரித்யஜ்ய, மாம் ஏகம் சரணம் வ்ரஜ; அஹம்த்வா ஸர்வபாபேப்யோ, மோக்ஷயிஷ்யாமி மாசுச:" என்கிற ச்லோகத்தில், மாம் ஏகம் சரணம்வ்ரஜ என்கிற வாக்கியத்தில் பூர்ணமாக அடக்கி வைத்து, கர்மயோகத்தை மாத்திரம் உபதேசித்து, அர்ஜுனனை யுத்தகாரியத்தில் பிரவேசிக்கும்படி செய்தார்.

## வாசனை மன்னர் மறைவு

டி. எஸ். ஆர். என்ற மூன்று எழுத்துக்களால் தமிழ் நாட்டையே மணக்கமழச் செய்து வந்த கும்பகோணம் ஸ்ரீமான் டி. எஸ். ராஜகோபாலய்யங்கார் திருநாட்டை அலங்கரிக்கச் சென்று விட்டார் என்ற செய்தி கேட்டுத் துணுக்குறாதவர் இல்லை. ஸ்ரீமான் டி. எஸ். ஆர். வாசனைத் திரவியங்கள் செய்து, வாசனைத் திரவிய உலகில் எப்படிப் பெயரும் புகழும் பெற்று விளங்கி வந்தாரோ அவ்வாறே பொதுஜன சேவையிலும் எல்லாருக்கும் இனியராக விளங்கி வந்தார். கும்பகோணம் நகரசபை சேர்மனாக இருந்து அவர் சிறந்த பணியாற்றி வந்தார். பாணாதுறை உயர்நிலைப் பள்ளி நிர்வாகக் கமிட்டி சேர்மனாக இருந்த காலத்தில்தான், பள்ளிக்கு அறுபதினாயிர ரூபாயில் நல்ல கட்டிடம் அமைத்துத் தந்தார். கும்பகோணம் ஸ்ரீ சாரங்கபாணி ஸ்வாமி கோயிலின் தர்மகர்த்தாவாக இருந்தபோது கோயிலுக்குப் பல அரும் திருப்பணிகள் செய்தார். 'காமன்வெல்த் பாங்க்' என்ற பாங்கியை நிறுவிய பெருமையும் அவரைச் சாரும். கும்பகோணம் ரோட்டரி கிளப்பின் தலைவராக இருந்தும் சிறந்த பணியாற்றியிட்டுத் தமது அறுபத்தேழாவது வயதில் உயிர் நீத்திருக்கிறார். நல்ல காரியத்துக்கு என்றுமே வரையாது வழங்கும் வள்ளல்தன்மையும், தெய்வத் திருப்பணியில் ஈடுபாடும் கொண்ட அவரது பிரிவால் வருந்தும்



குடும்பத்தாருக்கு நமது ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## 3. கதக்கண்ணன் வஞ்சினம்

உயிர்க் குணங்களுள் ஏதேனும் ஒன்று மிகுந்து தோன்றும்போது மற்றவை அடங்கி நின்றுவிடும் - என்று முனிவர் தனக்கு அடிக்கடி கூறும் தத்துவ வாக்கியத்தை அந்தப் பயங்கரமான சூழ்நிலையில் பகைவர் கரங்களின் கீழே அமுங்கிக் கொண்டே மீண்டும் நினைத்தான் இளங்குமரன். தாயைக் காணப்போகிறோம் என்ற அடக்க முடியாத அன்புணர்வின் மிகுதியால் முன் எச்சரிக்கை, தீரச் சிந்தித்தல் போன்ற பிற உணர்வுகளை இழந்து பகைமையின் வம்பில் வகையாகச் சிக்கிக்கொண்டதை உணர்ந்தான். மேலே எழ முடியாமல் தோள்பட்டைகளையும் கால்களையும் அழுத்தும் பேய்க் கரங்களின் கீழ்த் திணறிக் கொண்டே சில விநாடிகள் தயங்கினான் அவன். சிந்தனையைக் கூராக்கி எதையோ உறுதியாக முடிவு செய்தான். மனத்தில் எல்லையற்று நிறைந்து பெருகும் வலிமையை உடலுக்கும் பரவச் செய்வது போலிருந்ததே தவிர அவனது சிறிது நேரத் தயக்கமும் அச்சத்தின் விளைவாக இல்லை!

முதலில் வணங்குவதற்காகக் கீழே கவிழ்ந்திருந்த உள்ளங் கைகளில் குறு மணல் கலந்த ஈர மண்ணை மெல்லத் திரட்டி அள்ளிக் கொண்டான். 'பிறந்த மண் காப்பாற்றும்' என்பார்கள். சிறு வயதிலிருந்து தவழ்ந்தும், புழுதியாடியும் தான் வளர்ந்த சம்பாபதிவனத்து மண் இன்னும் சில கணங்களில் தனக்கு உதவி செய்து தன்னைக் காப்பாற்றப் போவதை எண்ணியபோது இளங்குமரனுக்குச் சிரிப்பு வந்தது. தன் வன்மையை எல்லாம் திரட்டிக் கொண்டு நிமிறித் தலையை நிமிர்த்தித் தோளை அமுக்கிக் கொண்டிருந்தவனுடைய வயிற்றில் ஒரு முட்டு



# மணிபல்லவம்

நா. பார்த்தசாரதி

முட்டினான். அந்த முட்டுத் தாங்காமல் முட்டப்பட்டவன் நாவல் மரத்தடியில் இடறி விழுந்தான். அதே சமயம் பின்புறம் காலடியில் கால்களைப் பிணைத்துக் கட்ட முயன்று கொண்டிருந்தவனையும் பலமாக உதைத்துத் தள்ளிவிட்டு, உடனே விரைவாகத் துள்ளி எழுந்து நின்று கொண்டான் இளங்குமரன். முன்னும், பின்னுமாகத் தள்ளப்பட்டு விழுந்த எதிரிகள் இருவரில் யார் முதலில் எழுந்து வந்து எந்தப் பக்கம் பாய்ந்து தன்னைத் தாக்குவார்களென்று அனுமானம் செய்து அதற்கேற்ற எச்சரிக்கையுணர்வோடு நின்றான். அடர்ந்து இருண்ட அந்தச் சூழலில் கண்களின் காணும் ஆற்றலையும், செவிகளின் கேட்கும் ஆற்றலையும், கூர்மையாக்கிக் கொண்டு நின்றான். அவன் எதிர்பார்த்தபடியே நடந்தது. கால் பக்கம் உதைபட்டு விழுந்தவன் எழுந்து இளங்குமரனைத் தாக்கப் பாய்ந்து வந்தான். இருளில் கனல் துண்டங்களைப் போல் தன்னைக் குறி வைத்து முன் நகரும் அவன் விழிகளைக் கவனித்தான் இளங்குமரன். மடக்கிக் கொண்டிருந்த தன் கைகளை உயர்த்தி, "இந்தா, இதைப் பெற்றுக் கொள்! சம்பாபதி வனத்து மண் வளமானது. பழமையும், பெருமையும் வாய்ந்தது!" - என்று கூறிச் சிரித்துக் கொண்டே விரல்களைத் திறந்து எதிர் வரும் கனற்கண்களைக் குறி வைத்து வீசினான். கண்களில் மண் விழுந்து திணறியவன் இளங்குமரன் நிற்குமிடம் அறியாது இருளில் கைகளை முன் நீட்டித் தடவிக் கொண்டு மயங்கினான். அப்போது மற்றொரு எதிரி எழுந்து வரவே, இளங்குமரன் அவனை வரவேற்கச் சித்தமானான். அவன் கைகளிலும், நெஞ்சிலும் வலிமை பெருக்கெடுத்து ஊறியது. தாயையும், முனிவரையும் சந்திக்க முடியாமையினால் சிதறியிருந்த இளங்குமரனின் நம்பிக்கைகள் பகைவனை எதிர்க்கும் நோக்கில் மீண்டும் ஒன்று பட்டன. நாவல் மரத்தடியிலிருந்து எழுந்து வந்தவனும் இளங்குமரனும் கைகலந்து போரிட்டனர். எதிரி தான் நினைத்ததுபோல் எளிதாக மடக்கி வென்று



விட முடிந்த ஆள் இல்லை என்பது சிறிது நேரத்துப் போரிலேயே இளங்குமரனுக்கு விளங்கியது. வகையான முரடனாக இருந்தான் எதிரி. இரண்டு காரணங்களுக்காகப் போரிட்டவாறே போக்குக் காட்டி எதிரியைச் சம்பாபதி கோவில் முன்புற முள்ள மங்கிய தீபத்தின் அருகே இழுத்துக் கொண்டு போய்ச் சேர்க்க விரும்பினான் இளங்குமரன். முதற் காரணம், 'யார் என்ன தொடர்பினால் தன்னை அங்கே அந்த இரவில் திட்டமிட்டுச் செய்வதுபோல் தாக்குகிறார்கள்' என்பதை





அவன் நன்றாக இனங் கண்டு அறிந்து கொள்ள விரும்பினான். அப்படி அறிந்து கொள்ளாமல் அவர்கள் தன்னிடமிருந்தோ, தான் அவர்களிடம் இருந்தோ, தப்பிச் செல்லலாகாதென்று உறுதி செய்து கொண்டிருந்தான் அவன். இரண்டாவது காரணம், 'முதலில் தன்னால் கண்களில் மண் தூவப்பெற்ற எதிரியும் கண்களைக் கசக்கிக் கொண்டு பார்வை தெரிந்து மற்றவனோடு வந்து சேர்ந்துகொண்டு தன்னைத் தாக்குவதற்குள் ஒருவனை மட்டும் பிரித்துச் சிறிது தொலைவு விலக்கிக்கொண்டுபோகலாமே என்பதும் அவன் திட்டமாயிருந்தது.

ஆனால் இளங்குமரன் எவ்வளவுக்குத் தன்னோடு போரிட்டவனைச் சம்பாபதி கோவில் முன்புறமுள்ள தீப ஒளியில் கொண்டுபோய் நிறுத்த முயன்றானோ, அவ்வளவுக்கு முன்வரத் தயங்கி இருட்டிலேயே பின்னுக்கு இழுத்து அவனைத் தாக்கினான் எதிரி. இதனால் இளங்குமரனின் சந்தேகமும் எதிரியை இனங் கண்டு கொள்ள விரும்பும் ஆவலும் விநாடிக்கு விநாடி வேகமாகப் பெருகியது. தீப ஒளி இருக்கும் பக்கமாக இளங்குமரன் அவனை இழுப்பதும் இருள் மண்டியிருக்கும் பக்கமாகவே அவன் இளங்குமரனை இழுப்பதுமாக நேரம் கழிந்துகொண்டிருந்தது.

'தைரியசாலிகள் வெளிச்சத்துக்கு வந்து தங்கள் முகம் காட்ட இவ்வளவு கூசுவது வழக்கமில்லையே?'' என்று ஏளனமாக நகைத்துக் கொண்டே இளங்குமரன் கூறியதன் நோக்கம் எதிராளி கூறும் பதிலின் மூலமாக அவன் குரலையாவது கேட்டு நிதானம் செய்து கொள்ளலாம் என்பதுதான். ஆனால் இந்த முயற்சியும் பயனளிக்கவில்லை.

எதிரி வாயால் பேசவில்லை, தன் ஆத்திரத்தையெல்லாம் சேர்த்துக் கைகளால் மட்டுமே பேசினான். மீண்டும் இளங்குமரன் அவன் தன்மானத்தைத் தூண்டிவிடும் விதமான குரலில், ''இவ்வளவு தீரமாக எதிர்த்துப் போரிடும் என்னுடைய எதிரி கேவலம் ஓர் ஊமையாக இருக்க முடியுமென்று தோன்றவில்லை'' என்று வாயைக் கிளற முயன்றான். அதற்கும் எதிரியிடமிருந்து பதில் இல்லை. எதிரி தன்னைக் காட்டிலும் முதியவன் என்பதும் வன்மை முதிர்ந்தவன் என்பதும் அவனுடைய வைரம் பாய்ந்த இரும்புக் கரங்களை எதிர்த்துத் தாக்கும் போதெல்லாம் இளங்குமரனுக்கு விளங்கியது. ஏற்கெனவே மாலையில் கடற்கரையில் மற்போரிட்டுக் களைத்திருந்த அவன் உடல் இப்போது சோர்ந்து தளர்ந்து கொண்டே வந்தது. இவ்வாறு அவன் கை தளர்ந்து கொண்டு வந்த நேரத்தில் கண்ணில் விழுந்த மண்ணைத் துடைத்து விழிகளைக் கசக்கிக் கொண்டு தெளிவு பெற்றவனாக இரண்டாவது எதிரியும் வந்து சேர்ந்து விட்டான். இளங்குமரனின் மனவுறுதி மெல்லத் துவண்டது. 'இவர்களென்ன மனிதர்களா, அரக்கர்களா? எனக்குத் தளர்ச்சி பெருகப் பெருக இவர்கள் சிறிதும் தளராமல் தாக்குகிறார்களே!' என்று மனத்துக்குள் வியந்து திகைத்தான் இளங்குமரன். அவன் நெஞ்சாரமும் உடலும் பொறுமை இழந்தன. எதிர்த்துத் தாக்குவதை நிறுத்திவிட்டு உரத்த குரலில் அவர்களிடம் கேட்கலானான்:

''தயவு செய்து நிறுத்துங்கள்! நீங்கள் யார்? எதற்காக இப்படி என்னை வழி மறித்துத் தாக்குகிறீர்கள்? நான் உங்களுக்கு என்ன கெடுதல் செய்தேன்? முனிவர் அருட்செல்வர் இன்று இந்நேரத்தில் இங்கு என் அன்னையை அழைத்து வந்து காட்டுவதாகக் கூறியிருந்தார். அன்னையையும், முனிவரையும் எதிர்பார்த்துத் தான் இங்கே வந்தேன். அன்னை அமர்ந்திருப்பதாக எண்ணியே வணங்கினேன்......''

வேகமாகக் கூறிக் கொண்டே வந்த இளங்குமரனின் நாவிலிருந்து மேற்கொண்டு சொற்கள் பிறக்கவில்லை. அப்படியே திகைத்து விழிகள் விரிந்தகல இருபுறமும் மாறி மாறிப் பார்த்து மருண்டு நின்றான்!

ஆ! இதென்ன பயங்கரக் காட்சி! இவர்கள் கைகளில் படமெடுத்து நெளியும் இந்த நாகப் பாம்புகளை எப்படிப் பிடித்தார்கள்? இளங்குமரனுக்கு இயக்

கா நடமாட்டம், பேய்பூத நிகழ்ச்சி, இவற்றில் ஒருபோதும் நம்பிக்கை இல்லை. சம்பாபதி வனத்திலோ, சக்கரவாளக் கோட்டத்துச் சுற்றுப்புறங்களிலோ பேய் பூதங்கள் பழகுவதாகச் சிறு வயதில் அவன் இளம் நண்பர்கள் கதை அளந்தால் அதைப் பொறுத்துக் கொண்டு அவனால் சும்மா இருக்க முடியாது.

"பேய்களாவது, பூதங்களாவது? நள்ளிரவுக்கு மேலானாலும் தாங்களும் உறங்காமல் பிறரையும் உறங்கவிடாமல் வன்னி மரத்தடியில் கூப்பாடு போட்டுக் கொண்டிருக்கும் காபாலிகர்களும், புறநகர்ப்பகுதிகளில் காவலுக்காகத் திரியும் ஊர்க் காப்பாளர்களும்தான் பேய்கள் போல் இரவில் நடமாடுகிறார்கள். வேறு எந்தப் பேயும், பூதமும் இங்கே இருப்பதாகத் தெரியவில்லை" என்று அத்தகைய நேரங்களில் நண்பர்களை எள்ளி நகையாடியிருக்கிறான் அவன்.

அவனே இப்போது மருண்டான்; தயங்கினான். ஒன்றும் புரியாமல் மயங்கினான். ஆனால் அந்த மயக்கமும் தயக்கமும் தீர்ந்து உற்றுப் பார்த்தபோதுதான் உண்மை புரிந்தது. இரு புறமும் தன் தோளில் சொருகியிருந் போல் அவர்கள் நெருக்கிப் பிடித்துக் கொண்டிருப்பவை நாகப் பாம்புகள் அல்ல; பாம்பு படமெடுப்பது போல் கைப்பிடிக்கு மேற்பகுதி அமைந்ததும் அதனுடன் நெளிவது போல் கீழ்ப்பகுதி அமைந்ததுமான கூரிய வாள்கள் என்று தெரிந்தது. அந்தக் காலத்தில் சோழ நாட்டில் இத்தகைய அமைப் புள்ளசிறுபடைக் கலங்களைப் பயன்படுத்துகிறவர்கள் காவிரிப்பூம்பட்டினத்திலும் சுற்றுப் புறத்துக் காடுகளிலும் வாழ்ந்த எயினர் எனப்படும் ஒரு வகை முரட்டு நாக மரபினர் என்பதும் அவனுக்குத் தெரியும். எயினர் பிரிவைச் சேர்ந்த நாகர்கள் அரக்கரைப் போல் வலிமை யுடைய வர்களென்றும் உயிர்க் கொலைக்கு அஞ்சாதவர்களென்றும் அவன் கேள்விப்பட்டிருந்தான். சூறையாடுதலும், கொள்ளையடித்தலும், வழிப்பறி செய்தலும் *ஆறலை கள்வர்கள் செய்யும் பிற கொடுமைகளும் எயினர் கூட்டத்தினருக்குப் பொழுதுபோக்கு விளையாட்டுக்கள் போன்றவை என்றும் அவன் அறிந்திருந்தான். ஒளிப்பாம்புகள் நெளிந்து கொத்துவதற்குப் படமெடுத்து நிற்பது போல் தன்னை நோக்கி ஓங்கப்பட்டிருக்கும் அந்த வாள்களின் நுனிகளில் அவனுடைய உயிரும் உணர்வுகளும் அந்தக் கணத்தில் தேங்கி நின்றன. 'இத்தகைய குத்து வாள்களைக் 'குறும்பிடி' அல்லது 'வஞ்சம்' என்று குறிப்பிடுவார்கள். 'வஞ்சம்' என்பது இப்போது என் நிலையை வைத்துப் பார்க்கும்போது இவற்றுக்கு எவ்வளவு பொருத்தமான பெயராய்ப் படுகிறது? வஞ்சங்களின் நுனியில் அல்லவா என் உயிர் இப்போது இருக்கிறது!' என்று ஏலாமையோடு நினைக்கும்போது இளங் குமரனுக்குப்

* சிறு வழிகளிலும் பெரு வழிகளிலும் போவோரை அலைத்துத் துன்புறுத்தும் கள்வருக்கு அக்காலப் பெயர்.



பெருமூச்சு வந்தது. காவிரி அரவணைத்தோடும் அப் பெரிய நகரத்தில் எத்தனையோ ஆண்டுகள் வீரனாகவும், அறிஞனாகவும், அழகனாகவும், வாழ்ந்து வளரத் தன் மனத்தில் கனவுகளாகவும், கற்பனைகளாகவும், இடைவிடாத் தவமாகவும் பதிந்திருந்த ஆசைகள் யாவும் அந்த வாள்களின் நுனியில் அழிந்து அவநம்பிக்கைகள் தோன்றுவதை அவன் உணர்ந்தான். ஏங்கினான். உருகினான். என்ன செய்வதெனத் தோன்றாது தவித்துக்கொண்டே நின்றான். ஓர் அணுவளவு விலகி அசைந்தாலும் அருட்செல்வ முனிவர் பரிந்து பாதுகாத்து வளர்த்து விட்ட தன் உடலின் குருதி அந்த வாள்களின் நுனியில் நனையும் என்பதில் ஐயமே இல்லை என்பது அவனுக்குப் புரிந்திருந்தது. அவன் மனத்தில் நினைவுகள் வேகமாக ஓடலாயின:-

"அன்னையே! கண்களால் இதுவரை காணாத உன்னை நினைத்து நினைத்து அந்த நினைப்புக்களாலேயே நெஞ்சில் நீ இப்படித்தான் இருக்க வேண்டுமென்று உள்ளத் திரையிலே எண்ணக் கோலமாய் இழைத்து வைத்திருக்கிறேன். எண்ணக் கோலத்திலே கண்டதையன்றி உன்னை உனது உண்மைக் கோலத்தில் காணும் பாக்கியமின்றி இன்று இந்த வனத்திலே கொலையுண்டு வீழப் போகிறேனா? உன்னைக் காண முயலும்போதெல்லாம் எனக்கு இப்படி ஏதேனும் தடைகள் நேர்ந்து கொண்டேயிருக்கின்றனவே! அப்படி நேர்வதற்குக் காரணமாக உன்னைச் சூழ்ந்திருக்கும் மா



மங்கள் யாவை? அல்லது என்னைச் சூழ்ந்திருக்கும் மர்மங்கள் யாவை?

"சுவாமீ! அருட்செல்வ முனிவரே, தாயாகவும், தந்தையாகவும் இருந்து என்னை வளர்த்து ஆளாக்கிவிட்ட தங்களுக்கு நன்றி செலுத்துமுகமாக என் வாழ்நாள் நெடுகிலும் என்னென்னவோ பணிவிடைகள் எல்லாம் செய்ய வேண்டுமென்று நினைத்திருந்தேனே. அவ்வாறு பணிவிடை செய்ய வேண்டிய உடல் இங்கே கொலையுண்டு வீழ்ந்துபட்டுவிடும் போலிருக்கிறதே."

அப்போது பூம்புகாரின் அன்பிற்கினிய நண்பர்கள், வெற்றிப் பெருமையோடு முல்லைமாலை சூடி நின்ற போது தன்னுடைய சிரிப்பினாலும் அவனுடைய நெஞ்சில் மற்றோர் முல்லை மாலையைச் சூடிய அந்தப் பெண், தோற்று வீழ்ந்த வலிய மல்லன்,-என்று இவ்வாறு தொடர்பும் காரணமுமில்லாமல் ஒவ்வொருவராக இளங்குமரனின் நினைவில் தோன்றினர். அவன் ஏறக்குறைய எல்லா நம்பிக்கைகளையும் இழந்துவிட்ட அந்தச் சமயத்தில் சம்பாபதி கோவில் கிழக்குப் புறத்தில் இருந்து குதிரைகள் வரும் குளம்பொலி கேட்டது. புறநகர்ப் பகுதிகளிலுள்ள இடங்களைக் காக்கும் யாமக் காவலர்கள் சில சமயங்களில் அப்படி வருவதுண்டு. இளங்குமரன் மனத்தில் நம்பிக்கை சற்றே அரும்பியது. ஆனால் எதிரிகளின் பிடி அவனை நெருக்கிற்று. குளம்பொலி அருகில் நெருங்கி வந்து கொண்டேயிருந்தது. இராக் காவலர்கள் எழுப்பும் எச்சரிக்கைக் குரலும் இப்போது குளம்பொலியோடு சேர்ந்து ஒலித்தது. அதில் ஒரு குரல் தனக்குப் பழக்கமான சக்கரவாளக் கோட்டத்துக் காவலர் தலைவன் கதக்கண்ணனுடையதாயிருப்பது கேட்டு இளங் குமரனுக்கு ஆறுதலாயிருந்தது.



வருகிற காவலர்களுடைய தீப்பந்தத்தின் ஒளியும் குதிரைகளும் மிக அருகில் நெருங்கியபோது, "இளங்குமரனே! தெரிந்துகொள். நீயோ, உன்னை வளர்த்து ஆளாக்கிய அந்த அப்பாவி முனிவரோ உன் தாயைப் பற்றி அறிந்து கொள்ளவோ, அவளை நேரில் காணவோ முயன்றால் மறுநாள் உன்னையும், அந்த முனிவரையும் இந்த இடத்தில் பிணங்களாகக் காண்பார்கள் பூம்புகார் நகர மக்கள்! இது நினைவிருக்கட்டும். மறந்து விடாதே. மறந்தாயோ மறுபடியும் இதே போல நினைவூட்ட வருவோம்" என்று புலைநாற்றம் வீசும் வாயொன்று அவன் காதருகே கடுமையாகக் கூறியது. கற்பாறை உடையும் ஒலி போல் விகாரமான முரட்டுக் குரல் போலத் தோன்றியது அந்தக் குரல். இயல்பாகவே பேசாமல் வேண்டுமென்றே மாற்றிக் கொண்டு தமிழ் ஒலி முறைகள் அக்குரலில் நாகர்கள் பேசுவது போல் வன்மை மிகுந்து தொனித்தன.

மறு கணம் வேண்டா வெறுப்பாக அவனை விட்டுச் செல்வது போல் கீழே அலட்சியமாகத் தள்ளிவிட்டுப் புதரில் பாய்ந்து மறைந்தனர் அந்த முரட்டு மனிதர்கள். தோள்களில் அவர்கள் பிடித்திருந்த இடம் இரத்தம் கட்டி உறைந்து போனாற் போல் வலித்தது. திகைப்படங்காமல் நின்றான் அவன்.

"என்னப்பா, இளங்குமரனா? இந்த அர்த்த ராத்திரியில் நகரத்தின் இந்திர விழாக் கோலாகலங்களையெல்லாம் விட்டுவிட்டு இங்கே யாரோடு இரகசியம் பேசிக்கொண்டு நிற்கிறாய்?" என்று கையில் தீப்பந்தத்துடனும் இளங்குமரனை நோக்கி மலர்ந்த முகத்துடனும் குதிரையிலிருந்து கீழே இறங்கிய கதக் கண்ணனையும் அவன் தோழனான மற்றொரு காவலனையும் பார்த்துக் கெட்ட கனவு கண்டு விழிப்பவன் போல் பரக்கப் பரக்க விழித்தான் இளங்குமரன்.

அவன் திகைப்பு நீங்கித் தன்னை நிதானப் படுத்திக் கொண்டு அவர்களோடு கலகலப்பாகப் பேசத் தொடங்குவதற்கே சிறிது நேரமாயிற்று. அருட்செல்வ முனிவர் தாயை அன்றிரவு தனக்குக் காண்பிப்பதாக வாக்களித்திருந்தது, எதிரிகள் போகுமுன் இறுதியாகத் தன் செவியில் பயங்கரமாக எச்சரிக்கை செய்துவிட்டுப் போனது, ஆகியவற்றைக் கதக்கண்ணனிடம் கூறாமல், 'யாரோ இரண்டு முரட்டு நாகர்கள் தன்னை வழிமறித்துக் கொல்ல முயன்றார்கள்' என்று மட்டும் பொதுவாகச் சொன்னான் இளங்குமரன்.

"நண்பனே! கவலைப்படாதே. உன்னுடைய எதிரிகள் எனக்கும் எதிரிகளே. அவர்கள் எங்கு சென்றாலும் தேடிப் பிடிக்கிறேன். இந்தச் சம்பாபதி வனத்திலிருந்து அவ்வளவு விரைவில் அவர்கள் தப்பிவிட முடியாது. நீ அதிகமாகக்

உங்களுக்கும் பிலிப்ஸிற்கும் உள்ள இணைப்பு

# R

பலவித ரகங்கள்



பிலிப்ஸ் நோவோஸோனிக் ரேடியோ

PHILIPS

---

பல் சிதைவுகளையும்
வாய் நாற்றத்தையும்
ஈறு உபாதைகளையும்

# நிறுத்துங்கள்

பளிச்சென்று ஒளிவீசும் வெண்மையும்
ஆரோக்கியமுமான பல் வரிசைகளை
அடைய வேண்டுமானால்

# போர்ஹான்ஸ்

பற்பசையை உபயோகியுங்கள்




ஈறுகளின் உறுதிக்காக என்றே டாக்டர் ஆர். ஜே. போர்ஹான்ஸ் கண்டுபிடித்து அளிக்கும் விசேஷத் துவர்ப்புப் பொருள் கலந்துள்ள பற்பசை இது ஒன்றுதான்.

Geoffrey Manners & Co. Private Ltd.

TAN. 5.23




கலையின் அற்புத பொக்கிஷங்கள் அடங்கிய நமது ஆலயங்களை கண்டு களியுங்கள், மகத்தான, கம்பீரமான, மகிமையான புராதனச் சின்னங்கள், ஆனந்தமாக இளைப்பாற உகந்த இடங்கள் புதிய 'ஆலயங்கள்' நாட்டின் முன்னேற்றத்தின் சிறப்பான வெற்றிக் கல்லாக திகழுகின்றன, நம் பண்டைய பண்பாட்டை விழாக்களும், பண்டிகைகளும் விளக்குகின்றன, நாட்டின் ஒவ்வொரு பிராந்தியமும் ஒவ்வொரு விதத்தில் சிறந்து விளங்குகின்றன

உங்கள் உல்லாசப் பிரயாண விவரங்களை அருகில் உள்ள உல்லாசப் பிரயாண காரியாலயங்களிலிருந்து தெரிந்து கொள்ளுங்கள்



இந்திய அரசாங்க உல்லாசப் பிரயாண காரியாலயங்கள்: பம்பாய் ● கல்கத்தா ● டில்லி சென்னை ● ஆக்ரா ● அவுரங்காபாத் ● வாரணசி ● பெங்களூர் ● போபால் ● கொச்சி டார்ஜீலிங் ● ஜெய்ப்பூர்

D.A. 60/191

களைத்துக் காணப்படுகிறாய். நேரே நம் இல்லத்துக்குச் சென்று படுத்து நன்றாக உறங்கு. இந்திர விழாவுக்காக நகரத்துக்குச் சென்றிருந்த என் தந்தையும் தங்கை முல்லையும் அநேகமாக இதற்குள் திரும்பி வந்திருப்பார்கள். அவர்கள் திரும்பி வந்து உறங்கிப் போயிருந்தால் எழுப்புவதற்குக் கூச்சப்பட்டுக் கொண்டு பேசாமல் தயங்கி நிற்காதே..." இவ்வாறு கூறிக் கொண்டே அன்போடு அருகில் நெருங்கி முதுகில் தட்டிக் கொடுத்த நண்பனுக்கு எவ்வாறு நன்றி சொல்வதென்று இளங்குமரனுக்கு அப்போது தோன்றவில்லை. தன்னுடைய எதிரிகளை அவனுடைய எதிரிகளாகப் பாவித்துக் கொண்டு கதக்கண்ணன் வஞ்சினம் கூறியபோது, 'நண்பன் என்றால் இப்படியன்றோ அமைய வேண்டும்' என்று எண்ணி உள்ளூறப் பெருமை கொண்டான் இளங்குமரன்.

கதக்கண்ணனும், அவனுடன் வந்த இன்னோர் ஊர்க் காவலனும் தப்பியோடியவர்களைக் கண்டுபிடிக்கப் புறப்பட்ட போது இளங்குமரன் ஓய்வு கொள்வதற்காக வந்த வழியே திரும்பினான். பக்கத்துப் புதரிலிருந்து ஈனக் குரலில் யாரோ மெல்லவலியோடு முனகுவதுபோல் ஒலி வரவே விரைவாகச் சென்று சம்பாபதி கோவில் தீபத்தை எடுத்துவந்து அந்த இடத்துக்குப் போய்ப் புதரை விலக்கிப் பார்த்தான் இளங்குமரன். யாரோ கையும் காலும் கட்டுண்டு புதரில் விழுந்திருந்தது தெரிந்தது. விளக்கை இன்னும் தணித்துப் பிடித்து மயங்கிய நிலையில் கட்டுண்டு விழுந்திருந்தவரை முகம் நிமிர்த்திப் பார்த்தபோது இளங்குமரனின் வாயிலிருந்து 'ஆ'வென்ற அலறல் கிளம்பியது. தன் ஊனுடம்பு முழுதும் எவருக்கு, இடைவிடாமல் பணிசெய்யக் கடன் பட்டிருக்கிறதென இளங்குமரன் நினைத்து வந்தானோ, அந்த அருட்செல்வ முனிவரைத் தாக்கிக் கையையும் காலையும் கட்டிப் போட்டிருந்தார்கள் பாவிகள். இளங்குமரனுக்கு இரத்தம் கொதித்தது. "கதக்கண்ணா! அந்தப் பாவிகளைத் தேடிக் கண்டுபிடிப்பதாகத் தான் நீ வஞ்சினம் கூறினாய். எனக்கோ அவர்களைத் தேடிக் கண்டுபிடித்து என் மதிப்பிற்குரியவரை இப்படிச் செய்ததற்காகச் செம்மையாக அவர்களை அறைந்து விட்டு அதன்பின் அவர்களுடைய வஞ்சக் கொடுவாளுக்கு இரையாகி இறந்தாலும் கவலையில்லை என்று தோன்றுகிறது" என்று ஆவேசத்தோடு தனக்குத்தானே சொல்லிக் கொண்டான் இளங்குமரன்.

## 4. முல்லைக்குப் புரியவில்லை!

சம்பாபதி வனத்திலிருந்து வெளியேறி அப்பாலுள்ள கோட்டங்களையும் தவச்சாலைகளையும் பல சமயத்தார் வழிபாட்டுக்கு மலர் கொய்யும் மலர் வனங்களையும் கடந்து வந்து விட்டால் புறவீதி நிலாவொளியில் குளித்துக் கொண்டு நீண்டு தோன்றியது.

புற வீதியின் தொடக்கத்தில் மலர் வனங்களின் எல்லை முடிவடைந்ததனால் மெல்லிய காற்றோடு அவ்வனங்களில் மறுநாள் வைகறைக்காக அரும்பவிழ்த்துக் கொண்டிருந்த பல்வேறு பூக்களின் இதமான மணம் கண்ணுக்குப் புலனாகாத சுகந்த வெள்ளமாய் அலை பரப்பிக் கொண்டிருந்தது. எங்கும் பின்னிரவு தொடங்கி விட்டதற்கு அடையாளமான மென் குளிர்ச் சூழல். எங்கும் பால் நிலா ஒளி. எங்கும் மலர் மணக் கொள்ளை. ஆகா! அந்த நேரத்தில் அந்தச் சூழ்நிலையில் புற வீதிதான் எத்தனை அழகாயிருந்தது!

புறநகரின் இராக் காவலர்களும் சோழர் கோநகரான பூம்புகாரைச் சுற்றி இயற்கை யரண்களுள் ஒன்றாக அமைக்கப்பட்டிருந்த காவற் காட்டைக் காக்கும் பொறுப்புள்ள வீரர்களும் அதிகமாக வசிக்கும் குடியிருப்பு வீதி அது. சில பெரிய வீடுகளின் முன்புறத் திண்ணைகளில் அவசர காலத்தில் பயன் படுத்தும் பெரும் பெரும் முரசங்கள் கட்டப்பட்டிருந்தன. இன்னும் சில திண்ணைகளில் வேல்களும், ஈட்டிகளும், சூலாயுதங்களும் சாத்தி வைக்கப்பட்டிருந்தன. சித்திர வேலைப்பாடமைந்த பெரிய பெரிய மரக்கதவுகளில் சோழப் பேரரசின் புலிச் சின்னம் செதுக்கப் பெற்றிருந்தது. அந்த அமைதியான நேரத்தில் திண்ணை முரசங்களில் அடிக்கொருதரம் காற்று மோதியதனால் எழுந்த ஓசை வீதியே உறுமுவது போல் பிரமை உண்டாக்கியது. சிறு சிறு வெண்கல மணிகள் பொருத்திய கதவுகளில் காற்று மோதியபோதும் வீதியே கலீரென்று சிரிப்பதுபோல் ஒரழகு புலப்பட்டு ஒடுங்கிக் கொண்டிருந்தது.

அந்த நிலையில் சம்பாபதி வனத்துப் புதரில் தாக்கப்பட்டு மயங்கிக் கிடந்த முனிவரின் உடலைச் சுமந்தவாறு புற வீதியில் தனியாக நடந்து வந்து கொண்

டிருந்தான் இளங்குமரன். மாலையில் கடற்கரையில் கிடைத்த வெற்றி அநுபவமும் அதன்பின் நினைத்தாலே கதை போல் தோன்றக்கூடிய சம்பாபதி வனத்துப் பயங்கர அநுபவங்களும், இப்போது மலர் மணமும், சீதமாருதமும் தவழும் புறவீதியில் முனிவரின் மெலிந்த உடலைத் தாங்கி நடக்கும் இந்த அநுபவமும், எல்லாம் ஏதோ திட்டமிட்டுத் தொடர்பாக வரும் அபூர்வக் கனவுகள் போல் தோன்றின அவனுக்கு.

புறவீதியின் நடுப்பகுதியில் முரசமும் ஆயுதங்களும் மற்ற வீடுகளில் காணப்பட்டதைவிடச் சற்று மிகுதியாகவே வைக்கப்பட்டிருந்த ஒரு பெரிய வீட்டில் படியேறி 'முல்லை! முல்லை! கதவைத் திற' என்று இரைந்து கூப்பிட்டவாறே கதவைத் தட்டினான் இளங்குமரன். நிசப்தமான வீதியில் அவன் குரலும் கதவைத் தட்டியதனால் நாவசைந்து ஒலித்த மணிகளின் ஒலியும் தனியோசைகளாய் எட்டொலித்தன. சிறிது நேரம் இவ்வாறு கதவைத் தட்டியும், குரல் கொடுத்தும் உள்ளே இருப்பவரை எழுப்ப முயன்ற அவன் முயற்சி வெற்றி பெற்றது.



உள்ளிருந்து யாரோ அளவாய்ப் பாதம் பெயர்த்து நடை பயின்று வருவதை அறிவிக்கும் சிலம்பொலி மெல்லக் கேட்டது. திறவுகோல் நுழைக்கும் துளைவழியே உள்ளிருந்து கதவருகே நெருங்கி வரும் தீப ஒளியும் தெரிந்தது. இளங்குமரன் கண்ணை அருகிற் கொண்டு போய்த் திறவுகோல் நுழையின் வழியே பார்த்தான். பேதைப் பருவத்துப் பெண்ணான முல்லை கையில் தீபத்துடன் கரிகுழல் அசைவுற, அசைவுறத் துயிலெழு மயிலென மயிலெனப் பரிபுர ஒலி எழச் சித்திரம் நடந்து வருவதுபோல் வந்து கொண்டிருந்தாள். தூக்கம் கலைந்து அழகு சொருகினாற்போல் அப்போது அற்புதமாய்க் காட்சியளித்தன முல்லையின் கண்களும், முகமும். 'துயில் நீங்கிய சோர்வு ஒடுங்கிய நீண்ட விழிகள்தாம் எத்தனை அழகு' என்று வியந்தான் இளங்குமரன். விளக்கு ஒளியும், சிலம்பொலியும் நெருங்கி வந்தன. கதவின் தாழ் ஓசையோடு திறக்கப்பட்டது.

தன் கையிலிருந்த பிடிவிளக்கைத் தூக்கி, வந்திருப்பவரின் முகத்தை அதன் ஒளியில் பார்த்தாள் முல்லை. "நீங்களா?" என்ற இனிய வினாவுக்குப் பின் முல்லையின் இதழ்களில் முல்லை மலர்ந்தது.

"யாரையோ தூக்கிக் கொண்டு வந்திருக்கிறீர்களே! யார் அது?"

"ஏதேது? வாயிலிலேயே நிறுத்தி வைத்துக்கொண்டு நீ கேட்கிற கேள்விகளைப் பார்த்தால் உள்ளே வரவிடாமல் இங்கேயே பேசி விடை கொடுத்து அனுப்பி விடுவாய் போலிருக்கிறதே!"

"ஐயையோ, அப்படியெல்லாம் ஒன்றும் இல்லை. உள்ளே வாருங்கள். இந்திர விழாப் பார்த்துவிட்டு நகருக்குள்ளிருந்து நானும், தந்தையும் கூடச் சிறிது நாழிகைக்கு முன்தான் இங்கே வீட்டுக்குத் திரும்பி வந்தோம்." முல்லையின் இதழ்களில் மீண்டும் முல்லை மலர்ந்தது. இளங்குமரன் உள்ளே நுழைந்து அங்கிருந்த கட்டில் ஒன்றில் அருட்செல்வ முனிவரின் உடலைக் கிடத்தினான். அவரை அங்கே கிடத்தியவுடனே இப்போது நன்றாகத் தெரியும் இளங்குமரனின் தோளிலும், மார்பிலும் சிறு சிறு காயங்கள் தென்படுவதையும் அவன் சோர்ந்திருப்பதையும் பார்த்து ஒன்றும் புரியாமல் மருண்டு நின்றாள் முல்லை.

"முல்லை! சம்பாபதி வனத்தில் காவலுக்காகச் சுற்றிக் கொண்டிருந்த உன் தமையனைச் சந்தித்தேன். அவன்தான் என்னை இங்கே போகச்சொல்லி அனுப்பினான். அவனை அந்தப் பக்கம் அனுப்பி விட்டுத் திரும்பினால், இன்னொரு புதரில் இவரை யாரோ அடித்துப் போட்டிருப்பது தெரிந்தது. இவரையும் எடுத்துக் கொண்டு நேராக இங்கு வந்து சேர்ந்தேன். இனிமேல் கவலையில்லை. நாளை விடிகிறவரை இரண்டு பேரும் முல்லைக்கு அடைக்கலம்தான்."

இதைக் கேட்டு முல்லை சிரித்தாள். "உங்கள் உடம்பைப் பார்த்தாலும், நீங்கள் கூட யாருடனோ பலமாகச் சண்டை போட்டுவிட்டு வந்திருப்பீர்கள் போலிருக்கிறதே?"

"ஒரு சண்டையென்ன? பொழுது போனால், பொழுது விடிந்தால் சண்டைகளாகத்தான் இருக்கிறது என்பாடு. அதைப்பற்றியெல்லாம் அப்புறம் விவரமாகப் பேசிக் கொள்ளலாம். முதலில் முனிவருடைய மயக்கத்தைப் போக்கி அவருக்குத் தெளிவு வரச் செய்ய வேண்டும். அதற்கு உன்னுடைய உத

விகள் தேவை! உன் தந்தையாரை எழுப்பாதே. அவர் நன்றாக உறங்கட்டும். நீ மட்டும் உன்னால் முடிந்தவற்றைச் செய்தால் போதும்......"

"முனிவருக்கு மட்டும்தானா? நீங்கள் கூடத்தான் ஊமைக் காயங்களாக மார்பிலும், தோளிலும் நிறைய வாங்கிக் கொண்டு வந்திருக்கிறீர்கள். அவைகளுக்கும் மருந்து போட்டுத் தானே ஆக வேண்டும்?"

"மார்பிலும், தோளிலும், காயம் படுவது பெருமைதான முல்லை! அவற்றை விழுப்புண்கள் என்று புகழின் முத்திரைகளாகக் கணக்கிடுகிறார்கள் இலக்கிய ஆசிரியர்கள்!"

"கணக்கிடுவார்கள் கணக்கிடுவார்கள்! ஏன் கணக்கிட மாட்டார்கள்? புண்ணைப் பெறுகிறவன் பெற்றுக்கொண்டு வந்து...விட்டால் அப்புறம் சோம்பல் இல்லாமல் புகழ்கிறவர்களுக்கு என்ன வலிக்கிறதாம்?" என்று சிரித்தவாறே கூறி விட்டுப் பம்பரமாகச் சுழன்று காரியங்களைக் கவனிக்கத் தொடங்கினாள் முல்லை. சிலம்பும், வளைகளும், ஒலிக்க விரைவிலிருந்து அவள் எவ்வளவு வேகமாக மருந்தரைக்கிறாள், எவ்வளவு வேகமாகச் சுடுநீர் வைக்கிறாள் என்பதை நினைத்து வியந்தவாறு முனிவரின் கட்டிலருகே இருந்தான் இளங்குமரன். நடுநடுவே முனிவர் முனகினார். கனவில் உளறுவது போல் சொற்கள் அரைகுறையாக வெளி வந்தன. அந்தச் சொற்களைத் திரட்டி, "பாவிகளே! என்னைக் கொல்லாதீர்கள். உங்கள் தீமைகளுக்கு உங்களை என்றாவது படைத்தவன் தண்டிக்காமல் விடமாட்டான்! ... பாவிகளே..." என்று இளங்குமரன் ஒருவிதமாகக் கூட்டி உணர முயன்றான். முல்லையின் குறுகுறுப்பான இயல்புக்கு முன் எவ்வளவு கடுமையான சுபாவமுள்ளவருக்கும் அவளிடம் சிரித்து விளையாடிப் பேசவேண்டுமென்று தோன்றுமே ஒழியக் கடுமையாகவோ, துயரமாகவோ, இருந்தாலும் அவற்றுக்குரிய பேச்சு எழாது. அவளிடமிருந்த அதிசயப்புதுக் கவர்ச்சி அது. அதனால்தானோ என்னவோ இளங்குமரனும் சிரிப்பும், கலகலப்புமாக அவளிடம் பேசினானே தவிர உண்மையில் கதக் கண்ணனுடைய வீட்டுக்குள் நுழையும் போதும் சரி, நுழைந்த பின்னும் சரி, அவன் மனம் மிகவும் குழப்பமாயிருந்தது.

முல்லையும், இளங்குமரனும், செய்த உபசாரங்களை ஏற்றுக் கொண்டு முனிவர் தெளிவு பெற்றுக் கண் விழித்தபோது, இரவு மூன்றாம் யாமத்துக்கு ஓடிக்கொண்டிருந்தது. "முல்லை! முதலில் நீ போய் உறங்கு. மற்றவற்றைக் காலையில் பார்த்துக் கொள்ளலாம். உனக்கு நிறையத் தொல்லை கொடுத்து விட்டேன்" என்று இளங்குமரன் அவளை அனுப்ப முயன்றும் அவள் விடுகிற வழியாயில்லை.



"உங்கள் காயங்களை மறந்து விட்டீர்களே? ஆறினால்தானே விழுப்புண் என்று பெருமை கொண்டாடலாம். பச்சைக் காயமாகவே இருந்தால் அந்தப் பெருமையும் கொண்டாட முடியாதே?" என்று கூறி நகைத்தாள் முல்லை. அதன்பின் அவன் காயங்களுக்கு மருந்து கொடுத்துப் போட்டுக் கொள்வதையும் இருந்து பார்த்துவிட்டுத்தான் அவள் படுக்கச் சென்றாள். படுத்தவுடன் அயர்ந்து நன்றாக உறங்கிவிட்டாள். இரண்டு மூன்று நாழிகைத் தூக்கத்துக்குப் பின் அவளுக்கு அரைகுறையாக ஒரு விழிப்பு வந்தபோது மிக அருகில் மெல்லிய குரலில் யாரோ விசும்பி அழுகிற ஒலி கேட்டுத் திகைத்தாள். திகைப்பில் நன்றாக விழிப்பு வந்தது அவளுக்கு. சிலம்பும் வளைகளும் ஒலிக்காமல் கவனமாக எழுந்து பார்த்தாள். இளங்குமரனும், அருட்செல்வ முனிவரும் படுத்திருந்த பகுதியிலிருந்து அந்த ஒலி வருவதாக அவளுக்குத் தோன்றியது. தீபச் சுடரைப் பெரிதாக்கி எடுத்துக் கொண்டு போய்ப் பார்க்கலாமா என்று அவள் உள்ளத்தில் ஆவல் எழுந்தது. அப்படிப் பார்ப்பது அநாகரிகமாகவோ, அசந்தர்ப்பமாகவோ முடிந்துவிட்டால் வீட்டில் வந்து தங்கியுள்ள விருந்தினர்கள் மனம் புண்பட நேருமோ என்று அந்த எண்ணத்தைக் கைவிட்டாள் முல்லை.

அவன் மேலும் உற்றுக் கேட்டதில் அழுகுரல் முனிவருடையதாக இருந்தது.

"இளங்குமரா! அதைச் சொல்லி விட்டால் நான் உயிரோடு இருக்க முடியாது. உயிரோடு இருக்க வேண்டு மானால் அதைச் சொல்ல முடியாது. அப்படிப்பட்ட இரகசியத்தைக் கேட்டுக் கேட்டு என் நிம்மதியும் மனத் தூய்மை யும் கெட்டு வேதனைப்படச் செய்வதை விட உன் கைகளாலேயே என்னைக் கொன்றுவிடு. வேறு வழியில்லை!"

"சுவாமி! அப்படிக் கூறாதீர்கள். நான் தவறாக ஏதேனும் கேட்டிருந்தால் என்னை மன்னியுங்கள்."

"மன்னிப்பதிருக்கட்டும்! நீ நெடுங் காலம் உயிரோடு வாழ வேண்டும், இளங்குமரா! அது என் இலட்சியம். உனக்கு அந்த உண்மையைச் சிறிது கூறி விட்டாலும் நாலுபுறமும், உன்னையும், என்னையும் பிணமாக்கிவிடத் துடிக்கும் கைகள் நீளும் என்பதில் சந்தேகமே இல்லை." — இவ்வாறு சொல்லிவிட்டு முனிவர் சிறுபிள்ளை போல் குலுங்கி அழும் ஒலி கேட்டது.

"சுவாமீ! கெட்ட கனவு கண்டது போல் நடந்ததையும், நான் உங்களிடம் கேட்டதையும் மறந்துவிடுங்கள். நிம்மதி யாகச் சிறிது நேரமாவது உறங்குங்கள்."

"நிம்மதியான உறக்கமா? உன்னைச் சிறு குழந்தையாக எடுத்து வளர்க்க ஆரம்பித்த நாளிலிருந்து அதைப் பற்றி நான் மறந்துவிட்டேன், இளங்குமரா!"

இருளில் எழுந்து அமர்ந்து கேட்டுக் கொண்டிருந்த முல்லைக்கு முதலும், தொடர்பும் முடிவும் இல்லாத இந்த உரையாடலிலிருந்து ஒன்றும் புரிய வில்லை. ஆனால் பொதுவில் அவளுக்கு அதைக் கேட்டதிலிருந்து ஏதோ திகைப் பாகவும், பயமாகவுமிருந்தது. (தொடரும்)

# படித்துப் பாருங்கள்

## கல்கி புராணம்

கல்கி புராணம் தமிழில் அச்சிடப்படுவது இதுதான் முதல் தடவை. பதினெட்டுப் புராணங்களையும் பிரசுரிப்பதையும் உபந்நி யாஸங்களால் பிரசாரம் செய்வதையும் முக்கியமான கைங்கரியமாகக் கைக்கொண் டுள்ளவர் ஸ்ரீவத்ஸ வெ. ஸோமதேவ சர்மா. வெகுநாட்களாகத் தேடியும் கல்கி புராணத் தின் மூலம் கிடைக்காமலிருந்து கடைசியில் பம்பாயில் ஹிந்தி அநுவாதத்துடன் 1954-ல் பிரசுரிக்கப்பட்ட பிரதி கிடைத்து அதை ஆதாரமாகக் கொண்டு இந் நூலை சர்மா அவர்கள் தமிழ் மொழிபெயர்ப்பாக வெளி யிட்டிருக்கிறார். கலியுகத்தில் எதிர்காலத் தில் ஏற்படப்போகும் கல்கி அவதாரத்தைப் பற்றி இது கூறுகிறது. சூரியவம்ச சந்திர வம்ச வர்ணனைகளும், ஸ்ரீ ராமகதையும், கிருஷ்ண கதையும் மிக ருசிகரமான சில அபூர்வ நீதிக்கதைகளும் இதில் காணப்படு கின்றன. மகா புராணங்கள் பதினெட்டு, உப புராணங்கள் பதினெட்டு, கல்கி புராணம் ஸ்ரீமத் பாகவதத்தின் உப புராணம். இதை ஆஸ்திகர்கள் வரவேற்று ஆதரிப்பார்கள் என்பதில் ஐயமில்லை. - அன்னு

ஆசிரியர்: ஸ்ரீவத்ஸ வெ. ஸோமதேவ சர்மா, 2, ஸ்டேஷன் ரோடு, சென்னை - 17. விலை ரூ. 2.

## மாதவி

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் உலகம், இப்போதுள்ளதைவிட நாகரிகம் அடைந் திருந்ததென்றும், வானவெளி கிரகங்களின் கேலித் தாக்குதல் காரணமாக, அந்நாகரிக உலகின் பெரும் பகுதி மண்ணோடு மண்ணா கப் புதைந்து விட்டதென்றும், பொங்கும் கடல் கொண்டு விட்டதென்றும் ஆராய்ச்சி யாளர்கள் கூறுவார்கள்.

அநாதிகாலம் தொட்டுப் பாலைவன மணல் மூடிய நகரங்கள், கடல்கொண்ட நகரங்கள், மண்மூடிய நகரங்கள் எத்தனையோ யார் கண்டார்கள்? மாதவி என்னும் இந்த நாவ லும் மேற்படி ஊழிக்கால விளைவுகளில் ஒன்றை ஆதாரமாக வைத்துப் புனையப் பட்டதுதான்.

மேல்நாட்டு ஆசிரியர்கள் பலரும், பிரளய காலக் கதைகள் எழுதியிருக்கிறார்கள். ஆனால் அவர்களுக்கெல்லாம் கிடைக்காத ஒரு வாய்ப்பு, இந்நாட்டுக்கு உண்டு. மறைந்த நாகரிகச் சின்னங்கள் பலவற்றை இந்நாட்டில் கண்டு பிடித்திருக்கிறார்கள். மொகஞ்சதாரோ அவற்றில் ஒன்று. அஜந்தா ஓவியச் சித்திரங்கள் அந்தப் பழம் பெரும் நாகரிக உணர்ச்சியின் கதைகளைத் தான் ஓரளவு எடுத்துரைக்கின்றன வெல லாம். திரு க. நா. சு. அஜந்தா ஓவியங் களின் வழியே, சிந்தனையை ஓடவிட்டுப் பழமைச் சரித்திர நாவல் ஒன்றை சிருஷ்டித் திருக்கிறார், இந்த நாவில். செருக்கும், சீரும் சிறப்பும், களியாட்டமும் காதலும் விளங்கும் நகரம் ஒன்று இயற்கை மாதேவியின் கோபத் துக்கு இலக்காகி விடுகிறது. இந்தக் கோரக் காட்சியை ஒரு மலை உச்சியிலுள்ள கோவில் வெளி முற்றத்திலிருந்து மாதவியும் அவள் காதலன் தேவமித்திரனும் பார்த்துப் பதறி நிற்கிறார்கள். முந்நூறு பக்கங்களிலும்சலிப்புத் தட்டக்கூடிய வீண் வருணனைகளோ, வார்த் தைப் பந்தல்களோ இல்லாமல் விறுவிறுப் பாக அமைந்துள்ளது இந்நாவல்.

ஆசிரியர்: க. நா. சுப்ரமணியம், கிடைக்கு மிடம், தமிழ்ப் புத்தகாலயம், பைகிராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி, சென்னை - 5, விலை ரூ. 5.00.

# அரசிளங்குமரி

**காந்தன்**



அறிவழகன் ஓர் ஆணழகன்; அவன் தங்கை அன்புக்கரசி ஒரு பெண்ணழகி. இவர்கள் இருவரைச் சுற்றித்தான் இந்தப் படம் வளர்ந்து உருவாகி யிருக்கிறது.

தளபதி வெற்றிவேலனுக்கும் அன்புக்கரசிக்கும் இடையில் காதல் பிறந்து, வளர்ந்து, கல்யாணத்தில் முடிகிறது. ஆனால் கயவனான தளபதி அரசிளங்குமரியாகிய அழகு ராணியைக் காதலிக்கிறான். அவளை அடையச் சூழ்ச்சிகள் பல புரிகிறான். அவனது சதிக்கு முதல் பலியாகிறது அன்புக்கரசியின் இன்ப வாழ்வு. ஒரு குழந்தைக்குத் தாயான அவளை உதறித் தள்ளி விடுகிறான், தளபதி. உண்மையில் அவனுக்குப் பதியிடம் பக்தி யிருக்குமானால், அவளை மறந்து விடுவதோடு அல்லாமல், அவன் தன்னை மணந்ததைப் பற்றியும் யாரிடமும் வெளியிடக் கூடாது என்று வாக்குறுதி பெறுகிறான். தன்னை அவமதித்து ஒதுக்கிய கணவன் வெற்றிவேலனின் உயிரை அன்புக்கரசி இரண்டு முறை காப்பாற்றி விடுகிறாள். அப்படியும் அவன் அவளிடம் இரக்கம் கொள்ளவில்லை. தங்கையின் நல் வாழ்வுக்காக வெகுண்டு எழுகிறான், அறிவழகன். வெற்றிவேலனுக்குப் புத்தி புகட்டுவதற்காக, அவன் தந்தையிடமே வாட் பயிற்சி பெறுகிறான்.

வெற்றிவேலனாக வரும் எம். என். நம்பியார் முதலில் சில காட்சிகள் வரையில் நல்லவனாக இருந்து பிறகு அடியோடு அயோக்கியனாக மாறி விடுகிறார். இரு சந்தர்ப்பங்களிலும் நன்றாக நடித்திருக்கிறார்.

எம். ஜி. ராமச்சந்திரன் அறிவழகன். அந்தப் பாகம் அவருக்குப் பொருத்தமாயிருக்கிறது. அருமைத் தங்கை அன்புக்கரசியிடம் அன்பாகப் பழகும் போதும், அரசிளங்குமரி அழகு ராணியுடன் ஆசையோடு ஆடிப் பாடிக் காதல் புரிந்த போதும் தமது பொறுப்பை அழகாக நிறைவேற்றி யிருக்கிறார். குடியானவனாக வந்து வாட் பயிற்சி பெறுபவன் மாதிரி வெற்றிவேலனிடம் தோற்றுவிடுகிற சமயங்களிலும், தங்கையைத் தேடித் தவித்த போதும், இறுதியில் வெற்றிவேலன் மீது கொல்லும் புலியின் கொடுமையுடன் வாட்போரிட்ட போதும் பாராட்டும்வண்ணம் இருந்தது அவர் நடிப்பு.

ராஜசுலோசனாதான் அழகு ராணி. ஆடிப் பாடி அறிவழகனிடம் காதல் புரிந்து கடி மணமும் புரிந்துகொள்கிறார்.

ஜுபிடர் பிக்சர்ஸாரின் ''அரசிளங்குமரி''யில் தங்கவேலுவின் ஹாஸ்ய நடிப்பு மிகவும் நன்று யிருக்கிறது. சலவைத் தொழிலாளராக வந்து சிரிக்கச் சிரிக்கப் பேசி வெளுத்துக் கட்டி யிருக்கிறார்!

தங்கவேலுவின் நமக்கையாக வரும் என். எஸ். கே. மதுரம் நன்றாய் நடித்திருக்கிறார் என்று சொல்ல வேண்டியதில்லை.

''அரசிளங்குமரி''யில் முக்கியமான பாகம் அன்புக்கரசி. அதை ஏற்று நடிப்பவர் பத்மினி என்றாலே போதும். அதில் வரும் சோகம், பாசம், காதல், வீரம், தீரம் எல்லாம் எப்படி வெளிப்பட்டிருக்கும் என்று ரஸிகர்கள் ஊகித்துக் கொள்ளலாம். கொண்டவன் தன்னைக் கொல்லத் துணிந்தாலும், அவனை வெல்லத் துணியாத பண்பு படைத்தவள் அன்புக்கரசி. அந்த அரிய பண்பைப் பத்மினி அற்புதமாக முக பாவங்களிலேயே வெளியிடுகிறார்.

நாகேந்திரராவ் வெற்றிவேலனின் தந்தையாக வருகிறார். அவருக்கு ஏற்ற பாகம் தான். நன்றாகச் செய்திருக்கிறார்.

கதையில் புதுமை யென்று கூறிப் பூரிப் படைய எதுவும் இல்லை என்றாலும், பழமை என்று பகர்ந்து ஒதுக்கி விடும்படியாகவும் இல்லை. வசனம் நன்றாயிருக்கிறது.

எம். ஜி. ஆரும், நம்பியாரும் போரிடும் கடைசிக் காட்சி உணர்ச்சி மிகுந்த கட்டமானாலும், மிகவும் நீண்டு போய்ப் பொறுமையைச் சோதிக்கிறது. அச் சமயம் பத்மினி கையில் குழந்தையுடன் அலறுவது வேதனையாயிருக்கிறது. அக் காட்சியில் கத்திரிக்கோலைப் போட்டு, சரி செய்திருந்தால் ''அரசிளங்குமரி'' அழகாகவே அமைந்திருக்கும்.






சமீபத்தில் நான் ஒரு தமிழ்ப் படம் பார்த்தேன். "இரு மனம் கலந்தால் திருமணம்" என்பது படத்தின் பெயர். இந்த நீண்ட தலைப்பைப் படித்து முடிப்பதற்குள் அந்தப் படம் வந்த சுவடு தெரியாமல் ஓடிப் போய் விட்டது!

"பாதை தெரியுது பார்!" என்று ஒரு படம் பார்த்தேன். அதில் ஒரு மண்ணும் தெரியவில்லை. இதையும் ஒரு படம் என்று தயாரித்திருக்கிறார்களே என்ற அநுதாபத்துடன் படத்தைப் பார்த்துத் தொலைத்தேன்.

"புதிய பாதை" என்றொரு படம் வந்தது. ஜெமினி கணேசனும் சாவித்திரியும் நடித்திருக்கிறார்கள் என்பதைத் தவிர படத்தில் விசேஷம் எதுவும் இல்லை.

இதை யெல்லாம் பார்த்து அலுத்துப் போயிருந்த சமயத்தில் ஒரு நல்ல படத்தைப் பார்க்கும் வாய்ப்புக் கிடைத்தது. அதுதான் பிரபுராம் பிக்சர்ஸாரின் "விடிவெள்ளி."

படத்தின் ஆரம்பமே பரபரப்பை ஊட்டுவதாயிருக்கிறது. ஓர் அழகிய இளநங்கையின் கழுத்திலிருந்த வைர மாலையை நள்ளிரவில் சந்துரு என்ற வாலிபன் கவர்ந்து கொண்டு ஓடுகிறான். அவன் தங்கை சீதாவின் திருமணம் அந்த மாலை இல்லாததால்தான் தடைப்பட்டு நிற்கிறது. திருட்டு மாலையைத் தங்கைக்கு அணிவித்து மணம் முடித்து விடுகிறான். பிறகு அவனுக்குச் சென்னையில் ஒரு கம்பெனியில் வேலை கிடைக்கவே அம்மாவை அழைத்துக் கொண்டு அங்கு போய் விடுகிறான். அமைதியாயிருக்க வேண்டிய இத்தருணத்தில் அவன் வாழ்வில் சூறாவளி அடிக்கிறது. அந்த வைர மாலையின் முகப்புக்குள்ளிருந்த வாலிபனின் புகைப் படம் சீதாவை வாழாவெட்டியாக்கி விடுகிறது. சந்துருவுக்கும், கம்பெனி முதலாளியின் மகள் சித்ராவுக்கும் காதல் உண்டாகிறது. தான் திருடிய மாலை சித்ராவினுடையது என்பது சந்துருவுக்குத் தெரியாது.

தங்கையின் நல் வாழ்வுக்காகத் தான் செய்த திருட்டுக் குற்றத்தை மறக்க முடியாமல் தவிக்கவும், வாழ்விழந்து நிற்கும் தங்கையைக் கண்டு விம்மி வெடிக்கவும், நடந்த விவரங்களை யாரிடமும் சொல்ல முடியாமல் துடிக்கவும் ஒரு பாத்திரம் வரவேண்டுமானால் அதற்குச் சிவாஜி கணேசன்தானே தகுந்தவர்?



எம். என். ராஜம் சீதாவாக வருகிறார். உருக்கமாக நடிக்கிறார். சீதாவின் கணவனாக வரும் பாலாஜி நன்றாக நடித்திருக்கிறார்.

பி. சரோஜா தேவிக்குச் சித்ராவின் பாகம் நன்கு பொருந்துகிறது. ஆடவும் பாடவும் காதலனுடன் கைகோத்துக் கொண்டு ஓடவும் அவருக்குச் சந்தர்ப்பம் கிடைக்கிறது. பாத்திரத்தை உணர்ந்து நன்றாய் நடிக்கிறார்.

சித்ராவின் தந்தையாக வருபவர் எஸ். வி. ரங்காராவ். அவர் நடிப்பு நன்றாயிருக்கிறது.

நல்லபடியாக ஆரம்பமாகும் கதையில் ஒரு பெரிய குறையும் இருக்கிறது. படிப்பும் பண்பும் உள்ள வயது வந்த ஒரு பெண்ணை அவள் தகப்பனார் தாம் ஏற்பாடு செய்யும் வரனைத்தான் அவள் மணந்து கொள்ள வேண்டுமென்று கட்டாயப்படுத்துவது கொஞ்சம்கூட நன்றாயில்லை. தகப்பனாரின் கட்டாயத்தினால் நிகழவிருக்கும் திருமண முகூர்த்தத்தின் போது மணப் பந்தல் தீப்பற்றி விடுகிறது. அறையில் அடைபட்டிருக்கும் சரோஜா தேவியைச் சிவாஜி காப்பாற்றுகிறார். தகப்பனார் அவளைப் பூட்டி வைக்காவிட்டால் சிவாஜிக்கு ஒரு நல்ல சான்ஸ் போயிருக்கும்!

தீக்காட்சியைச் சிறப்பாகப் படமாக்கியிருக்கிறார்கள். ஆனால் அதை அதிக நேரம் நீட்டி, முழுக்கி எல்லாருடைய பொறுமையையும் சோதித்திருக்க வேண்டியதில்லை!

கார் டிரைவர் பாபுவை யாரும் மறக்க மாட்டார்கள். டைப்பிஸ்டுக்குத் தான் எழுதிய காதல் கடிதம் எஜமான் கையில் சிக்க இருந்த தருணத்தில் மின்சார விசிறியை இயக்கி, கடிதங்களைப் பறக்கச் செய்து தன் கடிதத்தை மட்டும் எடுத்துக் கொள்ளும் பாபுவின் சாமர்த்தியமும் மறக்க முடியாதது தான். அது ஒரு சிறிய பாகமாயிருந்தாலும் தம்முடைய திறமையான நடிப்பினால் டி. ஆர். ராமச்சந்திரன் தம்மை ஒரு முக்கிய பாத்திரமாகச் செய்து கொண்டு விட்டார்.

"பண்ணோடு பிறந்தது தாளம்" என்ற பாட்டும், "நான் வாழ்ந்ததும் உன்னாலே" என்ற பாட்டும் நன்றாயிருக்கின்றன.

கதை, வசனம், டைரக்ஷன் ஆகிய மூன்று பொறுப்புக்களையும் ஸ்ரீதர் ஏற்றுச் சிறப்பாக நிறைவேற்றி யிருக்கிறார்.

உருக்கமான கதையும், உயர்வான நடிப்பும் சேர்ந்து தமிழ்ப் பட உலகில் "விடிவெள்ளி" உதயமாகி யிருக்கிறது!



# குருதேவரின் குரல்

**பேராசிரியர்: அ. சீநிவாச ராகவன்**

பாரதியார் பாடியது உங்களுக்கு ஞாபகம் இருக்கும்:

> பிள்ளைக் கனி அமுதே—கண்ணம்மா
> பேசும் பொற் சித்திரமே.
> அள்ளி அணைத்திடவே—என்முன்னே
> ஆடி வருந் தேனே.

குழந்தையை அமுதமாக, பேசுகின்ற சித்திரமாக, அள்ளி அணைக்கும்படிக்கு நம் முன்னே ஆடி வரும் தேனாகப் பாரதியார் பார்க்கிறார். தேன் ஆடி வருமா, சித்திரம் பேசுமா, அமுதமாவது அமுதம், அதை யாராவது பார்த்திருக்கிறார்களா என்றெல்லாம் 'அறிவாராய்ச்சி' செய்பவர்களைப் பற்றி நாம் கவலைப்பட வேண்டாம். இவர்கள், தப்பித் தவறிக்கூட, கவிதை நிழலில் ஒதுங்க மறுப்பவர்கள். கண்ணால் காண்பதே உண்மை என்பது இவர்கள் கொள்கை. யதார்த்தம், உள்ளது உள்ளபடி என்ற சிறையில் தம்மைத் தாமே அடைத்துக் கொண்டு, அதுவே சொர்க்கம் என்று ஏமாறும் இவர்களுக்கு உய்வில்லை. உணர்ச்சிக் கண்ணால் பார்ப்பது என்ற ஒன்று இவர்களுக்குத் தெரியவே தெரியாது.

இவர்களைக் கரையேற்றி, கவிதை உலகத்துக்கு அழைத்துச் செல்வது, நாய் வாலைக் குணக்கெடுக்கும் கணக்குத்தான். இவர்களை விட்டு விடுவோம்.

வேறு சிலர் இருக்கிறார்கள். அவர்கள் சொல்கிறார்கள்: 'குழந்தையைக் கண்டு பரவசம் அடைந்தால், பாரதியார் பேசுவதைப் போலத்தான் பேச முடியும். உணர்ச்சியின் வேகத்தில், குழந்தையைத் தேனாகவும், சித்திரமாகவும், அமுதமாகவும் கவிஞர் எண்ணுகிறார். அது சரிதான். ஆனால் அப்படிப் பரவசம் அடைவதற்குக் குழந்தையிடம் என்ன இருக்கிறது?'

இதைக் கேட்டதும் நமக்குத் 'திக்' கென்கிறது. 'என்ன சொல்கிறீர்கள்?' என்று கேட்கிறோம். குழந்தையைக் கிடைத்தற்கு அரிய செல்வமாக, தெய்வமாகப் பார்க்கப் பழகிய நமக்கு—அப்படித்தானே பெரியாழ்வாரும் பார்த்திருக்கிறார்! - இவர்கள் பேச்சு புரியவில்லை. 'என்ன சொல்கிறீர்கள்?' என்று கேட்கிறோம்.

'சொல்வதற் கென்ன இருக்கிறது? குழந்தை என்பது, விஞ்ஞான ரீதியாகப் பார்த்தால், இயற்கைச் சக்திகளின் ஒரு விளைவுதானே? உயிரினங்கள் அனைத்துக்கும் இனப் பெருக்கம் என்பது தவிர்க்க முடியாத ஒரு நியதி. இதன் விச்சுத்தானே குழந்தை என்பது? மீனுக்கும் தேனுக்கும் குஞ்சு, யானைக்கும் பூனைக்கும் குட்டி, மனிதனுக்குக் குழந்தை, அவ்வளவு தானே? இதைப் பிரமாதப் படுத்துவானேன்? பொருளாதார முறையில் பார்த்தால், குழந்தை என்பது இன்னொரு வயிறு: அதாவது, இப்போதே போதாமல் இருக்கும் உணவு கரைவதற்கு இன்னொரு வழி. வீண் பொறுப்பு, வெற்றுச் சுமை, பயனில்லாத தியாகம் - குழந்தையால் நமக்குக் கிடைப்பதெல்லாம் இவையே. குழந்தையைக் காப்பாற்ற வேண்டி இருக்கிறது, வளர்க்கவேண்டி இருக்கிறது. இல்லாவிட்டால் மனித குலம் அழிந்துவிடுமே! அதற்காக, ஏதோ கஷ்டப்படுகிறோம். அவ்வளவுதான்' என்று இந்தப் பயன் - வாதிகள் பேசும்போது, நமக்கு நெஞ்சை அடைக்கிறது.

'என் சிறு குழந்தை எனக்கு அமுதம். அவனே என்னுடைய தெய்வம். இதோ, என்னையா, இல்லை, இல்லை, தன்னுடைய சிறு கைகளை நீட்டிச் சந்திரனை அழைக்கின்றான்.

என் சிறு குட்டன் எனக்கு ஓர் இன்னமுதம்.
எம்பிரான்,
தன் சிறு கைகளால் காட்டிக் காட்டி
அழைக்கின்றான்'

என்று பெரியாழ்வார் துள்ளுகிறாரே, அது பேதைமையா?

'கிங்கிணி கட்டிக் கிறிகட்டிக் கையினில்
கங்கணம் இட்டுக் கழுத்தில் தொடர்கட்டி
தன் கணத்தாலே சதிரா நடந்து வந்து
என் கண்ணன் என்னைப் புறம் புல்குவான்
எம்பிரான் என்னைப் புறம் புல்குவான்'

குழந்தையா, என்னை ஆளுடைய இறைவன் அல்லவா என்னைப் பின்புறமாக வந்து கட்டிக் கொள்கிறான்' என்று அவர் மெய்சிலிர்க்கிறாரே, அது அறியாமையா?

'கொஞ்சம் இருங்கள், ஐயா! ஏன் வீணாக அலட்டிக் கொள்ளுகிறீர்கள்? பெரியாழ்வார் கடவுளைக் குழந்தையாகப் பார்த்தார். குழந்தையைக் கடவுளாகக் கண்டாரா, இல்லையே?' என்று தர்க்கவாதி நம்மைக் கேட்கிறான்.

இதற்கு என்ன சொல்வது என்று திகைக்கும் நமக்கு, உதவி செய்ய வருகிறார் குருதேவர் ரவீந்திரநாத தாகூர்.

'கடவுளைக் குழந்தையாகக் கண்டார்கள் என்று சொல்கிறாய், இல்லையா? உண்மைதான். எத்தனையோ பக்தர்கள் அப்படிக் கண்டிருக்கிறார்கள். ஆனால் குழந்தையைக் கடவுளாகவும் எத்தனையோ பேர் கண்டிருக்கிறார்கள். அவர்களில் நானும் ஒருவன். ஆம், ஒவ்வொரு குழந்தையும் கடவுள்தான். தன் களங்கமற்ற தன்மையால், ஒவ்வொரு தலைமுறையிலும், மனிதக் குலத்தைக் காத்து வரும் தெய்வமே குழந்தை.' இப்படித்தான் தாகூருடைய பேச்சு அமையும். அமைந்திருக்கிறதா என்று பார்ப்போம்.

வயது முதிர்ந்தவர்கள், பெரியவர்கள் என்று பேசுகிறோமே, அவர்களால் ஆன இந்த உலகத்தில் எங்கும் தென்படுவது என்ன? ஒருவரையொருவர் பார்த்து, நமக்குத் தீங்கு வருமோ என்று சந்தேகப்படுவது, பயப்படுவது, ஓயாத பூசல், ஒழியாத சச்சரவு - இவற்றைத் தானே உலகமெங்கும் காண்கிறோம்? இந்த அவலச் சந்தையின் இருள் நடுவில், குழந்தை என்ற நந்தாவிளக்கு ஒளி வீசுகிறது. இதனால் நம்முடைய வாட்டம் தணிகிறது; இரைச்சல் ஒடுங்குகிறது; மோனம் என்ற அரிய தவநிலை சித்தியாகி விடுகிறது.

இதைத் தாகூர் சொல்கிறார்:

ஓயாத பூசல். ஒழியாத சச்சரவு.
வீயாத ஐயம். விளியாத பேரவலம்.

> சிலர் மதத்தையே அழித்துவிட விரும்புகிறார்கள். மதம் முற்றிலும் பயனற்றதாகவும், பொய்யானதாகவும் ஆகிவிடுமானால் பாம்பு சட்டை கழற்றுவதுபோல் அதை அழித்துவிட வேண்டியது அவசியம்தான். ஆனால் பாம்பு சட்டையை நீக்கி விடுகிறதே யன்றி, அது இறந்து போவதில்லை. அதுபோல் மதத்தில் சேர்ந்த அழுக்குகளை நீக்கிவிட வேண்டுமே யன்றி, மதத்தை அழித்துவிட வேண்டியதில்லை.
> - ராஜாஜி

சந்திக்கும் பேய் இரைச்சற் சந்தை இருள்
நடுவே
நந்தா விளக்காய், நடுங்காத பொற்சுடராய்
வந்து நிற்பாய் செல்வமே. வாட்டம்
தணிந்ததடா!
முந்தும் களிக்கடலில் மோனம் முளைத்ததடா!

இந்த உலகத்திலேதான் எவ்வளவு கொடுமை! மக்கள் ஆசையில் தவிக்கிறார்கள்; பொறாமையில் வெம்புகிறார்கள்; பிறரையும், தங்களையும் நாசமாக்கும் குரூரச் செயலில் அழுந்துகிறார்கள்; இரத்தம் தோயத் துடிக்கும் போர்வாளைப் போன்ற சொல்லை, வாய்க்குள் மடக்கி வைக்கிறார்கள்; பிறகு, அதை வீசி, மற்றவர் நெஞ்சைப் பிளக்கிறார்கள்; வஞ்சம் தீர்த்துக் கொள்வதிலே முனைகிறார்கள். இவர்களுடைய உள்ளம், ஆறாத பெருந் தீயாய்க் காய்கிறது. இந்தத் தீயின் நடுவிலே, அன்புருவாகிய குழந்தை எங்கிருந்தோ வந்து நிற்கிறது. இந்தத் தீயையும், தனது நிர்மலத் தன்மையால் அடக்குகிறது. மக்கள் நெஞ்சிலே, அந்த ஓயாத சஞ்சலப் பாழிலே, அமைதியை ஊன்றுகிறது. குழந்தையின் களங்கமற்ற முகத்தைப் பார்த்தாவது, உலகத்தை உள்ளபடி உணரும் ஞானம், தீமையை ஒதுக்குகின்ற உறுதி, இவர்களுக்குக் கிட்டாதா? கிட்டட்டும். 'என்னை எடுத்து அணைத்துக் கொள்' என்று தனது பிஞ்சுக் கையை நீட்டி, சிறு குழந்தை, மக்கள் உள்ளத்தில் அன்பை ஊற்றெடுக்கச் செய்கிறதே, அந்த அன்பிலே பழகிப் பழகி, உலகம் அனைத்தையும் அன்பால் அணைக்க அவர்கள் முற்பட மாட்டார்களா? முற்படட்டும். அப்போது உலகம் உய்யும். குழந்தை என்ற தெய்வம் நமது வீட்டு வாசலுக்கு வந்து அருள்கின்ற முறை இது.

இந்தக் கருத்தைத் தாகூர் பாடுகிறார்:

ஆசையிலே வீழ்வார்.
அழுக்காற்றில் வெம்பிடுவார்.

நாசக் குரூரம்
  நயந்திடுவோர், செங்குருதி
தோயத் துடிக்கும் கூர்
  வாளைப் போல் சொல்லையெலாம்
வாயில் மடக்கிவைத்து
  வஞ்சம் பல புரிவோர்.
ஆறாத் தழல் உலகத்தில்,
  அன்புருவே, வந்து நின்று,
மாறாத தன்மை
  மலர் விழியால் பாலித்து,
வெந்த பகற் பொழுதின்
  வெஞ்சமரை மன்னிக்கும்
அந்தி அருள் போல்
  அமைதி பொழிந்து விடு.
உன் முகத்தைப் பார்த்து இவ்
  உலகப் பொருள் உண்மைத்
தன்மை உணரும்
  தகுதி இவர் பெறுக!
அன்பினால் உன்னை
  அணைத்துப் பழகியதால்
அன்பால் உலகை
  அளிக்கும் திறன் உறுக!*

குழந்தையை வளர்க்கிறேன், காப்பாற்றுகிறேன் என்று பெருமையடித்துக் கொள்ளும் பேதையைப் பார்த்துக் குருதேவர் சொல்லும் கருத்து இதுதான்: 'அப்பனே, நீ குழந்தையை வளர்க்கிறாயோ என்னவோ, குழந்தை என்ற அன்புத் தெய்வம், களங்கமற்ற அந்த உயிர், உன்னை உயர்த்துகிறது. உன் மனிதத்துவத்தைக் காப்பாற்றுகிறது. இதை வாழ்த்துவது உன் கடமை, உனக்கு எல்லையற்ற நன்மை.'

இதையே பாடுகிறார் தாகூர்:

வாழி இந்தப் பிஞ்சுள்ளம்,
  வாழி இந்த வெள்ளை மனம்;
வாழி மண்ணை முத்தமிட
  வானைக் கொணர்ந்த இந்த உயிர்.

* * *

புழுதி என்றே மண்ணை இவன்
  புறக்கணிக்கப் பழக விடேல்.
தொழுது பொன்னை அதன் பின்னே
  சுற்றித் திரியப் பயில விடேல்.
வழிகள் நூறு பின்னும் இருள்
  வாழ்க்கைச் சந்தை வந்துவிடின்
மழலைச் செல்வன் இவனை நீ
  மார்போடு அணைத்து வாழ்த்தய்யா!†

---

† இளம்பிறை - வாழ்த்து
The Crescent Moon: Benediction.
* The Crescent Moon The Child Angel.
இளம்பிறை: குழந்தை என்ற தேவதூதன்


மரகதச்சிலை
கதை: வாண்டுமாமா
சித்திரம்: விநு
இந்த மழையில் பிரயாணம் வேண்டாம். அதோ ஒரு குகை....
பெரு மழையால் ஆதித்தனின் பிரயாணம் தடைப்பட, கானின் யோசனைப்படி ஒரு குகைக்குள் நுழைகிறார்கள். குகையின் மறுபுறம் முற்றிலும் புதியதொரு உலகம் காணப்படுகிறது.
ஆதித்தா! ஏதோ ஒரு பயங்கரமான மிருகம் நம்மை நோக்கி வருகிறது.
நீண்ட ஒட்டகத்தையும் மிஞ்சும்படியான வேகத்துடன் அது நம்மைத் துரத்தி வருகிறது. அதன் கர்ஜனை காதைச் செவிடாக்கி விடும் போலிருக்கிறதே.
ஓடுங்கள்! பார்த்தாலே குலை நடுங்க வைக்கும் இந்தப் பயங்கரப் பிராணியிடமிருந்து நாம் தப்பியாக வேண்டும்.


எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது.
காட்டுக் கொடிகளைப் பிணைத்து நான் ஒரு பெரிய பொறி தயாரித்தேன்.
ஆதித்தன் மிருகத்தைச் சீண்ட...
வா..வா இப்படித் தான் இந்த வழியாக வா...
சபாஷ், ஆதித்தா! அது நம் பொறிக்குள் வந்து விட்டது. இந்தக் கொடியை இழுத்தால் போதும், அதன் உடலைக் காட்டுக் கொடிகள் பிணைத்து விடும்.
காடு கிடுகிடுக்க இப்படி ஆர்ப்பரிக்கிறதே! கட்டுக்களை அறுத்தாலும் வியப்பில்லை.....
என் கத்தி அதன் உடலில் சிறு காயத்தைக்கூட உண்டாக்காது. இந்த மரத்தைச் சீவிக் கூறாக்கி அதன் உடலில் பாய்ச்சித்தான் அதைக் கொல்ல வேண்டும்
ஆதித்தா வெற்றி வாகை சூடிக் கொண்டு விட்டாய், பலே!
தொடரும்

# ஸ்வாமிமலை ஸ்ரீ ஸ்வாமிநாத ஸ்வாமி கோடி அர்ச்சனை பூர்த்தி விழா

✲

அகண்ட ஜோதி ஸ்வரூபியாய் வேண்டுவோர் வேண்டுவதை எல்லாம் கொடுக்கும் முழுமுதற் கடவுளாய், புராணங்களில் விசேஷ மகிமையுடன் உபாஸிக்கப்பட்டவராய், சகல துக்கங்களையும் நிவர்த்திப்பவராய், சகல ஸ்ரேயஸ்ஸையும் கொடுப்பவராய், ஆறுபடை வீடுகளில் ஒன்றாகிய ஸ்வாமிமலையில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் **ஸ்ரீ ஸ்வாமிநாதனுக்கு**, சகல ஜனங்களுடைய க்ஷேமத்தைக் கோரி, 1960 ஏப்ரல் மாதம் 11ந் தேதி முதல் நடந்துவரும் கோடி அர்ச்சனை பூர்த்தி விழா, ஒரு கோடி இருபது லக்ஷம் அர்ச்சனைக்குப் பிறகு, தைமாதம் 23ந் தேதி (5–2–1961) அன்று நடைபெறும். மேல்கண்ட வைபவத்துக்கு அநேக ஆயிரக்கணக்கான ஜனங்களை எதிர்பார்க்கிறபடியாலும், எல்லோரும் ஏககாலத்தில் தரிசனம் செய்ய இயலாததாலும், ஜனவரி 28ந் தேதி முதல் 9 தினங்கள் பிரதி தினமும் ஒரே மாதிரி, காலையில் யஜுர், ரிக், ஸாமவேத, தேவார பாராயணம், ஹோமம்; மத்தியானம் அபிஷேகம், அன்னதானம்; மாலையில் விசேஷ அலங்காரமும், வடகுடி பிரம்மஸ்ரீ நாராயண தீக்ஷிதரால் "ஸ்காந்தம்" உபன்யாஸமும் நடத்திக் கொண்டாட நிச்சயித்துள்ளது.

இந்த மகத்தான கைங்கர்யத்தில் அன்பர்கள் தங்களால் இயன்ற பொருள் உதவியும், ஹோமத்துக்குப் பசு நெய்யும், அபிஷேகத்துக்குப் பசும்பால் மற்ற திரவியங்களும் கொடுத்து உதவி, இந்த விழாவில் பங்கு கொண்டு, சிறப்புறச் செய்து கண்டு களித்து இன்புற்று, பெருநலங்களை அடையும்படி வேண்டுகிறோம்.

பொருள், திரவியம் உதவுவோர் "டிரஷரர், ஸ்ரீ ஸ்வாமிநாத ஸ்வாமி கோடி அர்ச்சனை கமிட்டி, பெஸண்ட் ரோடு, கும்பகோணம்" என்ற விலாசத்துக்கு அனுப்பக் கோருகிறோம்.

**ஸ்ரீ ஸ்வாமிநாத ஸ்வாமி கோடி அர்ச்சனை கமிட்டி**

---

**குறிப்பு:** போக்கு வரத்துக்கு அநுகூலமாக அதிகப்படி **S. R. V. S.** பஸ்கள் கும்பகோணத்திலிருந்து விடப்படும்.

நான் ஒரு கர்வியாவதற்குக் காரணம் அவள்தான்; மண்டைக் கர்வம் பிடித்து நான் அலைந்தேன் என்று கூற முடியாது. ஆனால் அகம்பாவம் என்னும் திரை என் கண்களை மறைத்திருந்தது.

என் முகத்திலே கோபத்தைக் கண்டால் அவள் பயப்படுவாள். கண்கள் அங்குமிங்கும் அலை பாயும்.

எனக்கு அதிலே பெருமை கூட.

காதலில் எனக்கு நம்பிக்கை இல்லை. ஆணுக்கும், பெண்ணுக்குமிடையில் இனக் கவர்ச்சி ஏற்படுவது உண்டுதான்—ஆனால் காதல் என்ற தன்மையை நான் என்றுமே நம்பியது கிடையாது.

காதல் சுழலின் மத்தியில் சிக்கி நான் திணறியபோது கூட 'இது காதல்தானா?' என்ற சந்தேகம் எனக்குக் கடைசி வரையில் இருந்து கொண்டுதான் வந்தது.

ஆனால் அனுலாவுக்கு அப்படிப்பட்ட சந்தேகம் ஒருபோதும் இருந்ததாகத் தெரியவில்லை. என்னை மனமார அவள் நேசிக்க விரும்பினாள், நேசித்தாள். அதனால் ஏற்படக் கூடிய பலாபலன்களைப் பற்றி அவள் சிந்தித்ததாகவே தெரியவில்லை.

எனக்கு மாற்றல் கிடைப்பதற்கு இரண்டு மாதங்கள்தான் இருந்தன. அதன் பிறகு நான் இலங்கைத்தீவில் ஏதாவதொரு மூலையில் கிடக்கும் போஸ்டாபீஸில் போய் முடங்கி விடுவேன். இன்று நான் குடியிருக்கும் இந்த அறையும் காலியாகிவிடும்.

அனுலாவின் மனம்?

அந்தப் பிஞ்சு உள்ளத்தோடு நான் விளையாடினேன். புதிய சோதனைக்கு என்னைத் தயாராக்கிக் கொண்டிருந்தேன்.

காதல் எப்போது உதயமாகிறது என்று யாராலும் கூறமுடியாது என்று சொல்வார்கள். இரவிலிருந்து பகல் பிறப்பது போல் ஏதோ ஒரு கணத்தில் அதுவும் பிறந்து விடுகிறது.

ஆனால் எங்களுடைய காதல் எப்போது பிறந்ததென்று என்னால் கூற முடியும்போல் தோன்றுகிறது.

மத்தியானச் சாப்பாட்டுக்கு மாத்திரம் சில்வா என்னுடன் உட்கார மாட்டார். நான் தனியாகத்தான் உட்காருவேன். எனக்கென்



லாம் அப்போது அவர்களுடைய உணவு நன்றாகப் பழகிப்போய் விட்டது. அனுலா தன்னுடைய கையால் போட்டு வைத்த 'அச்சாறு' இல்லாமல் என்னால் சாப்பிடவே முடியாது.

மேஜையிலே வைத்த பீங்கான் தட்டிலே, அவள் ஒவ்வொன்றாக எனக்குப் பரிமாறினாள். நின்றபடியே அவள் கரண்டியால் எடுத்து வைத்தாள். குனிந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தவன், என் உள்ளுணர்ச்சி ஏதோ கூறவே, திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தேன்.

வைத்த கண் வாங்காமல் அவள் என்னையே பார்த்துக் கொண்டு நின்றாள். அவளுடைய கண்களில் அன்று என்றைக்குமே இல்லாத ஒருவிதக் கவர்ச்சி, ஆட்சி புரிந்து கொண்டிருந்தது.

அவள் மெதுவாகச் சிரித்தாள். அந்தச் சிரிப்பு எனக்குப் புதியதாக இருந்தது.

அவ்வளவு காலமும் அவள் ஒரு சிறுமி. திடீரென்று அன்று, அவள் இளமையின் வாயிலில் நின்று என்னை ஆகர்ஷிப்பது போல் பட்டது.

அந்தச் சிரிப்பில் நிறைய அர்த்தமிருந்தது.

நாளுக்கு நாள் அவளுடைய அழகு விபரீதமாக அதிகமாகிக் கொண்டே வந்தது. எப்பொழுது பார்த்தாலும் அவள் ஏதாவது ஒரு புது விதத்தில் தன்னை அலங்கரித்துக் கொண்டு என் முன்னே காட்சி தருவாள். சில வேளைகளில் அவளுடைய அலங்காரம் சிறுபிள்ளைத்தனமாகக் கூட எனக்குப்படும்.

ஆனாலும், அதைக்கூட நான் மகிழ்ச்சியுடனேயே ரசித்தேன். என்னையறியாமல் என் மனம் அவளைப் பற்றிச் சிந்திப்பதை நான் உணரலானேன்; என் அன்பு நிதானமாக வளர்ந்தது.

அப்பொழுதுதான் அவள் அந்தத் தவற்றைச் செய்தாள். அவளுடைய அன்பு நிதானம் தவறி விட்டது. ஒரு கணமாவது என்னைப் பிரிந்திருக்க அவளால் இயலவில்லை. தன் தகப்பனுக்குச் செய்ய வேண்டிய கடமைகளைக் கூட மறந்து அவள் என்னுடனேயே ஐக்கியமாகி விட்டாள்.

என்னிடம் அன்பு செலுத்துவது மட்டுமல்ல, தான் செலுத்தும் அன்பை நான் உணர வேண்டும் என்றும் அவள் விரும்பினாள்.

என்னுடைய அன்பிலும் பார்க்க அவளுடைய அன்பு அதிகம் என்பதை நான் உணரலானேன். அப்போதுதான் என்னிடத்தே கர்வம் பிறந்தது.



நான் இல்லாமல் ஒரு கணமாவது அவன் வாழ முடியாது என்று நிதர்சனமாக எனக்குத் தெரியத் தொடங்கியதும், சிறிது சிறிதாக அவனை உதாசீனம் செய்யத் தலைப்பட்டேன்.

அவனிடமுள்ள சிறிய குறைகள்கூட எனக்குப் பூதாகாரமாகத் தெரியத் தொடங்கின.

பூப்போன்ற அவனுடைய இதயத்தை அடிக்கடி கொடூரமான வார்த்தைகளால் புண்படுத்தினேன். வேண்டுமென்றே அவன் நெஞ்சம் நோகப் பேசி, அந்த முகம் படும் வேதனையை ரசிக்கத் தலைப்பட்டேன். ஏதோ ஒரு மகிழ்ச்சி எனக்கு அதனால் ஏற்பட்டது போலத்தான் தெரிந்தது.

அவனுக்கு என் போக்கு விசித்திரமானதாகப் படவில்லை. என் சுபாவம் அதுதானென்று எண்ணினான் போலும்! ஒரு குறையையும் அவன் உணர்ந்ததாகத் தெரியவில்லை. கிடைப்பதோடு திருப்தியடைந்தான்.

என்னை நேசிக்காமல் ஒரு கணமும் வாழ முடியாது என்பதை வெளிப்படையாகக் காட்டவும் செய்தான்.

சில்வாவுக்கு, படங்களுக்குச் சாயம் பூசி விற்பதுதான் தொழில். சில வேளைகளில் அனுலாவும் தகப்பனுக்கு உதவியாகச் சாயம் பூசுவது உண்டு. அன்றைக்கும் அப்படித்தான் இருந்திருக்க வேண்டும். நான் வரும் நேரமானதும் உடனே சென்று கைகளைக் கழுவிவிட்டு எனக்காகக் காத்திருந்தாள்.

எப்படித்தான் கழுவினாலும் அந்த நிறம் கைகளிலிருந்து இலகுவில் போய் விடுமா?

அவள் வாசல் வரையில் ஓடோடியும் வந்து என்முன் நின்றாள். என்னைப் பார்த்துத் தன்னுடைய மகிழ்ச்சி முழுவதையும் கொட்டிப் புன்னகை பூத்தாள்.

நான் கண்களைக் கடுமையாக வைத்துக் கொண்டு, ''இது என்ன நாற்றம்—சாயம் பூசினாயா?'' என்று அருவருப்புடன் கேட்டேன்.

அவள் முகம் கூம்பிச் சிறுத்தது. அந்த மெல்லிய இதயத்தை வேதனை செய்வதில் ஏனோ எனக்கு மகிழ்ச்சியாக இருந்தது.

ஆனால் அவளுடைய துக்கம் என்றுமே நிலையானதல்ல. என்னிடமிருந்து ஒரு சிறு புன்சிரிப்பு கிடைத்தாலும் போதும், அவள் தன் கவலைகள் எல்லாவற்றையும் உதறிவிட்டு என்னிடமே சரண் புகுந்து விடுவாள்.

நாணப்படக்கூடத் தெரியாத அவள் தன் குழந்தைப் பிள்ளை சுபாவத்தினால் மாத்திரம் என்னைக் கவர்ந்து விட்டாளா?

நான் சாய்மனையில் படுத்து ஏதோ படித்துக் கொண்டிருந்தேன். அவள் வந்து ஒரு பக்கத்துச் சட்டத்தில் சாய்ந்துகொண்டு தானும் ஏதோ வாசிப்பது போல் தனக்குத் தெரிந்த ஒன்றிரண்டு தமிழ்ச் சொற்களையே திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருந்தாள். அவள் தமிழ் பேசுவது அழகாக இருக்கும். ஆனாலும் அவள் அடிக்கடி அப்படிக் குனிந்து வாசித்தபோது, அவளுடைய நீண்ட பின்னலொன்று என் மார்பில் விழுந்து கூச்சத்தைக் கொடுத்தது.

எனக்கு ஏனோ அவளைக் கோபமாகப் பார்க்க விருப்பம் வரவில்லை. நிமிர்ந்து அவளைப் பார்த்தேன். அவள் பயந்து விட்டாள். அவள் பயப்படும்போது கூட ஓர் அழகு. அந்த அழகை ரசிப்பதற்குத்தானோ நான் அவளை அடிக்கடி கோபித்திருக்கிறேன் என்றே நான் நினைப்பதுண்டு.

பயத்துடன் அவள் என்னையே பார்த்துக் கொண்டிருந்தாள். தன் கண்களை அவள் எடுக்கவே இல்லை.

''அனு, போகிறாயா, இல்லையா?''

அவள் என்னைப் பரிதாபமாகப் பார்த்தாள்; கண்கள் குளமாகின. எனக்கு இரக்கமாக இருந்தது.

என்ன நினைத்துக் கொண்டேனோ, ''அனு, ஒரு பாட்டுப் பாடு!'' என்றேன்.

நான் எதற்காகப் பாடச் சொன்னேன் என்று எனக்கே தெரியாது. பாடச் சொல்லிக் கேட்டதும் அவள் வெட்கத்துடன் மௌனம் சாதிப்பாள் என்றுதான் நினைத்துக் கொண்டேன்.

ஆனால் நான் சொல்லி வாய் மூடுமுன் நிமிர்ந்து அவள் பாட ஆரம்பித்தாள். அவ்வளவு நாளும் எனக்கு அவளுக்குப் பாட்டு வரும் என்றுகூடத் தெரிந்திருக்கவில்லை.

எனக்கு முன்னால் நிமிர்ந்து நின்று, பள்ளிப் பிள்ளைகள் வாத்தியாருக்குப் பாடம் ஒப்பிப்பதுபோல, அடக்க ஒடுக்கமாக, அவள் பாடிக் கொண்டிருந்தாள்.

'நான் ஒரு ராசா மகள்' என்று ஆரம்பிக்கும் ஒரு சிங்களப் பாடல் அது.

'எங்களிடம் ஆயிரம் யானைகள் இருந்தன. ஆயிரம் குதிரைகள் இருந்தன; ஏராளமான செல்வம் இருந்தது. எங்கள் புகழ் எங்கெல்லாமோ பரவியது; இருந்தும் என்ன? இன்று உங்கள் செல்வமெங்கே, புகழ் எங்கே?' என்று தொடர்கிறது அந்தப் பாட்டு.

என்னுடைய மனமானது அனுலாவை ராசா மகளாகக் கற்பனை செய்து பார்த்தது. நான் அந்தச் சிந்தனைகளில் மூழ்கியிருந்த போது, பாட்டு முடிந்தது கூட எனக்குத் தெரியவில்லை.

அவள் ஓர் அடி முன்னுக்கு வந்து 'பாட்டு எப்படி இருந்தது?' என்ற பாவனையில் நின்றாள். நான் திறந்துவிட்டு விட்டேன்.

அவளுடைய கன்னத்தை மெதுவாகத் தட்டி, ''உன்னைப் போலவே உன் பாட்டும் அழகாக இருந்தது'' என்றேன்!

அவள் மனம் சந்தோஷப்படும்படியாக நான் செய்தது அது ஒன்றுதான். மகிழ்ச்சியால் அவள் பூரித்துப் போனாள்.

மாற்றல் உத்தரவு வந்து விட்டது. சில்வாவிடம் அதைக் கூறும்போதே அனுலா கேட்டிருக்க வேண்டும்.

''அனு!''

அவளைக் காணவில்லை; வெளியே வந்து தேடினேன். எதிர்பார்த்தபடியே அவள் அந்த 'மொற' மரத்தின் கீழிருந்து அழுது கொண்டிருந்தாள். அந்த மரம் ஐந்து வருடங்களுக்கு ஒரு முறைதான் காய்க்குமாம். அடுத்த வருடம் அது காய்ப்பதாக இருந்தது. எனக்கு அந்தப் பழத்தைப் பறித்துத் தர வேண்டுமென்று அவளுக்கு எத்தனை ஆசை!

அனுலாவை அழவேண்டாம் என்று நான் சொல்லவில்லை. அப்படி நான் கூறியிருந்தால்



ஒருவேளை உடனேயே அழுகையை நிறுத்தி விருப்பாள். அழுவதற்குக் கூட அவள் என்னிடம்தான் உத்தரவை எதிர்பார்த்தாள்.

"அனு !"

முகத்தை மூடியிருந்த கைகளை மெதுவாக நீக்கி அவள் என்னைப் பார்த்தாள்.

"அனு ! நான் எப்படியும் போகத்தானே வேண்டும் !"

" அப்போ நானும் வருகிறேன் !"

" நீயா ?"

" ஏன், வந்தால் என்ன ?"

அனு விளையாடவில்லை ; உண்மையைத் தான் பேசினாள் ; 'வா' என்றால் வரத்தான் செய்திருப்பாள்.

" அனு, நீ என்ன குழந்தையா ?"

அப்போது அவள் தன் முகத்தை நிமிர்த்தி என்னைப் பரிதாபகரமாகப் பார்த்தாள். அந்தப் பார்வையில் அடக்க முடியாத துயரம் தொனித்தது.

" உண்மையிலேயே என்னை விட்டுப் போகிறீர்களா ?" முதன் முறையாக அவள் விக்கி விக்கி அழலானாள்.

அவளுக்கு என்னுடைய முடிவு மிக மிக ஆச்சரியத்தைக் கொடுத்திருக்க வேண்டும்.

என்னுடன் அதற்குப் பிறகு அவள் பேசவே இல்லை; நேரே போய்ப் படுத்துக் கொண்டாள்.

அடுத்தநாட் காலை; பெட்டி படுக்கைகளை நான் அடுக்கிக் கொண்டிருந்தேன். அனுவா கைகள் இரண்டையும் பின்னுக்குக் கட்டியபடி மெதுவாக நடந்துவந்தாள். ரகசியமாக என் பெட்டிக்குள் எதையோ வைத்து விட்டு என் முகத்தையே ஆர்வத்தோடு பார்த்தாள்.

"அனு, இது என்ன?"

போன கண்டிப் பெரஹராவின்போது அவள் வாங்கிய ஒரு சிறிய புத்தர் சிலை ; யானைத் தந்தத்தினால் செய்தது. எவ்வளவு ஆசையாக அதை வாங்கினாள் ; எனக்கு அதைப் பெற்றுக் கொள்ள மனமே இல்லை ; ஆனால் அவளுடைய கண்களைப் பார்த்ததும் என் முடிவை மாற்றிக் கொண்டேன்.

"இனிமேல் இங்கே வரவே மாட்டீர்களா?"

எனக்கு அவள் முகத்தைப் பார்க்க இரக்கமாக இருந்தது.

"அனு, உன்னைப் பார்க்காமல்?—நீ 'கிரிபத்' செய்து தருவாயல்லவா?"

நான் கடைசியாக விடைபெற்றபோது அவள் என் காதுகளில் இக்கித் இக்கித் தமிழிலே கூறினாள்: "நான் நீங்களே ஆசை!"

அப்போதுகூட அவள் முகத்தில் நாணத்தைக் காணவில்லை. அவளுடைய அன்பு ஆழமானதில்லையோ? இல்லாவிட்டால் எப்படிச் சிரித்தபடியே அவளால் விடைகூற முடிந்தது? அதனால் அவளை விட்டுப் பிரிய வேண்டும் என்ற விசித்திரமானதோர் ஆவல் என் அடிமனத்தில் உறைந்து கொண்டுதானிருந்தது. பிரிவின் வேதனையை உண்மையிலேயே நான் அனுபவிக்க வேண்டுமென்ற தணியாத ஆசை தான் அது.

ஆனால் ஆசை இருந்த அளவுக்கு அதைத் தாங்கும் சக்தி எனக்கு இருந்ததாகத் தெரியவில்லை. எந்நேரமும் என் மனத்தை அனுவாவின் வேதனை நினைவுதான் நிறைந்துக் கொண்டது. ஒரு காரியமும் என்னால் செய்ய இயலவில்லை; பைத்தியம் பிடித்து விடுமென்ற நிலையில்தான் இருந்தேன்.

என் வேதனையே இப்படியென்றால்—அனு! அவள் பிஞ்சு உள்ளம் இதைத் தாங்குமா ?

நானே ஏற்றுக்கொண்ட சுமையை நான் சுமக்க முடியாமல் தவித்தேன்.

அனுவா!—தானாக உட்கார்ந்து, முழங்காலைக் கட்டிக்கொண்டு, அவள் பாடிக் கொண்டிருக்கிறாள்.

'நான் ஒரு ராசா மகள்.'

மிரண்டு பார்க்கும் அவளுடைய விழிகள் என் முன்னே வந்து நின்றன. பயத்தைத் தவிர அவள் என்னிடம் வேறு எதைத் தான் கண்டாள் ?

என் நீண்ட கால வாழ்க்கையில் அனுவா ஒரு குமிழ் என்று ஒதுக்கிவிடத்தான் நான் நினைத்தேன். ஆனால் என்னுடைய வாழ்க்கையே அவள் என்று நிலைமை மாறிவிட்டது. அனுவா இல்லாத ஒவ்வொரு கணமும் வேதனைதான் என்பதை உணரலானேன். 'அனு', 'அனு' என்று என் மனம் அவளையே நினைத்துக்கொண்டது. தோல்வியை ஒப்புக் கொள்ள அவமானமாக இருந்தது. என்னுடைய கர்வமெல்லாம் எங்கே ?

மனத்திலே மிகப் பெரிய பாரம் அழுத்திக் கொண்டிருந்தது.

தூரத்தில் வரும்போதே, ஆவல் தேம்பிய என் கண்களில் அனுவா தென்பட்டுவிட்டாள்.

கால்கள் இரண்டையும் மடித்து, உட்கார்ந்த நிலையில் அவள் சாயம் பூசிக் கொண்டிருந்தாள். என் நிழல்தான் முதலில் விழுந்திருக்க வேண்டும்; திடுக்கிட்டுத் திரும்பிய

அவளுடைய கண்கள் அப்படியே நிலைக்குத்தி நின்றன. அடுத்த கணம் இனந் தெரியாத சோகம் அந்த முகத்தைக் கப்பியது. அவள் உள்ளே ஓடிவிட்டாள்.

ஏற்கெனவே சாயம் பூசிய படங்கள் சில வெய்யிலிலே காய்ந்து கொண்டிருந்தன. தூரத்திலே, யாழ்ப்பாணத்திலிருந்து நான் கொண்டு வந்து வைத்த 'கனி முருங்கை' மரம் ஒன்றிரண்டு பூக்களை உதிர்த்தபடியே நின்றது. கொடியிலே சில்வாவின் சாரம்-அதே சாரம்தான்-காய்ந்து கொண்டிருந்தது.

அனுலா வரவில்லை.

''அனு!''

என் குரலில், அப்போதுகூட அன்பிலும் பார்க்க அதிகாரந்தான் நிமிர்ந்து நிற்பதாகப் பட்டது. உள்ளே போனேன்; அவள் கையிலே உள்ள சாயத்தை மண் தேய்த்து கழுவிக் கொண்டிருந்தாள்.

''அனு!''

அவள் நிமிர்ந்து கூடப் பார்க்கவில்லை.

''அனு, கோபமா?''

அவள் மெதுவாகத் தலையை நிமிர்த்தி அசைத்தாள். அவளுடைய இயல்பான புன்னகை அப்போதுகூடத் தோன்றவில்லை.

''அப்பா எங்கே?''

''புது டவுனுக்குப் போயிருக்கிறார்!''

கேள்வியும் பதிலுமாகத்தான் இருந்தது—பழைய பிடிப்பு இப்பொழுது இல்லை.

'என்னுடைய அந்தப் பழைய அனுலா எங்கே......?'

சிரிபத்தின் நறுமணம் மெதுவாக மிதந்து வந்தது. நாலு நாள்கள் கிழிக்கப்படாமல் காலண்டர் தொங்கிக் கொண்டிருந்தது. அந்தப் புத்தர் சிலை இருந்த இடம் இப்போது வெறிச்சென்றிருந்தது.

மேசையிலே, சில்வாவுக்கு வந்த கடிதம் ஒன்று, உடைக்காமலே கிடந்தது. விலாசம் சிங்களத்திலா, ஆங்கிலத்திலா என்பது தெரியவில்லை.

''அனு! விளக்கைக் கொளுத்தவில்லையா?''

கைவிளக்கை ஏற்றிக் கொண்டு வந்து மேசை மேலே வைத்துவிட்டு அவள் தூரப் போய் நின்றாள்.

சிறிது அழுக்குப் படிந்த மேற்சட்டை; இடையிலே விசிறிக் கொய்யகம் வைத்து உடுத்திய சேலை; சோகம் கவிந்த முகம்; அந்த நிலையிலும்கூட அவள் சிகிரியா சித்திரத்தைத் தான் எனக்கு நினைவூட்டினாள்.

முதல் முறையாக அனுலாவின் முன்னிலையில் நான் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்தேன். என்னால் அதிகாரம் செய்யவும் முடியவில்லை; பணிந்து போகவும் இயலவில்லை.

பரிதாபமாக அவளையே பார்த்தபடி யிருந்தேன். அவள் முகத்தைப் பார்க்கக் கூடியதாக விளக்கை எடுத்து வைத்தபோது ஏனோ எனது கை சிறிது நடுங்கியது.

''நான்வந்தது உனக்குப்பிடிக்கவில்லையா?''

அவள் முகம் சிறுத்துக் கறுத்தது; மௌனமாகக் குனிந்தாள்.

''அப்பா என்னைப் பியதாசாவுக்குப் பேசுகிறார்....'' என்றாள் அனுலா.

என் மனமானது இதற்கு முன் ஒருபோதும் அடைந்திராத ஒரு வேதனையை அந்தக் கணத்தில் அனுபவித்தது. 'அனுலா இன்னொருவனுக்கு வாழ்க்கைப் படுகிறாள்' என்பதையே என்னால் நினைக்கமுடியவில்லை. என்றாலும் கூட அடிமனத்தின் தளத்திலே ஒருவித நிம்மதி நிலவியதையும் என்னால் உணர முடியாமல் போகவில்லை.

அனுலாவைப் பார்த்தேன். மங்கிய விளக்கின் ஒளியிலே அவள் கண்கள் பளபளத்தன. அவள் பொல பொலவென்று கண்ணீர் உகுத்த நாட்களைப் போல் இதையும் என்னால் உதாசீனம் செய்ய முடியவில்லை. அந்த ஒரு சொட்டுக் கண்ணீரே என் இதயத்தைத் தகர்த்து விடும்போலப்பட்டது. அவள் அழுவதை நான் விரும்பவில்லை. பழைய அனுலாவா யிருந்திருந்தால் அந்தக் கண்ணீர் என்னை ஒன்றும் செய்திருக்க முடியாது.

ஆனால், என் முன்னே நின்ற அனுலாவின் கண்ணீரைத் தாங்க என்னுடைய இருதயத்தில் உரமில்லை.

'' அனு! அந்தப் பாட்டைப் பாடுகிறாயா?''

அவள் மௌனமாக இருந்து விட்டாள். அந்தப் பிடிவாதமான மௌனத்தை என்னால் தாங்க முடியவில்லை.

நான் பாடச் சொன்னபோது முழு மனத்தோடு அவளைக் கேட்காது போனாலும் கூட என் வேண்டுகோளை அவள் நிராகரித்தாள் என்றிருக்க என் மனம் ஒப்பவில்லை.

'' அனு! எனக்காகப் பாடமாட்டாயா?''

அவள் ஏதோ சொல்ல விரும்பினாள்; உதடுகள் மாத்திரம் பட படவென்று துடித்தன.

'' இன்னும் எத்தனை நாளைக்கு உன்னிடம் இப்படி யாசிக்கப் போகிறேன்?''

அவளுடைய வலதுகையின் நீண்ட விரல்கள் என் வாயை மெத்தென மூடின.

சாயத்தின் மெல்லிய நாற்றம் மூக்கிலே இலேசாகப்பட்டது. வடக்கிலே இருந்த இழையை ஒவ்வொன்றாகப் பிய்த்தபடி அவள் மெதுவாகப் பாடத் தொடங்கினாள்.

'' நான் ஒரு ராசாமகள்!''

அவள் பாடிக் கொண்டு போகும் போது ஆடுகின்ற விளக்கின் ஒளியில் அவள் கண்களையே பார்த்துக் கொண்டிருந்தேன். அவள் பாடலின் இறுதி வரிகளுக்கு வந்தபோது உலகத்துச் சோக இசையெல்லாம் அவள் குரலில் இழைந்து விட்டதாகத்தான் எனக்குப் பட்டது.

'' நான் அணியும் நகையெல்லாம்
பித்தளைதான்—பொன்னல்ல;
நான் உடுத்தும் சேலையெல்லாம்
கிழிந்தவைதான்—பட்டல்ல
என்றாலும்கூட—
என்னைப் பார்த்துச் சிரிக்காதே,
தெருவிலே போறவனே!
நான் ராசா மகள்—
நான்......நான்......''

அந்தக் கடைசி வரிகளை அவள் பாடவே இல்லை. அதற்குப் பதில் ஒரு மெல்லிய விக்கல்தான் அவளிடமிருந்து வெளிப்பட்டது.

விளக்கு எப்போது அணைந்தது?

நெருப்புப் பெட்டியைத் தேடி நான்தான் போகவேண்டி யிருந்தது.


குடும்பத்தினர் விரும்பிப்பருகுவது
SPECIAL HOTEL BLEND
BROOKE BOND
ப்ரூக் பாண்ட்
தேயிலை
புதியது—சிறந்தது
ப்ரூக் பாண்ட் இந்தியா பிரைவேட் லிமிடெட்
JWTBB 363 S

# ஏன் கூடாது?

ஸோமாஸ்

நாடகத்திலோ, சினிமாவிலோ புதுமை யாக எதையாவது புகுத்த வேண்டும் என்றால் அது சற்றுச் சிரமமான காரியந்தான். பழைய பாணியும், பழைய கருத்தும், பழைய கதையுமாக இருந்தால் பார்ப்பவர்கள் ரஸிக்க மாட்டார்கள். மிக மிகப் புதுமை யான கருத்தாகவும், புதுமையான கதையாக வும் இருந்தால் அவை மக்கள் ஏற்றுக் கொள் ளக்கூடியவையா யிருக்க வேண்டும். இல்லா விட்டால் அதோகதிதான்.

நாடகம் முழுதும் ஹாஸ்ய ரஸம் ததும் பத் தயாரிக்க வேண்டுமானால், வாழ்க்கை யோடு ஒட்டும்படி அமைக்க முடியாது. உண்மை நிகழ்ச்சிகளைத் தடம் புரளச் செய்து தான் ஹாஸ்ய ரஸத்தைப் புகுத்த முடியும்.

விவேகா பைன் ஆர்ட்ஸ் கிளப்பின் தயாரிப் பான "ஏன் கூடாது?" என்ற நாடகம் முற்றிலும் புதிய சூழ்நிலையில் அமைந்திருக் கிறது. முதல் காட்சி தேவலோகத்தில் ஆரம்பமாகிறது. விக்கிரமாதித்தனும், அவன் மந்திரி பட்டியும் நந்தவனத்தில் உலவிக் கொண்டே பூலோகத்தைப் பார்க்கிறார்கள். விஞ்ஞானி சோமசேகர் கூடு விட்டுக் கூடு பாயும் முறையை விஞ்ஞான ரீதியிலே சாதிக்க முயற்சி செய்கிறார். பட்டி, "என்னால் நம்ப முடியவில்லையே, மன்னா! அது எப்படி முடி யும்?" என்று சந்தேகத்தோடு கேட்கிறான்.

"ஏன் கூடாது? பட்டி, ஏன் கூடாது?" என்கிறான் விக்கிரமாதித்தன். பூலோகத்தி லும் அதே சமயத்தில் விஞ்ஞானி சோம சேகரும் அதையே கேட்டுக் கொண்டிருந் தார். மற்றவர்கள் பரிகசிக்கின்றனர்.

நாடகத்தின் ஆரம்பமே புதுமையாகவும் ஹாஸ்யமாகவும் இருக்கிறது. அழுத்தமான கதையையும் அத்துடன் பொருத்தமான ஹாஸ்யங்களையும் சேர்த்து நாடகமாக்குவது சிரமமான காரியம். "ஏன் முடியாது?" நாடகத்தில் அது முடியும் என்று நிரூபிக்கப் பட்டிருக்கிறது.

காதல், ஏமாற்றம், தற்கொலை, பழிக்குப் பழி ஆகியவற்றுடன் வாஞ்சி, வேதா என்ற இரண்டு பொறுப்பற்ற வாலிபர் களின் ஹாஸ்ய நடிப்பும் சேர்ந்து கொண்டு அழுவதா, சிரிப்பதா என்று புரிந்து கொள்ள முடியா மற் செய்து விடுகின்றன. பத்ரா சலம் என்ற அப்பாவி இளைஞன் நாடகக் காட்சிகளின் புதுத் திருப் பங்களுக்கெல்லாம் காரணகர்த் தாவாக இருந்து நாடகத்துக்குச் சுவையூட்டுகிறான்.

நாடகத்தின் மூலக் கதையை யும், வசனத்தையும் "சோ" எழுதி யிருக்கிறார். பத்ராசலம் என்னும் இளைஞன் பாத்திரத் தையும் அவரே ஏற்று, அற்புத மாக நடிக்கிறார்.

மேடையில் அவர் வந்து விட்டால் ஒரே கலகலப்புத்தான். இதே "சோ" வினால் முன்பு எழுதி, நடிக்கப்பட்ட "எனக்குக் கிடைத்தால்?" ("If I get it") என்ற ஹாஸ்ய நாடகம் மிகவும் பிரசித்தமானது. அந்த நாடகத்தைப் பார்த்துச் சிரித்து ரஸிக்காத வர்களில்லை. இந்த இரண்டு நாடகங்களையும் பார்க்கிறவர்கள் அதிகமாக உட்புகுந்து பார்த்து மனத்தைப் போட்டுக் குழப்பிக் கொள்ளாமல், பார்த்த வரையில் மகிழ்ந்து, மகிழ்ந்த வரையில் ரஸித்து, ரஸித்தவரையில் சிரித்து அநுபவிக்க வேண்டும்.

வாஞ்சியும், வேதாவும் பழைய காலத்து நாடக மேடை விதூஷகர் வகையைச் சேர்ந் தவர்கள். மிகவும் நன்றாய் நடிக்கிறார்கள்.

பத்ராசலத்தை மணக்க விரும்பும் மாணவி சரோஜாவின் விருப்பம் நிறைவேறா மற் போகவே, அவள் தற்கொலை செய்து கொள்ள முடிவு செய்கிறாள். விஞ்ஞானி சோம சேகர் கூடுவிட்டுக் கூடு பாயும் மருந் தைக் கண்டுபிடித்து அதைப் பரீட்சித்துப் பார்க்க இருந்த தருணத்தில் சரோஜா, அவர் வீட்டில் தற்கொலை செய்து கொள்கிறாள். சோமசேகர் அவள் உடலிலே புகுந்து தம் ஆராய்ச்சி வெற்றியடைந்து விட்டதா என்று பரீட்சிக்க நினைத்து யோசிக்கையில், அவர் விரோதி ராஜாபாதர் வந்து அவரைக் கட்டு விடுகிறான். சரோஜாவின் உடலுக்குள் சோமசேகரின் உயிர் புகுந்து விடுகிறது....

நாடகம் இன்னும் மேலே போகிறது. இந்த நாடகத்தைப் பிறர் சொல்லக் கேட்டு ரஸிக்க முடியாது. நேரில் பார்த்தால்தான் சுவாரஸ்யமா யிருக்கும்.

சரோஜாவாக வரும் பீ. என். குமாரை ஆண்மணி என்று யாரும் சொல்ல மாட் டார்கள்! பெண்மணியாகவே மாறி நடித் தார். சோமசேகரின் ஆவி சரோஜாவின் உடலில் புகுந்த பிறகு பி. என். குமாரின் நடிப்பில் திறமையையும் சாகசத்தையும் நன்கு காண முடிந்தது.

"ஏன் கூடாது?" என்ற இந்த நாடகம் சமீபத்தில் இரு முறை நடிக்கப்பட்டிருக் கிறது. மேலும் பல முறை பல மேடைகளில் நடிக்கப்பட வேண்டும் என்று நான் கூறு கிறேன். ஏன் கூடாது?



# நின்னை ஒரு வரம் கேட்பேன்

ஜ. சாமிநாதன்

மனிதன் அண்டாத, அண்ட முடியாத இடம் அது. அதில் வாழ்ந்தது ஒரு பேய்.

பேய்க்கு இலக்கணம் என்ன? இலக்கணம் அற்றதெல்லாம் பேய்தான்.

அந்தப் பேய்க் கூட்டத்தில் இருந்த பேய்க்கு ஆசை பிறந்தது. அளவுக்கு மீறி ஆசைப் படுவதும் பேயின் இலக்கணமே.

ஆனால் இந்தப் பேய்க்கு வேறு விதமான ஆசை. சடலங்களை எரித்து அதன் வெளிச் சத்தில் ஆட்டம் போடும் பேய்க்கு ஒன்று மில்லாமல் வெளிச்சம் போடும் மனிதனாக மாற ஆசை. உயிர் உள்ளவரையில் துள்ளும் மனிதன் மூச்சு இழந்த பின் கட்டையாய்க் கிடக்கும் நிலை மாற்றம் போலப் பேயும் திடீரென்று அடக்கமாக இருந்தது.

அடக்கமில்லாததும் 'தான்' மதம் பிடித் திருப்பதும் பேயின் இலக்கணமே.

தங்களுடைய குணங்களிலிருந்து மாறுபடும் இந்தப் பேயைக் கண்டு மற்றவை சீற்றம் கொண்டன; தூற்றின. ஆனால் நெஞ்சில் இருந்த ஆசை பேயை இன்னமும் அடக்கமாக இருக்க வைத்தது.

மனிதன் படைத்தவனை நினைந்து, கசிந்து, உருகி நின்றால் அது பக்தி. பேய் ஆட்டத்தை விட்டு அடக்கமாய் இருந்தால் அதுவே அதன் பக்தியாகும்.

அடக்கம் பேய்க்கு முகப் பொலிவைத் தந்தது. அதன் முகப் பொலிவைக் கண்டு மற்றவை பொறாமை கொண்டன.

பொறாமை பேயின் இலக்கணம்.

பேய்களுக்குப் பரிவும் கிடையாது. பரிவைத் தூண்டும் பாசமும் கிடையாது.

இருந்தும் இந்தப் பேயின் பக்தி வளர்ந்தது. ஒரு நாள்......

பேரொளி வடிவமாய், தூய்மையின் உருவாய், உண்மையின் கருவாய்த் தெய்வம் அதன் முன் தோன்றியது.

தெய்வம் பக்தியுள்ள பேய்க்கும் தோன்றும். மரத்துக்கும் தோன்றும், மனிதனுக்கும் தோன்றும். அதைக் காண வேஷம் பிரதான மன்று; உள்ளமே.

பேய் தன்னை மறந்து அவனைப் பார்த்தது. தெய்வம் குழந்தையாய் இருந்தது.

தெய்வம் அமைதியுடன் ஓடும் மாபெரும் ஆறாய் இருந்தது.

தெய்வம் விண்ணைச் சாடி நிற்கும் மலையாய் இருந்தது.

பேய் தான் இருக்கும் ஆவி உருவத்தையும் குறுக்கிக் கொண்டது.

பிறகு சிரித்தது.

"எனக்கு ஒரு வரம் வேண்டும். அதற்குத் தவம் இருந்தேன்."

"என்ன வரம்?"

"நான் மனிதனாக மாற வேண்டும்."

"என்ன மனிதனாகவா?" — தெய்வம் ஆச்சரியத்தால் வாய் பிளந்தது.

"ஆமாம். மனிதனாகத்தான்."

"பிறகு நீ மிகவும் கஷ்டப்படுவாய்."

"பரவாயில்லை......"

"சரி, அப்படியே ஆகட்டும். நான் இது வரையில் எந்தப் பேய்க்கும் மனிதனாக மாற வரம் கொடுத்ததில்லை...உனக்கு மட்டும்தான் அந்த வரம் கொடுக்கிறேன்."

* * *

இப்போது அதைப் பேயென்று சொல்வார் யார்?

இன்மையான கால்களைக் கண்டு பெருமைப் பட்டுக் கொண்டது பேய்.—அதாவது மனித உருவில் வாடி ஆசைப்பட்டு அதைப் பெற்றுக் கொண்ட பேய்.

மனித உருவில் அது இருப்பதால் இனி அது மனிதன்தான்; பெண்மை இல்லாத பெண் உருவத்தைப் பெண் என்று அழைப்பது போல். பக்தியில்லாமல் தாடி வளர்த்துக் கொண்டவனைச் சாமியார் என்று அழைப்பது



> வீட்டிலுள்ள பிள்ளை கல்யாணமாகாமல் சிறு பிராயத்தில் தூரப் பிரதேசத்துக்கு ஓடிப் போய், வெகு காலம் சென்று, கல்யாணமாகிக் குழந்தை குட்டிகளுடன் நம் வீட்டுக்குத் திரும்பி வருவதுபோல், நம் பண்டைய வைத்திய சாஸ்திரம் நம்மவர்களால் கவனிக்கப் படாமலும், விருத்தி செய்யப்படாமலு மிருந்து, அன்னியர்களால் பராமரிக்கப்பட்டு, நூதன முறைகளுடன் நம் நாட்டுக்கு வந்திருக்கிறது. - ராஜாஜி

போல. ''உன்னை எவன் கவனிக்கிறான்? வெளிப்பூச்சில் மினுக்கிறது உலகம்.

ஆகவே இனி இது 'இவன்' ஆகிவிட்டது.

மிகுந்த பெருமையுடன் 'மனிதன்' நடக்க ஆரம்பித்தது.

''மனிதன் ஆனதால் நமக்கு எவ்வளவு பெருமை. நம்மைப் போல் பேயாய் — ஓ! நாம் இப்போது பேய் இல்லையே — அந்தப் பேய்க் கூட்டத்தைப் போல இருளில் ஆட்டம் போட வேண்டாம். மார் தட்டி, தலை நிமிர்ந்து பகலில் நடமாடலாம். முன்னைப் போல் கண்ணுக்குப் படாமல் இருக்க மாட்டோம். கண்ணுக்குப் பட்டாலும் பயங்கரமாகத் தோற்றமளிக்க மாட்டோம்.''

பேய்க்கு — மனிதப் பேய்க்கு உடல் பூரித்தது.

அதற்கு உடல் என்று வந்ததும் பசியும் கூடவே வந்து விட்டது.

பசிக்கு உணவு தேடி ஊரெல்லாம் அலைந்தது மனிதப் பேய். ஆனால் வாய்க்கு ஒரு கவளம் சோறு கூடக் கிடைக்கவில்லை.

தூரத்தில் ஓர் இடத்தில் மனிதர்கள் கூட்டமாய் நின்றிருந்தனர். ஒருவர் பேசிக் கொண்டிருந்தார். மற்ற உயிர்களிடத்தில் அன்பு கொள்ள வேண்டுமென்றும், பசித்தவனுக்கு அன்னம் இட்டால் ஆண்டவன் மனம் குளிரும் என்றும் சொன்னார்.

மனிதப் பேய்க்கு இதைக் கேட்க வியப்பும் மகிழ்ச்சியும் உண்டாயிற்று. ''நம்முடைய பேய்க் கூட்டத்தில் யாருக்காவது இந்த நல்ல எண்ணம் தோன்றுகிறதா? மனிதனைப் பார். அன்பு என்றால் என்னவென்பதைத் தெரிந்து வைத்திருக்கிறான்'' என்று நினைத்து மனிதனைப் பாராட்டிப் பேசியவரை அணுகியது மனிதப் பேய்.

பேச்சை முடித்துக் கொண்ட அவர் வீட்டை நோக்கிப் புறப்பட்டார்.

மனிதப் பேய் அவரைத் தொடர்ந்தது.

''என்னை ஏன் தொடர்கிறாய்?''

''ஒன்றுமில்லை. பசியே தெரியாமல் இதுவரை வாழ்ந்து வந்தேன்... இன்று பசிக்கிறது. வயிறு உடலை விழுங்கிவிடும் போலிருந்தது.''

''அதற்கு இப்போது என்ன?''

''நீங்கள் பேசியதைக் கேட்டேன். உங்களுடன் வீட்டுக்குப் போனால் சாப்பிடுவதற்கு ஏதாவது கிடைக்குமா வென்று...''

''சீ... இதுதானா? என்னவோ, 'உங்கள் பேச்சு நன்றாக இருக்கிறது. நீங்கள் எழுதிய புத்தகம் ஒன்று தாருங்கள்' என்று கேட்கப் போகிறாய் என்றல்லவா நினைத்தேன். நான் என்ன அநாதை மடமா வைத்திருக்கிறேன், கையை ஏந்திவருபவர்களுக்கெல்லாம் சோறு போட...?''

மனிதப் பேய்க்கு வியப்புத் தாளவில்லை. சற்று முன்னால் நாம் பாராட்டிய இவரா இப்படிப் பேசுவது?

''நீங்கள்... நீங்கள் என்ன சொல்கிறீர்கள்...?''

''சரி... வழியை விடு... வாயால் சந்தர்ப்பத்துக்குத் தகுந்தபடி என்ன வேண்டுமானாலும் ஒருவன் பேசுவான். அதை நம்பி அந்த வார்த்தைகளே அவன் என்று கூட ஓடிவந்திருக்கிறாயே!''

மனிதப் பேய் ஸ்தம்பித்து நின்றுவிட்டது. நிற்கக்கூட முடியவில்லை. வாயால் பேசி வெளி உலகில் நடமாடும் மனிதன் ஒருவன், உள்ளத்தால் நினைந்து அதன்படி வாழும் மனிதன் ஒருவன் என்று ஒரு மனிதனுள் இரண்டு பேரா?

இப்படி நினைவில் ஆழ்ந்து இருக்கையில் சாலை ஓரத்தில் யாரோ முனகுவது போல் சத்தம் கேட்கவே அங்கே விரைந்து சென்றது மனிதப் பேய்.

அங்கே ஒரு மனிதன் உளுத்துப்போன மூங்கில் போல் பொலிவிழந்து, உயிர்க்களை இழந்து முடங்கிப் படுத்திருந்தான்.

''ஐயோ!'' வென்று கூவி மனிதப் பேய் அவனை மடியில் எடுத்துக் கொண்டது.

''ஐயோ... வலி... அம்மா...''

''ஏன் மனிதா, இப்படி விழுந்து கிடக்கிறாய்?'' என்று மனிதப் பேய் அவனைப் பரிவுடன் கேட்டது.



உருக்குலைந்த மனிதன் மெல்லக் கண் விழித்துப்பார்த்தான்.

''சீரும் சிறப்புமாய் வாழ்ந்தவன் தான். ஆனால் இன்று வீதி முனையில் கேட்பாரற்று விழுந்து கிடக்கிறேன்...''

''ஏன்?''

''எல்லாம் அவனுடைய நயவஞ்சகத்தால் தான் ஏற்பட்டது....''

''நயவஞ்சகம் நயவஞ்சகமா? அப்படியென்றால்?...''



சென்னை தியாகராயநகரிலுள்ள வீட்டில் ப்ளவர் கம்பெனிக்கு ஜனவரி 1-ந் தேதி செங்காலிபுரம் பிரும்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர் விஜயம் செய்தார்கள். மேற்படி ஸ்தாபனச் சிப்பந்திகளும், அதிபர் திரு வீ. கிருஷ்ணசாமி சர்மாவும் தீக்ஷிதரைப் பூர்ண கும்பத்துடன் வரவேற்றனர்.

அரை உயிரில் இருந்த மனிதன் அதிசயத்துடன் மனிதப் பேயைப் பார்த்தான்.

''நயவஞ்சகமென்றும் தெரியாமல் ஒருவன் உண்டா? நல்லவர்கள் போல் பழகி உள்ளத்தால் தீயவை நினைத்து, தீயவை செய்தல்தான் நயவஞ்சகம். நயவஞ்சகம், ஏமாற்றுதல் எல்லாம் எந்த மனிதனுக்காவது தெரியாமல் இருக்குமா?''

மனிதப்பேய்க்கும் பயம் கப்பிக்கொண்டது. அப்படியானால் நல்லவர்கள் என்று நாம் நினைக்கிறவர்கள் — நல்லவர்கள் என்று எல்லோராலும் புகழப்படுகிறவர்கள் எல்லாம் உள்ளத்தால் தீயவராக இருப்பதும் சாத்தியமானால்... ஐயோ...!

மனிதப் பேய் ஒரே ஓட்டமாய் ஓடியது. உலகம் முழுதும் சுற்றியது. அதற்குக் கோபமும் ஆத்திரமும் அழுகையும் பொறுக்க முடியாமல் வந்தன.

மறுபடியும் தியானத்தில் அமர்ந்தது.

அமைதி, அமைதி, அமைதி.

மறுபடியும் தெய்வம் மனிதப் பேயின் முன்னே தோன்றியது.

''மனிதனும் வாழ்ந்தது போதுமா?''

''ஐயோ! இனிமேல் மனித ஜன்மத்தைப் பற்றிக் கனவிலும் நினைக்க மாட்டேன். ஆனால் நான் இப்போது கேட்கப் போகும் வரம் புதியது...''

அதன் குரல் வன்மையாகவும், கண்டிப்பாகவும் இருந்தது.

''உலகில் மனிதர்களாய் உலாவும் பேய்களைக் கண்டேன்.''

''என்ன?''

''ஆமாம்...மனித உருவில் வசிக்க வரும் பல பேய்களைப் பார்த்துவிட்டு ஓடோடி வருகிறேன். உண்மையைச் சொல். எனக்கு மட்டும்தான் மனிதனாக மாற வரம் கொடுத்தேன் என்றாயே! அது பொய். நீ கோடிக்கணக்கான பேய்களுக்கு மனித உருவத்தை அடையும் வரத்தை அளித்திருக்கிறாய்.''

பேய் ஆவேசம் வந்தவன் போல் கூவியது.

''பேய் உருவத்தில் இருந்தால் தீமையின் கருவாகவேதான் அவை இருக்க முடியும். வெளியில் ஒன்று, உள்ளில் ஒன்று என்று இருக்க முடியாது. உள்ளத்தால் பேயாக வாழ்ந்து, உடலால் மனிதனாய் நடித்து நல்ல பெயர் பெற்று வஞ்சகமாய் வாழ மனித உருவம் வசதியாய் இருக்கிறது. இதை நான் கண்ணாலே கண்டேன். விளம்பரத்துக்காக அன்பைப் பற்றிப் பேச்சும், பக்தியும் விளம்பரத்துக்காகச் சமூக சேவை என்றும்...''

பேய் அழுதது.

தெய்வத்தின் கண்களில் கண்ணீர் தேங்கி நின்றது. நியாயத்தின் முன் தெய்வமும் உருகிவிட்டது.

''ஆகவே, உன்மேல் ஆணையாகச் சொல்கிறேன்... நீ மனித வரம் கொடுத்திருக்கும் பேய்களை யெல்லாம் உடனே பேய்களாக மாற்று. பேய்களாய் வாழ்ந்து கேடு செய்வதைக் காட்டிலும் கோடி மடங்கு அவை மனிதனும் வாழ்ந்து நாசம் செய்கின்றன.... இந்த வரத்தை நீ அளிக்காவிட்டால் உன் நியதியைப் பொய் என்பேன். நியாயத்தைப் பொய் என்பேன். நீயே பொய் என்பேன்.''

தெய்வம் கண்ணை மூடிக்கொண்டு அமைதியாக இருந்தது. பிறகு ''ஆகட்டும். உனக்கு அந்த வரத்தைத் தந்தேன்'' என்று கூறியது. பேய் மகிழ்வுடன் கூத்தாடிக் கீழே பூமியைப் பார்த்தது.

பூமி சூன்யமாய் இருந்தது.

சின்னஞ் சிறு குழந்தைகள் கடற்கரையில் ஊஞ்சல் பொறுக்கி விளையாடிக் கொண்டிருந்தார்கள்.


நான் பலவீனமடைந்து களைப்புற்று வீட்டு வேலைகள் செய்ய முடியாமல் சிரமப் பட்டேன்.
எங்கள் அடுத்த வீட்டு மாமி தினமும் இரண்டு வேளை போர்ன் வீடா அருந் தவேண்டுமென்று சொன் னாள்.
அவர்களுடைய டாக்டரும் அதையேதான் சொன்னாராம். நானும் அதைக் கடைபிடித்தேன். சக்தியும் பலமும் பெற்றேன்.
இப்பொழுது உடம்பும் முன் போல நன்றாகிவிட்டது.
எல்லாம் போர்ன்-வீடா தந்த சக்தி.
Cadbury's
BOURN-VITA
THE IDEAL FOOD DRINK
MADE BY CADBURY'S SPECIALISTS IN FOOD DRINKS FOR 100 YEARS
நான் இவ்வளவு சக்தியுடன் எப்பொழுதுமே இருந்ததில்லை
BOURN-VITA
சக்திக்கும் வலிமைக்கும்
தயாரிப்பாளர்கள் : Cadbury's

# சிராப்பள்ளிக் குன்றுடையான்

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

பாண்டிய மன்னன் ஒருவன் தன் பட்டமகிஷியுடன் அரண்மனையின் உப்பரிகையிலே இருக்கிறான். மாலை நேரம் அது. அப்போது மந்தமாருதம் மெல்லெனத் தவழ்ந்து வருகின்றது. அந்தத் தென்றலோடே இனிய மணம் ஒன்றுமே மிதக்கிறது. அந்த நறுமணம் எங்கிருந்து வந்தது? இனிமையும் குளிர்ச்சியும் தவிர, தென்றலுக்கு என்று ஒரு நறுமணம் கிடையாதே என்று எண்ணுகிறான். ஒருவேளை தன் மனைவி அவளது கூந்தலில் நறுமலர் ஏதாவது சூடியிருப்பாளோ என்று அவன் தன் கூந்தலைப் பார்க்கிறான். அவள் அன்று கூந்தலில் மலர் ஒன்றும் அணிந்திருக்கவில்லை. அப்படியானால் மணம் எங்கிருந்து வந்தது என்று மீண்டும் பிறக்கிறது கேள்வி. இரவு முழுதும் இதே சிந்தனையில் இருந்த மன்னன் விடிந்ததும், தன் ஆஸ்தான மண்டபத்தில் பொற்கிழி ஒன்றைக் கட்டித் தொங்கவிட்டு, தன் உள்ளத்தில் எழுந்த எண்ணத்தையும் அதற்குரிய விடையையும் கூறுவார்க்கு அது, என்று சங்கப் புலவர்களிடம் தெரிவிக்கிறான். பல நாட்கள் கிழி அறுபடாமலேயே தொங்கிக் கொண்டிருக்கிறது. ஒருநாள் தருமி என்று ஒரு கோவில் அர்ச்சகன் வருகிறான். ஓர் ஓலையை நீட்டுகிறான். அந்த ஓலையில்,

கொங்கு தேர் வாழ்க்கை
　அம் சிறைத் தும்பி!
காமம் செப்பாது
　கண்டது மொழிமோ?
பயிலியது கெழீஇய
　நட்பின் மயிலியல்
செறி எயிற்று
　அரிவை கூந்தலின்
நறியவும் உளவோ
　நீ அறியும் பூவே?

என்ற பாட்டு எழுதியிருக்கிறது. தும்பியை நோக்கி, பெண்ணின் கூந்தலின் மணத்தை விடச் சிறப்பான மணம் உடைய பூ வேறு உண்டோ என்று கேள்வி கேட்பது போல், மன்னன் சந்தேகத்துக்கே அல்லவா விடை இருக்கிறது பாட்டில். ஆதலால் பரிசைத் தருமிக்கு வழங்க விரைகிறான் மன்னன். ஆனால் இடை புகுந்து தடுக்கிறான் சங்கப் புலவன் நக்கீரன். அவனது ஆட்சேபனை 'பெண்கள் கூந்தலுக்கு இயற்கை மணம் கிடையாது. அதனால் அப்பாடலில் பொருள் குற்றம் உண்டு' என்பதுதான். தருமிக்கோ பதில் சொல்லத் தெரியவில்லை. பாட்டு அவன் எழுதியது அல்லவே? அதை எழுதியது ஆலவாய் மேவும் அவிர் சடைக் கடவுளே அல்லவா; அதனால் அவரிடமே சென்று முறையிடுகிறான். அவரே கிளம்பி வந்து சங்கப் புலவராம் நக்கீரனைச் சந்திக்கிறார். அவரோ இறைவனே வந்தாலும் சாற்றிய செய்யுள் குற்றமே என்று சொல்கிறான். சிவபெருமானோ: 'நீ வணங்கி வரும் உமையின் கூந்தல்கூடவா இயற்கை மணம் வாய்ந்தது இல்லை?' என்கிறார். 'அதற்குமே கிடையாது நறுமணம் இயற்கையில்' என்று சாதித்து விடுகிறான். அப்படித் தருக்கிக் கூறியதால் நக்கீரன் இறைவன் கோபத்துக்கு உள்ளானதும், தொழுநோயால் துன்பமுற்றதும் சாப விமோசனம் பெற்றதும் ஒரு தனிக் கதை. இந்தக் கதையைப் படித்தபின் இயற்கையிலேயே நறுமணம் உடைய கூந்தலுடன் கூடிய அம்பிகையைக் கண்டு தரிசிக்க விரும்பினேன் நான். பல தலங்களில் கூந்தல் அழகிகள் பலரைக் கண்டு வணங்கியிருக்கிறேன். அவர்கள் எல்லாம் வண்டார் பூங்குழலி என்றும், ஏலவார் குழலி என்றும், கொந்தார் பூங்குழலி என்றும், குரவங்கமழ் குழலி என்றே பெயர் பெற்றவர்கள். பெற்ற பெயருக்கு ஏற்ப மலர்ச் சேர்க்கையால் ஏற்பட்ட மணம் நிறை கூந்தலை உடையவர்கள் அவர்கள். இயற்கையிலேயே நறுமணம் உடைய கூந்தல் அழகி ஒருத்தியும் இருக்கவே செய்கிறாள். அவளே சுகந்த குந்தலாம்பிகை, மட்டுவார் குழலி. அவள் கோயில் கொண்டிருக்கும் இடமே சிராப்பள்ளி குன்று. அந்தச் சிராப்பள்ளி குன்றுக்கே செல்கிறோம்.

தேவாரத்தில் சிராப்பள்ளி என்று வழங்கும் தலமே பின்னர் திருச்சினப்பள்ளி என்று மக்கள் வாயில் பயின்றிருக்கிறது. இன்று தமிழ் நாட்டின் நடு நாயகமாய்த் திருச்சிராப்பள்ளி என்னும் பெயரோடேயே வழங்குகிறது. திருச்சிராப்பள்ளி என்னும் திருச்சிக்குச் செல்ல நான் வழி சொல்லித்தான் உங்களுக்குத் தெரிய வேண்டுமா? சிராப்பள்ளி மலையும் மலைமேல் உள்ள தாயுமானார், அம்மலை உச்சியில் உள்ள பிள்ளையார் கோயில்களும் ரயிலில் வந்தாலும் சரி, ரோட்டில் வந்தாலும் சரி, பல மைல் தூரத்திலேயே தெரியும். ஜங்ஷனில் இறங்கி இரண்டு மைல் வடக்கே சென்றால் மலைக்கோட்டை கோயில் வாயில் வந்து சேரலாம். திருச்சி டவுன் ஸ்டேஷனில் இறங்கினால் கூப்பிடு தூரமே. இந்த மலைக்குத் திரிசிராமலை என்று ஏன் பெயர் வந்தது? அதுவா, இராவணனது ஒன்றுவிட்ட சகோதரர்கள் கரன், தூஷணன், திரிசிரா என்பவர்கள். இவர்களில் திரிசிரா இறைவனைப் பிரதிஷ்டை செய்து வணங்கிய தலம் இது என்பர் ஒரு சாரார். இல்லை, இங்கு உச்சிப் பிள்ளையார், இறைவன், இறைவி மூவரும் ஆளுக்கு ஒரு சிகரத்தின்மேல் இருக்கிறார்கள். அதனால் திரிசிகரம், திரிசிரா ஆயிற்று என்றும் கூறுவர். இதோடு பழைய கதையையுமே கேட்போம் அங்கு போனால். வாயுவுக்கும் ஆதிசேஷனுக்கும் பலப்பரீட்சை நடக்கிறது: ஆதிசேஷன் கைலை மலையைக்



*திருச்சி மலைக்கோட்டையும் தெப்பக்குளமும்*

கட்டிப் பிடித்துக் கொள்ள, வாயு வேகமாக அடிக்க, கடைசியில் ஆதிசேஷன் அசந்த சமயத்தில் கைலை மலையிலிருந்து பெயர்ந்த மூன்று துண்டுகள் காளத்தியிலும், இங்கும், இலங்கை திரிகோண மலையிலும் விழுந்தன என ஒரு புராண வரலாறு. அப்படி விழுந்த துண்டே இங்கே குன்றாக நிற்கிறது என்றும் கூறுவர். பள்ளி என்பதால் ஜைன முனிவர்கள் தங்கியிருந்திருக்கலாம். இத்தனையும் தெரிந்தபின் நாம் மலை ஏறலாமே? இங்குள்ள கோவில் மலைமேல் இருக்கிறது. மலை காவிரிக்குத் தெற்கே ஒரு மைல் தூரத்தில் ஊருக்கு நடுவே இருக்கிறது. கோயிலுக்குச் செல்ல இரண்டு வழிகள். பெரிய கடை வீதி வழியாகக் கடந்து வந்து அடித்தளத்திலிருந்து படியேறிச் செல்வது ஒன்று. மலையில் கால்வாசி தூரத்தைக் கிழ்ப்புறம் இருந்து வரும் ரோடு வழியாகக் கடந்து வந்து யானை கட்டும் மண்டபம் சேருவது மற்றொன்று. இங்கிருந்து மேலேயுள்ள **தாயுமானவர்** கோயில்வரை மண்டபம்போல் மேலே மூடிய படிக்கட்டு வரிசை உண்டு. இந்தப் படிக்கட்டு மூலம் ஏறினால் முதலில் வாகன மண்டபத்தையும், அதன் பின் தருமபுரத்தாரது மௌன மடத்தையும் கடந்தே நூற்றுக்கால் மண்டபம் வந்து சேர வேணும். அங்குதான் உத்சவாதிகள் நிகழ்கின்றன. சமயச் சொற்பொழிவுகளும் சங்கீதக் கச்சேரிகளும் ஏற்பாடு செய்யப்படுகின்றன. இதனை எட்டி நின்று பார்த்து விட்டே படிக்கட்டுகள் ஏறலாம்: இதன்பின் சித்திர மண்டபம். இங்குள்ள சிற்பங்களோ, சித்திரங்களோ கலை அழகு நிரம்பியவை அல்ல. இதையும் கடந்தபின் தாயுமானவர் கோயிலின் பிரதான வாயில். அந்த வாயிலில் மேற்கு நோக்கி நடந்தால் பல படிக்கட்டுகள் ஏறி, பல மண்டபங்கள் கடந்து இறைவனாம் தாயுமானவரையும் இறைவியாம் மட்டுவார் குழலியையும் தரிசிக்கலாம். கிழப்பக்கத்து வாயில் வழியாக நடந்தால் அந்த வழி **உச்சிப் பிள்ளையாரிடம்** கொண்டு சேர்க்கும். இந்தச் சிராப்பள்ளி மலையின் அடிவாரத்தில் ஒரு பிள்ளையார், உச்சியில் ஒரு பிள்ளையார். இந்த உச்சிப் பிள்ளையாரை முதலில் வணங்கி விட்டே, அதன்பின் அவரது அன்னையையும் அத்தனையும் கண்டு தொழலாம். உச்சிப் பிள்ளையார் கோயில் மலை அடிவாரத்திலிருந்து 273 அடி உயரம் என்று கணக்கிட்டிருக்கின்றனர். அடித்தளத்திலிருந்து 417 படிகள் ஏறியே அங்கு வந்து சேர வேணும்.

இங்கிருந்து திருச்சி, ஸ்ரீரங்கம், திருவானைக்கா, பொன்மலை, உறையூர் எல்லாவற்றையுமே ஒரு 'சர்வே' பண்ணலாம். இந்தப் பிள்ளையார் ஏன் இவ்வளவு உயரத்தில் வந்து உட்கார்ந்து கொண்டிருக்கிறார்? அதற்கு ஒரு கதை உண்டு. தென்னிலங்கை மன்னனான விபீஷணன், ராமன் தந்த அரங்கநாதனை எடுத்து வந்திருக்கிறான். ராமனோ இலங்கை செல்லும் வரை ஓர் இடத்திலும் இந்த மூர்த்தியைக் கீழே வைத்து விடக் கூடாது என்று உத்தரவிட்டிருக்கிறான். காவிரிக் கரைக்கு வந்ததும் விபீஷணனுக்கு நீராடும் ஆவல் பிறந்திருக்கிறது. அரங்கநாதனைக் கீழே வைக்க முடியாது தவித்திருக்கிறான். அச்சமயத்தில் பிள்ளையார் ஓர் அந்தணச் சிறுவன் வடிவில் அங்கு வந்திருக்கிறார். அவர் கையில் அரங்கனைக் கொடுத்துக் கீழே வைக்காமல் இருக்கச் சொல்லியிருக்கிறான். பிள்ளையாரோ குறும்புக்காரர். அவர் விபீஷணனிடம், 'உம்மை மூன்று முறை கூப்பிடுவேன். அதற்குள் வந்து வாங்கிக் கொள்ளாவிட்டால் கீழே வைத்து விடுவேன்' என்று எச்சரித்திருக்கிறார்.

அப்படியே விபீஷணன் குளித்துக் கரையேறுவதற்கு முன் மூன்று முறை கூப்பிட்டிருக்கிறார். விபீஷணன் காதில் இவரது குரல் விழவில்லை, பிள்ளையார் அரங்கனைக் கீழே வைத்திருக்கிறார். விபீஷணன் எழுந்து பார்த்ததும் பிள்ளையார் ஓடியிருக்கிறார், விபீஷணன் துரத்தியிருக்கிறான். இவர் விழுந்தடித்து மலை மேலேயே ஏறி நின்றிருக்கிறார். துரத்திவந்த விபீஷணனும் பிள்ளையார் தலையில் குட்டி இருத்தி இருக்கிறான். என்ன குட்டுப்பட்டால் என்ன? அரங்கனை இலங்கை செல்லவிடாமல் காவிரிக் கரையிலே இருத்திய பெருமையை அல்லவா தட்டிக் கொண்டு போய்விடுகிறார் இவர். அன்று மலையில் ஏறி அமர்ந்தவர் தான். பின்னர் இறங்கவே இல்லை. அர்ச்சகர் தயவிருந்தால் உச்சிப் பிள்ளையார் தலையில் குட்டுப்பட்ட வடுவையும் பார்க்கலாம். மாலை நேரமாகப் போனால் சந்நிதி திறந்திருக்கும். அவரைத் தரிசித்து விட்டே திரும்பலாம். திரும்பும் வழியில் உள்ள மணிமண்டபம் பதினாறுகால் மண்டபங்களையும் பார்க்கலாம்.

மணிமண்டபத்தில் உள்ள மணி, நாலு அடி எட்டு அங்குலம் உயரம் உள்ளது. இரண்டரை டன் நிறையுள்ளது என்பர். இதையெல்லாம் கவனிக்கத் தவறினாலும் வழியில் உள்ள பல்லவ குடை வரையைக் காணத் தவறக் கூடாது. இக் குடைவரை தாயுமானவர் கோயிலிலிருந்து உச்சிப் பிள்ளையார் கோயில் போகும் வழியில் முதலிலேயே இருக்கிறது. இதனை **லலிதாங்குர பல்லவேசுவர கிருஹம்** என்று புதைபொருள் இலாக்காவினர் போர்டு போட்டு நமக்கு அறிவிக்கிறார்கள். பல்லவ மன்னன் **மகேந்திர வர்மன்** அமைத்த குடைவரை: இக் குடைவரையில் சம்ஸ்கிருதத்திலும் தமிழிலும் சுவர் முழுதும் கல்வெட்டுக்கள். அதில் 104 செய்யுள்கள் தமிழில் அந்தாதித் தொடையாகவே இருக்கின்றன. இன்னும் இங்குதான் பிரசித்திபெற்ற **கங்காதரரது** சிற்ப வடிவம்

உடப்புச உருவில் இருக்கிறது. அவர் நிற்கும் கம்பீரமான தோற்றமும் அவரது தலையில் கங்கை அடங்கி ஒடுங்கியிருப்பதும், அவரைச் சுற்றி தேவர்கள் எல்லாம் தொழுது நிற்பதும் கண் கொள்ளாக் காட்சி. பல்லவர்களது கலை ஆர்வத்துக்குச் சிறந்த எடுத்துக் காட்டு இச் சிற்பவடிவம். இதனைக் காணும்போதே மலையீதுள்ள திருவீதியில் தென்பக்க வாயிலுக்கு மேற்கே உள்ள குடைவரையும் ஞாபகம் வரும். அது அவ்வளவு சிறப்பானது அல்ல என்றாலும் அங்கும் திரிமூர்த்திகள் மூவரும் உருவாகியிருக்கிறார்கள். இக்குடைவரையை மலையை விட்டு இறங்கி விடு திரும்பும்போது அவகாசம் இருந்தால் பார்த்துக் கொள்ளலாம். லளிதாங்குர பல்லவேசுர கிருஹத்தை விட்டு இறங்கி வந்து மேற்குநோக்கி விரைந்தால் பிரதான கோயிலுக்குள் நுழையலாம். இந்தக் கோயில் மலைமேல் நூற்றுஐம்பது அடி உயரத்துக்கு மேல் கற்களாலேயே சுவர்கள் எழுப்பிக் கட்டப்பட்டிருக்கிறது. இது கி.பி. 10 முதல் 12ம் நூற்றுண்டுக்குள் கட்டப்பட்டிருக்க வேணும் என்பது சரித்திர ஆராய்ச்சியாளரது அபிப்பிராயம். நமக்கு வியப்பெல்லாம் சரிவான மலையின்மீது செங்குத்தான சுவர்களை எப்படி எழுப்பி மண்டபங்கள் அமைத்தார்கள் என்பதுதான். பத்து வருஷங்களுக்கு முன் இந்துஸ்தான் கம்பெனியார் விமானம் கட்ட இரண்டு ஜெர்மன் எஞ்சினீயர்களை அமர்த்தியிருந்தார்கள். அவர்களைத் திருச்சி மலைக்கோட்டையில் ஏற்றி அங்கு கட்டப்பட்டுள்ள கோயிலைக் காட்டும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அந்த எஞ்சினீயர்களில் ஒருவரான ஸ்மிடிட் என்பவர், இப்படி மலைமேல் செங்குத்தாகச் சுவர் எழுப்பியிருப்பதைக் கண்டு மூக்கில் விரலை வைத்து அப்படியே அதிசயித்து நின்றுவிட்டார். இப்படியெல்லாம் கட்டிடக் கலையில் வல்லவர்களுக்கு விமானத்தளம் கட்டுவதுதானு பிரமாதமான காரியம் என்பதே அவர் வாய்விட்டுச் சொன்ன அபிப்பிராயம். ஆதலால் கோயிலின் கட்டிடக் கலையினைப் பார்த்தே மெய்மறக்கலாம், தலை நிமிர்ந்து நடக்கலாம் நாம். இந்தக் கோயிலில் மூலவர் மாத்ருபூதேசுவரர், தாயுமானவர், செவ்வந்தி நாதர், திருமலைக் கொழுந்தீசர் என்றும் பெயர் பெறுவர். இவர் உயிர்களுக்கெல்லாம் தந்தையானவர் என்பது நமக்குத் தெரியும். தாயும் எப்படி ஆனார் என்று தெரிய வேண்டாமா? காவிரிப்பூம் பட்டினத்திலே ரத்தின குப்தன் என்று ஒரு செட்டியார்; நல்ல சிவ பக்தர். அவருக்கு ரத்தினவதி என்று ஓர் அருமைமகள். அவளைத் திரிச்சிராப் பள்ளியில் உள்ள தனகுப்தன் என்பவனுக்கு மணம் முடித்துக் கொடுக்கிறார். பின்னர் இறந்து போகிறார். ரத்தினவதி கருப்பவதி ஆகிறாள். பேறு காலத்துக்குத் தன் தாயின் வரவை எதிர்பார்க்கிறாள்; தாயும் வருகிறாள். வரும் வழியில் காவிரியாற்றிலோ பெருவெள்ளம் கடக்க முடியவில்லை. அக்கரையிலே நிற்கிறாள். இதற்குள் பிரசவநேரம் நெருங்குகிறது. சிராமலை இறைவனே, ரத்தினவதியின் தாய் வடிவில் வந்து அவளுக்கு வேண்டியதை எல்லாம் செய்கிறார். அவளும் சுகமாக ஓர் ஆண்மகவைப் பெற்றெடுக்கிறாள். ஆற்றில் வெள்ளம் குறைந்ததும் உண்மைத் தாயார் வருகிறாள். தாயின் வடிவில் வந்த இறைவன் தன் உருக் காட்டி மறைகிறார். இப்படி உலகுயிர் அனைத்துக்கும் தந்தையாக இருப்பவர், செட்டிப் பெண்ணுக்குத் தாயாகவும் வந்து அவள் பிரசவ காலத்தில் உதவிபுரிந்ததனால்தான் 'தாயுமானர்' என்று பெயர் பெறுகிறார். இந்த இறைவனதுலிங்கத்திருஉரு நல்ல காத்திரமான வடிவம். இத்தலத்தில் கோயில் வாயில் எல்லாம் கிழக்கு நோக்கி இருந்தாலும் இறைவனும் இறைவியும் மேற்கு நோக்கியே நிற்கிறார்கள். மேற்கு நோக்கிய மூல லிங்கத்தின்மீது ஒவ்வொரு வருஷமும் பங்குனி மாதம் 23, 24, 25ம் தேதிகளில் மாலைச் சூரியனது கிரணம் விழுவதுண்டு.



கங்காளர்



கங்காதரர்

அப்படி விழும் வகையில் கோயில் மதிலைக் கட்டியிருக்கிறார்கள். கையிலையில் உள்ள உமை இத்தலத்தில் தாமரை மலர் ஒன்றில் பிறந்து காத்தியாயன முனிவரின் மகளாய் வளர்ந்து மட்டுவார் குழலி என்ற பெயரோடு இறைவனை, ஆம்! தாயுமானவரைத்தான், திருமணம் செய்து கொள்கிறாள். அன்னையின் வடிவம் அழகியது. இவ்விருவரையும் தவிர மற்றக் கற்சிலைகளும் செப்புச் சிலைகளும் ஏராளமாக இருக்கின்றன. வேதாரண்யத்தில் பிறந்து இந்தக் கோயிலில் வந்து தங்கிய அந்தத் தவயோகி தாயுமானவருக்கும் ஒரு சிலை அமைத்து வைத்திருக்கிறார்கள்.

இத்தலத்துக்குச் சம்பந்தர் வந்திருக்கிறார். அப்பர் வந்திருக்கிறார். இருவரும் பாடியிருக்கிறார்கள் :-

நன்றுடை யானைத்<br>
தீயதில்லானை, நரைவெள்ளேறு<br>
ஒன்றுடை யானை<br>
உமையொருபாகம் உடையானை<br>
சென்றடையாத திருவுடை<br>
யானைச் சிராப்பள்ளி<br>
குன்றுடையானைக்<br>
கூறஎன் உள்ளம் குளிரும்மே

என்பது சம்பந்தர் தேவாரம். இப்பாடலை வைத்தே நன்றுடையான் தீயதில்லான் என்று இரண்டு தீர்த்தங்கள் வேறே அந்த வட்டாரத்தில் அமைத்திருக்கிறார்கள். தூர வரும் போதே சிறு பிள்ளையான சம்பந்தருக்கு, சிராப்பள்ளி மலை யானை போலத் தோன்றியிருக்க வேண்டும். அந்தத் தோற்றத்தில் பிறக்கிறது பாட்டு. சிராப்பள்ளி குன்றைச் சம்பந்தர் பாடினால் சிராப்பள்ளிச் செல்வரைப் பாடுகிறார் அப்பர்.

மட்டுவார் குழலாளொடு மால்விடை<br>
இட்டமாக உகந்து ஏறும் இறைவனார்<br>
கட்டு நீத்தவர்க்கு இன்னருளே செயும்<br>
சிட்டர் போலும் சிராப்பள்ளி செல்வரே!

என்பது அப்பர் பாடல். இவ்விருவரையும் தவிர ஐயடிகள் காடவர்கோன், பொய்யாமொழிப் புலவர், தாயுமானவர் இன்னும் பலர் இத்தலத்து இறைவனைப் பாடியிருக்கிறார்கள். மாணிக்கவாசகரோ தாயான சர்க்கரை சென்று கதாய், என்று கோத்தும்பியை வேண்டியிருக்கிறார்.

தெய்வ மறை வடிவான<br>
பிரணவ சொரூபியே<br>
சித்தாந்த வித்திமுதலே<br>
சிரகிரி விளங்க வரு<br>
தக்ஷிண மூர்த்தியே<br>
சின்மயானந்த குருவே.

என்று இங்குள்ள தக்ஷிணமூர்த்தியையே பாடி மகிழ்ந்திருக்கிறார். இன்னும் இத்தலத்துக்கு, கோவை, உலா, யமக அந்தாதி என்றெல்லாம் புலவர்கள் பாடியிருக்கிறார்கள்.

புராணப் பிரசித்தியை விட இச் சிராப்பள்ளி மலை மிக்க சரித்திரப் பிரசித்தியுடையது இக்கோயிலில் பல கல்வெட்டுகள் உண்டு. குடைவரை கோயிலில் உள்ள கல்வெட்டுகள் பல்லவ மன்னனுடைய பிரதாபங்களைக் கூறுகின்றன. காவிரியைப் பல்லவ மன்னன் தன் காதலி என்றே அழைக்கிறான். உறையூர் கூற்றத்து சிற்றம்பர் கொடுத்த நில தானத்தைப் பற்றிய கல்வெட்டு இங்கே இருக்கிறது. பாண்டிய மன்னன் மாறன் சடையன், வரகுணன் முதலியோர்களுடையதும், விஜய நகர வம்சத்தைச் சேர்ந்த வேங்கட தேவ மகாராயரது சாசனங்களும் இருக்கின்றன. இவைகளில் சில சிதைந்தும் போயிருக்கின்றன. இத்துடன் ஆங்கிலேயரும் பிரஞ்சுக்காரர்களும் தங்கள் ஆதிக்கத்தை இந்தியாவில் நிலைநாட்ட முயன்ற போது நடந்த சண்டையின் நிலைக்களன் இம்மலைக்கோட்டை. சந்தா சாகிபு, முகமதலி கதையெல்லாம் நாம்தாம் படித்திருக்கிறோமே. இவ்வரலாற்றையெல்லாம் ஆராய்பவர்கள் ஆராயட்டும். அதற்கெல்லாம் நமக்கு அவகாசம் ஏது? நாமோ நானூறுக்கு மேற்பட்ட படிகள் ஏறி இறங்கி அலுத்து வந்திருக்கிறோம். என்றாலும் அதற்கெல்லாம் தக்க பலனாக, உச்சிப் பிள்ளையார், தாயுமானவர், மட்டுவார்குழலி மூவரையும் தரிசித்து விட்டு வந்திருக்கிறோமே, அது போதாதா?

# ரெக்ஸ்

## ஜெல்லி



## இன்பமான காட்சி...மிகுந்தசுவை...மிகவும்நல்லது!

பழங்களின் மணம் கமழும், எளிதில் தயாரிக்கக்கூடிய ஒரு இனிப்பு இதோ இருக்கிறது. ரெக்ஸ் ஜெல்லி கிரிஸ்டலை தண்ணீரில் கலக்கி, உறைய வையுங்கள்.

குடும்பத்தார் விரும்பும் போஷகமளிக்கும், இலேசான ஓர் சிற்றுண்டி. உடம்புதேறுவதற்கும்கூட இன்றியமையாதது. ரெக்ஸ் ஜெல்லி கிரிஸ்டல் அறுவகைச் சுவைகளில் கிடைக்கின்றன. ராஸ்பெரி, ஸ்ட்ருபெரி, லெமன், பைனபிள், ஆரஞ்சு, செர்ரி.




கார்ன் ப்ராடக்ட்ஸ் கோ. (இந்தியா) ப்ரைவேட் லிட்.

இந்தியாவிற்கான ஏஜெண்டுகள்: பாரி அன்டு கோ லிமிடெட்.

# மாற்றம்

வாதூலன்



எல்லோரும் போன பிறகும் கூட, ஞானசிராமன் தலையின் பின்னால் இரு கைகளையும் கோர்த்தபடி நித்திரையில் மூழ்கியிருப்பது போன்ற ஒரு பாவத்தில் வைத்திருந்தார். அவர் மன வண்டு, சற்று முன் சங்கரன் உதிர்த்துச் சென்ற மலரிலேயே ரீங்காரமிட்டுக்கொண் டிருந்தது.

''இந்தத் தடவை தப்ப முடியாது, ஐயா! ஞாபகமிருக்கட்டும்!''

என்ன அர்த்தம் அந்த வார்த்தைகளுக்கு? தம்முடைய சாமர்த்தியம், புன்சிரிப்பு, வாசாலகப் பேச்சு — எந்தக் குணங்களெல்லாம் இதுநாள் வரை அவரைச் சென்னையை விட்டு எங்கும் மாற நேரிடாதபடி உதவினவோ — அவையெல்லாம் இந்தப் புது மானேஜரிடம் பலிக்காது என்பதுதானே! கடைசியில் அவர் இறுமைக்கும் கூடத் தோல்வியா? இனி அவரும் மற்றவர்கள் போல் ஏதோ ஒரு சிறிய ஜில்லாவில் இருந்து, சென்னைத் தலைமை அலுவலகத்திலிருந்து சீறும் அதிகார உத்தரவுகளுக்குக் கீழ்ப்படிந்து பணி புரிய வேண்டுமா? சங்கரன் வேடிக்கையாகக் குறிப்பிட்ட மாதிரி, இத்தனை நாட்கள் 'பல்லக்கில் உட்கார்ந்தது' போக இனி அவரும் 'பல்லக்குத் தூக்க' வேண்டியதுதானா?

என்ன ஆச்சரியம்!

ஞானசிராமன் அந்தக் கம்பெனிக்குள் நுழைந்து நாளையோடு வருஷம் பத்தாகப் போகிறது. தென்னிந்தியாவெங்கும் பரந்து விரிந்திருக்கும் அந்தக் கம்பெனியில் ஞானசிராமன் மட்டும் சென்னையைத் தவிர வேறு எங்கும் மாற்றலாகாதபடி பார்த்துக் கொண்டவர், குறைந்தபட்சம் மூன்று ஆண்டுகளாவது ஜில்லாவிலிருந்து அனுபவம் பெறவேண்டும் என்ற பொது விதியைத் தம் சாமர்த்தியம் ஒன்றினாலேயே மீறி, 'அஸிஸ்டெண்ட்' பதவிக்கு உயர்ந்தவர். இப்போது அவருக்கும் வெளியூர் மாற்றலாகப் போகிறதாம்; இந்தத் தடவை தப்பவே முடியாதாம்! சங்கரன் சொல்லிவிட்டுச் செல்லுகிறான்.

ஞானசிராமன் சிரித்துக் கொண்டார் மனத்துக்குள்ளேயே. இதுபோல் எவ்வளவு முறைகள் சொல்லியாயிற்று. ஒவ்வொரு தடவையும் 'இப்ப நிச்சயம்' என்று மற்றவர்கள் எண்ணும்போதே, அந்த எண்ணத்தை முளையிலேயே கிள்ளி, சென்னையிலேயே அமர்ந்தவராயிற்றே அவர்!

அந்தக் காலத்தில் படித்துப் பட்டம் பெற்ற உடனே வெளி இடங்களில் கிடைக்கும் வேலைகளையெல்லாம் உதறிவிட்டுச் சென்னையிலேயே கிடைத்தால்தான் ஒப்புக்கொள்ளுவது என்ற வீம்புடன் இருந்தவர் ஞானசிராமன். தகப்பனார்கூடக் கேலியாக ''மெட்ராஸிலேயே - மாம்பலம், மங்கேஷ் தெருவிலேயே வேலை வேண்டுமென்றும் முடிகிற காரியமா?'' என்று கேட்டதுண்டு. அப்போதெல்லாம் ஞானசிராமன் 'கிடைக்காமற் போகிறதா, பார்ப்போம்' என்று புன்சிரிப்பினாலேயே பதில் கொடுத்தார். கடைசியில் அவர் மனம் போலவே, தென்னிந்தியாவெங்கும் வியாபித்திருக்கும் ஒரு பிரபல கம்பெனியிலேயே வேலை கிடைத்தது. அப்போதுகூடச் சிலர் கேட்டார்கள்: ''வேறெங்காவது மாற்றினா என்ன செய்வே?'' என்று.

''எங்கே மாற்ற முடியும்? மிஞ்சினால் மவுண்ட்ரோடு பிராஞ்ச்; அவ்வளவுதானே!''

'' அவ்வளவு 'லேட்'டா சொல்லாதே, அப்பனே! திடீரென்று பெஜவாடாவுக்குக் கூட மாற்றலாம், தெரியுமா?''

ஞானகிராமன் கொஞ்சம் பயப்படத்தான் செய்தார். எனினும் காட்டிக்கொள்ளாமல் "பார்க்கலாமே!" என்று வெளிப்படையாகச் சொன்னார்.

சேர்ந்து நான்கு ஆண்டுகளுக்கு அப்புறம் தான் முதன் முதலாக அவர் வார்த்தைகளுக்குச் சோதனை ஏற்பட்டது. மணமாகித் தந்தையாகும் பேற்றை எதிர்நோக்கிக் கொண்டிருக்கும் தருணம்; ஈரோட்டுக்கு அவரை மாற்றப் போவதாகப் பேச்சு வந்தது.

"இனிமேல் இங்கே காத்து வாங்கிண்டு கதை பண்ண முடியாது ஐயா! தூக்கு மூட்டையை!" என்றெல்லாம் சக உத்தியோகஸ்தர்கள் கலாட்டா பண்ண ஆரம்பித்து விட்டார்கள். மனக் கவலையை வெளிக் காட்டாதபடி சிரித்துக் கொண்டே சரிக்குச் சரியாகப் பேசிக் கொண்டிருந்தாலும் ஏதோ ஒரு புதிய உணர்வு-அச்சம் போன்ற ஒன்று-மெல்ல இதயத்தின் அடித்தளத்தில் எழும்பலாயிற்று. 'மாற்றலாகி, ஈரோட்டிலே போய் எப்படித் தனியாக இருப்பது? பழக்கமேயில்லையே! அவளுக்கு வேறு பிரசவ சமயம்.' நீண்டு கொண்டே சென்ற சிந்தனை சட்டென்று ஒரு முடிவுக்கு வந்தது.

அன்றுமாலையே ஞானகிராமன் நேரே மேலதிகாரியைக் காணச் சென்றார். தம் சுறுசுறுப்பான குணத்தின் மூலம் முன்பே அவரிடம் நல்ல பெயர் வாங்கினவர். கூடவே எதற்கும் இருக்கட்டுமென்று மல்கோவா மாம்பழம் ஒரு டஜன் வாங்கிச் சென்றார்.

மேலதிகாரி சுமுகமான குணம் உடையவர். அலுவலகத்தில் அதிகாரியானாலும், வீட்டில் நண்பரைப் போலவே முக மலர்ச்சியுடன் வரவேற்றார். "கம் இன்!"

"உங்கள் பையனுக்கு ஐ.ஏ.எஸ். பாஸாகி இருக்கிறது போலிருக்கிறது! என் அன்பளிப்பாக இதைக் கொடுங்கள்!" என்று பேச்சை ஆரம்பித்தார். யார் யாரை எப்படி எப்படிக் 'கொக்கி' போட்டு இழுக்க வேண்டும் என்று ஞானகிராமனுக்கா தெரியாது?

"ஆமாம்! ஆமாம்! அதிர்ஷ்டந்தான்!"

"வெறும் அதிர்ஷ்டம் என்று சொல்ல முடியுமா? புத்திசாலித்தனமும்தான்!"

அதிகாரியின் முகம் பூரித்து விட்டது. "வீட்டில் எல்லாரும் சௌக்கியம்தானே?" என்று விசாரித்தார்.

"மனைவிக்கு இப்போ பிரசவ சமயம்."

"கங்கிராஜுலேஷன்ஸ்!"

"இப்ப எங்கேயாவது மாத்தினால் சிரமந்தான்!" என்றார் ஞானகிராமன் இயல்பாக.

"என்ன ஸார்! மாமனார் வீட்டிலேதானே உங்க 'மனைவி' இருக்கிறாள்?"

"இல்லையே! அங்கே வசதியே கிடையாது! எல்லாம் இங்கேதான்! அதான் யோசிக்கிறேன்!"

"அப்படியா! ஏதோ 'பிரபோஸல்' வந்தது நேத்திக்கு! நான் அதை மாற்ற முயல்கிறேன்!"

நன்றியுடன் கைகுவித்து விட்டு, வீடு திரும்பினார் ஞானகிராமன். அவர் புள்ளி தவறுமா? மூட்டம் போட்டிருந்த வானம் பிசுபிசுப்பது போலாகி விட்டது.

அது மட்டும் அல்ல; பதவி உயர்வு வேண்டுமானால் குறைந்த பட்சம் மூன்று ஆண்டுகளாவது ஏதாவது ஒரு ஜில்லாவில் இருந்து அனுபவம் பெற்றிருக்க வேண்டும் என்று கம்பெனி விதி இருந்தது! அதையும் தமது மதிக் கூர்மையினால் துண்டித்தெறிந்தார்.

வெளியில் எங்கும் போகாமல் சென்னையிலிருந்து கொண்டே பரீட்சை பாஸ் செய்து 'அஸிஸ்டெண்'டாகி விட்டார் ஞானகிராமன்.

மற்றவர்களுக்கெல்லாம் தம் மீது ஒரு 'காரம்' உண்டு என்பதை அவர் உணராமல் இல்லை. 'காக்காய்', 'ஐஸ்கிரீம்!' போன்ற பட்டப் பெயர்கள் தமக்குச் சூட்டப்பட்டிருந்ததையும் அவர் அறியாமலில்லை. எப்படியோ தம்முடைய காரியத்தைச் சாதித்துக் கொள்ளும் அவர், அதற்காக மற்றவர்களின் நலனைக் கெடுக்கமாட்டார்.

அப்படி இப்படியென்று எட்டு வருஷங்கள் சென்னையிலேயே தள்ளி விட்ட ஞானகிராமனுக்குப் போன வருஷம் பிப்ரவரி மாதம் ஒரு சோதனை ஏற்பட்டது.

சேலம் பிரிவில் தகுதியான ஆள் தேவைப்பட்டது: அதற்கு ஞானகிராமன் பெயரும் அடிபட்டது. முதல் தடவையாக ஞானகிராமன் தயங்கினார்.

"இனிமே நான் இங்கே இருப்பது நாள் கணக்குத்தான் போலிருக்கிறது!" என்றார் ஞானகிராமன்.

"ஏன்?.... ஓ! அதுவா! இன்னும் நிர்மாணமாகவில்லையே!" என்றார் ரங்கராஜன்.

"ஆகலே; ம்..... உங்கள் பெயரும் அடிபட்டாற் போலிருக்கிறதே!" என்றார் ஞானகிராமன்.

"எனக்கென்ன! உங்க மாதிரியா! எங்கே மாத்தினாலும் போகத் தயார்!"

"நிஜமா?" என்றார் ஞானகிராமன் மனத்தில் ஏதோ தோன்ற.

"இதிலே நிஜமென்ன, பொய்யென்ன! உங்க மாதிரி ஒரே இடத்திலே பழகிப் போனவன் நான் இல்லே! சேலமா சரி! மதுரையா 'ரெடி!' எதுவானாலும் என்ன......" என்றார் ரங்கராஜன். நுணல் தன் வாயால் கெட்ட கதை ஆயிற்று. ஞானகிராமன் சென்னையை விட்டுப் போகவில்லை!

ஆனால் இந்தத் தடவை நிச்சயமாக முடியாதாமே! சங்கரனின் வார்த்தைகள் சில



தடவைகள் தமாஷாக இருந்தாலும், சில முறைகள் உண்மையாக ஆவதும் உண்டு. கனம் ஏறின மனத்தோடுதான் அன்று வீடு திரும்பினார் ஜானகிராமன்.

ஒரு வாரம் ஆயிற்று. அன்று மத்தியானம், "என்ன சாமி! போட்டாலும் போட்டாங்க, கன்னியாகுமரிக் கோடிக்கே போட்டுட்டாங்களே!" என்று துக்கம் விசாரிப்பது போன்ற தொனியில் தலைமை இலாகா பியூன் ஆறுமுகம் வந்து சொன்னவுடன் ஊர்ஜிதமாகி விட்டது ஜானகிராமனுக்கு. தலைமை இலாகா செய்தி ஒன்றுகூட அவனுக்குத் தெரியாமல் பரவாதே!

ஜானகிராமனுக்கு ஒரே கவலையாகிவிட்டது. ஓர் இடத்தை விட்டு இன்னொரு இடத்துக்குப் போவதென்றால் எத்தனை தொல்லை! குழந்தைகள் படிப்பு கெட்டுவிடுமே? சாந்தாவுக்குப் படிப்பு போதாது; கூட யாராவது தூண்டிக் கொண்டேயிருக்க வேண்டும். 'அவனுக்கு' அத்தனை சாமர்த்தியம் இல்லை! சரி போகிறது, மணி அப்பா ஓட்டியாயிற்றே! கூட அவனையும் கூட்டிச் செல்ல முடியுமா? எப்படித்தான் இருக்கப் போகிறானோ, நம்மை விட்டு! இல்லை, எல்லாரையுமே அழைத்துக் கொண்டு நாகர்கோவிலிலேயே குடித்தனம் வைக்கலாமென்றால், அதுவும் சாத்தியமாகத் தெரியவில்லையே!

அவர் மனக் கவலைகளைச் சற்றும் பொருட்படுத்தாமல் 'மாற்றல் உத்தரவு' இருபத்தி ஐந்தாம் தேதியன்று அவர் கைக்கு வந்தது.

'எப்படி அந்த உத்தரவை ரத்து செய்வது? மானேஜர் முரடாயிற்றே! நாம் என்ன கஜகர்ணம் போட்டாலும் அவர் மனத்தை மாற்ற முடியாதே! இந்தத் தடவை மாற்றலுக்குப் பணிந்துதான் ஆகவேண்டும்போலிருக்கிறதே என்று எண்ணியவரை, 'நாம் கிணற்றுத்தவளை மாதிரி சென்னையே கதி என்று கிடந்தோமே! இப்பொழுது வெளியூருக்குப் போய் எப்படி இருப்பது, பழகுவது' என்ற கவலை பிடித்துக் கொண்டது. நாலு ஊருக்குப் போய் வரும் பழக்கத்தை நாம் அன்றே ஏற்படுத்திக்கொண்டிருக்கக்கூடாதா என்று எண்ணினார். என்ன எண்ணி என்ன?

புறப்படும் நாளும் வந்து, மணியும் வந்து, ரயில் புறப்பட இன்னும் கால் மணி நேரம்தான் பாக்கி இருந்தது. மனைவிக்கும் மாமனுக்கும் புத்திமதி சொல்லி அலுத்துவிட்டார் ஜானகிராமன்.

"நீங்க ஏறுங்கோ! நாழியாகிறது!"

"சரி" என்று படியில் ஒரு காலை வைத்திருப்பார்; தூரத்தில் பியூன் ஆறுமுகம் தம்மை நோக்கி ஓடி வருவது தெரிந்தது.

"என்ன விஷயம்? எதற்காக இவன் ஓடி வருகிறான்?"

"இறங்குங்க சார்! ஐயா கூப்பிடறாரு!"

"என்னது!"

"எல்லாம் நல்லதுதான்! வாங்க சார்!"

'விர்'ரென்று வண்டியேறப் போகும் பிரயாணிகளைக் கொண்டு விட்ட டாக்ஸி ஒன்று அவர்களைச் சுமந்து சென்றது.

"மன்னிக்கணும் ஜானகிராமன்! உங்களுக்கு ரொம்பத் தொல்லை கொடுத்திட்டேன்!" என்று மானேஜர் உள்ளே அழைத்தார். "சுப்பிரமணியன் வந்து என்னிடம் ரொம்பக் கெஞ்சினான். அவனுக்கு நாகர்கோவிலிலேதான் குடும்பம் இருக்கு. உங்க இடத்திலே அவனைப் போட்டுடறேன்! போட்ட 'ஆர்டரை' ரத்து செய்துடறேன்! நீங்க பழைய 'ஸீட்'டிலேயே இருங்கோ. என்ன சரிதானே?" என்றார் மானேஜர்.

"சுப்பிரமணியத்துக்கு மானேஜர்கிட்டே 'இன்புளுயன்ஸ்' ஜாஸ்தி. அது நம்மவருக்குச் சாதகமாயிடுத்து!"

"ஜானகிராமன் அதிர்ஷ்டந்தான் தெரிஞ்சிருக்கே!"

"சும்மா விடமாட்டோம்! தேநீர் விருந்து கொடுத்தாகணும், ஆமாம்!"

"ஜானகிராமனாவது? சென்னையை விட்டு நகர்வதாவது!"

காரியாலயத்திலே நண்பர் குழாம் ஜானகிராமனது அதிர்ஷ்டத்தை இப்படியாகப் பாராட்டிக் கொண்டிருந்தது!

---

கல்கத்தா ரசிகரஞ்சன சபாவின் அன்பளிப்பான வெள்ளிக் கப்பலை, "கப்பல் ஓட்டிய தமிழனாக" நடித்துப் புகழடைய நடிகர்திலகம் திரு சிவாஜி கணேசனுக்கு ஆசி கூறி, நாடக விழாவின் தலைவர் மேஜர் ஆர். சபேசன் அவர்கள் அளிக்கிறார்.



பிரபல பல்வைத்திய நிபுணர்கள் நிரூபித்துள்ளனர்

# கால்கேட் குளோரோபில்




## ஈறுகளை பலப் படுத்து கிறது

**வாய் நாற்றத்தை அதி தீவிரமாய் ஒழிக்கிறது!** "ஆன் மோஸ்கோப்" பரிசோதனைகளில், கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட், வேறெந்த சாதாரண பற்பசையையும்விட மிகத்தீவிரமாக வாய் நாற்றத்தை ஒழிக்கிறது என்பது நிருபணமாயுள்ளது.

**சொத்தைபற்கும் கிருமிகளை ஒழிக்கிறது!** கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை ஒவ்வொரு முறையும் சாப்பிட்டவுடன் தேய்ப்பதால், பற்களை சொத்தையாக்கும் கிருமிகள் அழிகின்றன.

கால்கேட்டின் பிரத்தியேகமான சேர்க்கை முறையைக் கொண்ட குளோரோபில்லின் பூரண பலனை அடையுங்கள்.... கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்ட் அல்லது கால்கேட் குளோரோபில் டூத் பவுடர் வாங்குங்கள்!

கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்டை தினமும் தேய்ப்பதால், தீவிரமான குளோரோபில்லின் பூரண நன்மையை அடைந்து, ஈறுகள் உறுதியாகவும் ஆரோக்கியமாகவும் இருக்க ஏதுவாகிறது. உன்னதமான இந்த குளோரோபில் டூத்பேஸ்ட், சிறந்த பற்பசை, பற்பொடி முதலியவை தயாரிப்பதில் மிக்க அனுபவங்கொண்ட உலகிலே மிகப்பெரிய ஸ்தாபனத்தாரால் தயாரிக்கப்படுகிறது!

வேறு எந்த பற்பசையிலும் இதைவிட அதிக வீரிய குளோரோபில் இல்லை — குழந்தைகள் அதன் பெப்பர்மிண்ட் வாசனையை மிகவும் விரும்புகிறார்கள்!




CTPA-C-10 TAM.

# அஞ்சலி

இரவின் எல்லைக் கோட்டுக்குள் மாலை நடந்து கொண்டிருந்தது.

மொட்டை மாடியில் வெற்றுத் தரையில் மடித்த கைகளின் மேல் தலையை வைத்துக் கொண்டு மல்லாந்து படுத்திருந்தான் ரமணி. அவனுடைய பார்வை மேலே கவிந்திருந்த ஆகாயத்தில் அழுந்திப் போய்ச் சிந்தனையில் ஆழ்ந்திருந்தது.

தடதடவென்று மாடிப் படிக்கட்டில் யாரோ ஏறி வந்து, கதவைத் திறக்கும் ஒலியில் ரமணியின் நெஞ்சம் தெம்பு கண்டாற் போல் சிலிர்த்துக் கொண்டது. அவன் கண்கள் இயல்பாக மூடின.

அருகே வந்து உட்கார்ந்து கொண்டது சாந்திதான் என்று தெரியும். கருடன் இறக்கை விரித்து இறங்குவதுபோல் மௌனம் அவர்களின் மேல் சரிந்தது.

சாந்தியின் இதயத்தில் முட்கள் தைத்துப் புதைந்தன. தன்னந்தனியாய், நிராதரவாய் எங்கும் ஒன்றுமல், இசை தவறித் தவிக்கும் ஒற்றைப் பறவையாய் அவன் படுத்திருக்கும் அந்நிலையில் அவள் நெஞ்சு உருகியது. சியாமளா அவனை இப்படி ஏங்கவிட்டுஏமாற்றி இருக்க வேண்டாம்!

புரிந்தும், புரியாததுமாய் எண்ண அலைகள் புரண்டு அடித்துக் கொண்டு அவனுள் எழுகையில் அவன் முகத்தில் தோன்றும் வேதனை இழைகளைச் சாந்தியால் சகித்துக் கொள்ள முடியவில்லை. நெடிய அவள் மூச்சுக் காற்று அவன் முகத்தில் சூடாய் மோதியது.

"சாந்தி!"

"நீங்கள் என்ன அப்படி யோசிக்கிறீர்கள்?"

"எனக்கே புரியவில்லை. உனக்கு எப்படிச் சொல்லப்போகிறேன்?"

"எனக்குப் பயமாயிருக்கிறது."

"என் இமைக்குள் நான் என்னையே பார்க்கிறேன், சாந்தி!"

"ஏன் இப்படியெல்லாம் பேசுகிறீர்கள்?"

"என்னுள் நீயும் சியாமளாவும் நிழல் படமாய்த் தெரிகிறீர்கள்..."

"அப்படி யென்றால்..."

"நடந்த சம்பவமெல்லாம் ஒன்றன் பின் ஒன்றாய்த் தெரிகிறது."

சாந்தி மேலே பேசவில்லை. அந்த நிலையிலேயே அவனை விட்டு நகர்வதைத் தவிர வேறு வழி தோன்றவில்லை.

ரமணி நீர்ச் சுழலில் சிக்கிக் கொண்டாற் போல் நினைவில் மூழ்கி மூழ்கித் திணறினான். தாழையைப் போல் ஒன்றொன்றாய், தனித் தனியாய் நினைவு மடல்கள் அவிழ்ந்து சிந்தும் மகரந்த கந்தம் நினைவைச் சுழற்றியது.

அன்று பார்த்த சாந்தியின் வடிவம் அன்று பார்த்தபடியே அப்போதுதான் புதிதாய்ப் பார்ப்பதுபோல் அவன்இமைத் திரைக்குள் தண்மையாய் நடமிட்டது. கர்வமற்ற



ஒரு தனித்துவம்-அதுதான் சாந்தியின் அழகு ரகசியம். அந்த அழகுக்கு இணையில்லைதான். ஆனால் அப்போதே அவன் அதை உணர்ந்து கொள்ளாமல் போய் விட்டானே?

அப்போது அவனுக்கு அதையெல்லாம் உணர்ந்து கொள்ளும் வயதில்லை. கல்லூரியில் அவன் படித்த நாட்களில் கல்லூரிப் பாடங்களைத் தவிர வேறெதுவும் அவன் நினைவில் இடம் கண்டதில்லை. எதிர் வரிசையில் சாந்தி உட்கார்ந்து கொண்டு அருவும் பார்வையுடன் அவனைப் பார்த்தபடி லயித்துப் போயிருப்பது வெகு நாட்கள் வரையில் அவன் கண்களில் பட்டதே யில்லை.

ஏதாவது ஒரு காரணத்துடன் அவனிடம் அடிக்கடி பேச்சுத்தொடுப்பாள் சாந்தி. பாடப் புத்தகம் இரவல் கேட்பதாக இருக்கும், ஒரு சமயம். பரிசோதனைச் சாலையில் செய்முறை பற்றியதாக இருக்கும் மறு சமயம். கணிதத்தில் முடிவு கிடைக்கத் தேவையான தேற்றத்தைப் பற்றிய சந்தேகமாயிருக்கும் வேறு சமயம்.

நெற்றியில் விழும் கேசச்சுருள் பார்வையை மறைக்க, பதில் சொல்ல நாவெழாமல் செயலிழந்து நிற்பாள் ரமணி அப்போது. சங்கோசத்தினால் உடல் சிலிர்க்க அவள் தன்னைக் கண்டு தடுமாறித் தவிப்பதைப் பார்ப்பது அவனுக்குப் பிடித்த வேடிக்கையாய் இருக்கும். அவள் இதழோரத்தில் புன்னகை ஒளிக்கொடியாய்ப் படர்ந்தோடும். அவன் அப்பால் நகர்ந்ததுடன் அவள் சமநிலை அடைந்து விடுவாள்.

அப்போது அவனுக்கே தெரியாமல் அவள் இதயத்தின் ஒரு மூலையில் உதித்து வரும் பூப்போன்ற எண்ணம் புரியாமல் அழகு சிந்தும். ஒன்றுமே புரியாமல் இருப்பதுதான் அதன் அழகோ என்னவோ!

இதயத்தில் முளைத்த அந்த உணர்வு மலர் தனக்கே உரிய சாவதானத்தோடு, மெள்ளச் செழித்துப் பெரிதாகி, சிந்தனையில் வெளிப்படும் சொல் போல், இதழ்கள் ஒன்றொன்றாய்ப் பிரிந்து அவிழ்ந்து மணம் எழுந்தபோது அவனுக்கும் சாந்திக்கும், கல்லூரிப் படிப்பு முடிந்தாயிற்று.

கல்லூரியின் கடைசி வேலை நாளன்று சாந்தி ஏதோ ஒரு காரணத்தைத் தேடிவைத்துக் கொண்டு அவனிடம் வந்தாள். கல்லூரியின் நூலகத்தில் ஒரு குறிப்பிட்ட புத்தகம் இருக்கிறதா என்பது பற்றி விவாதம். அவனுக்கு அவளோடு நூலகம் சென்றாக வேண்டி வந்து விட்டது.

அந்தப் புத்தகம் கிடைத்தது. எடுத்து வந்து பிரித்து வைத்துக் கொண்டு தனிப்புறமான ஒரு மேஜையின் முன் ஒடுங்கி அமர்ந்தான். சாந்தி அவன் எதிரே வந்து உட்கார்ந்தாள்.

இருவருக்குமே இன்றுதான் கல்லூரியில் கடைசி வேலை நாள் என்ற எண்ணம் எழுகையில், நல்ல கனவின் நடுவே விழித்துக் கொண்டு எழுந்து விட்டாற்போல் வேதனை பாய்ந்தது. அவள் சொல்லத் தெரியாமல் தவித்தாள். அவன் தாங்க முடியாமல் தவித்தான்.

சாந்தியின் கண்கள் கறுப்புத் திராட்சையாய் மின்னின. அவள் விழிப்பாவையில் அவன் உருவம் நிழற் படமாய் நடுங்கியது.

சொல்ல நினைத்தது எதையும் சொல்லிக் கொள்ள முடியவில்லை. முடிவில் மேஜையின் மேல் கையூன்றி எழுந்து வெளியே வேகமாகச் சென்று விட்டாள் சாந்தி.

அவள் சென்றதும், அவள் கை ஊன்றிய இடத்தில் விட்டுச் சென்ற காகிதம் அவன் பார்வையை உறுத்தியது. குளிர் கண்டு விட்டாற்போல் நடுங்கிய விரல்களால் அக்காகிதத்தைப் பிரித்தான்.

காகிதத்தில் தன்னந்தனியாய் எண்ணற்ற பட்டு இதழ்களைச் சிலிர்த்துக் கொண்டு குறும்புப் பார்வையுடன் நாணத்தோடு நின்றது ஒரு தாமரை. பூ மிதக்கும் குளத்தின் ஜலத்தட்டின் சிற்றலைகளில் குண்டு குண்டாய்ச் 'சாந்தி' என்னும் கையெழுத்து நலுங்கியது.



கும்மிருட்டில் மின்மினி வெளிச்சம் கண்டாற்போல் அவன் நிமிர்ந்தான். அவனுக்குள் மின்சாரம் பாய்ந்தது.

தன் பேனாவைத் திறந்து, கவனத்தோடு ஒரு துளி மையைக் காகிதத்தின் மேல் உதறினான். காகிதத்தில் ஒரு துளி மை கமலத்தின் மேல் கருவண்டு இறங்குவதுபோல் அமைந்தது. இதயத்தில் மகிழ்ச்சி ததும்பியது.

மைத் துளி உலர்ந்ததும், காகிதத்தை மடித்து அப்போதே சாந்தியிடம் திரும்

வீ. சுவாமிநாதன்

பக் கொடுத்து விட்டாள். "இதை 'லைப்ரரி'யில் மறந்து வைத்து விட்டீர்கள், இந்தாருங்கள்!"

அவன் காகிதத்தைத் திருப்பப் பெற்றுக் கொண்டு பிரித்துப் பார்த்தான். அவன் கண்கள் சலனமில்லாமல் ஒளிவிட்டன. நன்றி சொல்லிவிட்டு அகன்றான்.

அடிவைத்து அவள் அப்பால் செல்கையில் அவள் பின்னழகில் அவன் கண்கள் பதிந்தன. அவன் விழுந்து போனான்.

அவன் கோடி காட்டியதை அவள் புரிந்து கொள்ளவில்லையா என்ன? தன் மனத்தின் வாசலை இதற்குமேல் திறந்து காட்ட அவனுக்குத் திறனில்லையே!

பிறகு, காற்றடிக்கையில் பிரித்து வைத்த புத்தகத்தில் பக்கங்கள் புரள்வதுபோல் நாட்கள் ஒன்றையொன்று தொடர்ந்தன.

அவனுக்குக் கல்லூரியில் இறுதித் தேர்வும் நெருங்கியது. தேர்வுக்குப் படித்துக்கொண்டிருக்கையில் அச்சடித்த எழுத்துக்களின் மையத்தில் சாந்தியின் வதனம் எட்டிப் பார்த்துக் கண்களால் நகைக்கும். சிரிப்பில் சரம் கட்டியதுபோல் பற்கள் அணிவகுத்துப் பிரகாசிக்கையில் ஒரே ஒரு தெற்றிப் பல் மட்டும் குறும்பு சிந்தி மயக்கும். அந்த முகத்தை அப்படியே அணைத்துக் கொண்டு விடவேண்டும் என்ற ஆசையில் அவன் கைகள் பின்னிக் கொண்டு, இறுக்கும் போது காற்றலைகள் தான் சிக்கிக் கொள்ளும். எண்ணெய் தீர்ந்து போன கைவிளக்காய் அவன் ஒளி மங்கிப் போய்விடுவான்.

தேர்வுக்குப் பிறகு சாந்தி அவன் கண்ணில் படவில்லை. இனி அவளைக் கண்ணால் பார்க்கப் போவதே இல்லையா? நடுக்கோடையில், வெள்ளிவாள் வெய்யிலில் இறங்கும்போதே, தன்னந்தனியான ஒரே ஒரு மேகம் தூறலாய்ச் சிந்தி, வான விளிம்பில் ஆச்சரியமான வண்ணத்தில் வானவில்லாய்த் தோன்றி மறையுமே-அதைப் போல்தானா சாந்தியும்?......அப்படியானால் எதற்காகத் தோன்ற வேண்டும்? மனசைக் குழப்பிவிட்டுப் பொய்மையாய் எதற்காக ஒதுங்க வேண்டும்?

இந்தக் கட்டத்தை நெஞ்சம் கூட்டுகையில் ரமணியின் கண்களில் நீர் மோதும். சிரமப்பட்டு அடக்கிக் கொள்வான்.

மறுபடியும் மெல்ல மெல்ல அடி பதித்துச் சாந்தி ஏறிவரும் ஒலி கேட்கிறது. அவள் ரமணியின் அருகே நின்றபடி அவனைப் பார்க்கிறாள். இரவின் இருளில், ஆதாரமில்லாது அந்தரத்தில் தொங்குகிறாற் போன்ற உலகின் மோனத்தில், அநாதையாய் அவள் ஏங்கி நிற்பதைப் பார்க்கையில் துக்கம் அடிவயிற்றில் உடைப்பெடுத்தது.

"இதோ பாருங்கள்!"

"ஊம்!"

"ஏதாவது பேசுங்களேன். எனக்குப் பயமாயிருக்கிறது!..."

ரமணியின் கண்கள் புன்னகை புரிந்தன. இமை பிரித்து, அவளைப் பார்த்தபோது, வேதனையில் தோய்ந்த சாந்தியின் முகம் குழந்தை முகமாய்த்தான் இருந்தது. என்றுமே சாந்தி குழந்தைதான்.

"நீங்கள் சாப்பிட வரவில்லை?"

"எனக்கு வேண்டாம்."

"காலையிலும் சாப்பிடவில்லை...".

"இன்னும் படிக்கவில்லை."

"பாவி, ஸ்யாமளா, தானும் மறைந்து போய் உங்களையும் எப்படி ஆக்கிவிட்டுப் போய்விட்டாள்..."

குப்பென்று தாழைப் போத்தின் மணம் காற்றோடு வருகிறாற் போன்ற பிரமையில் ரமணியின் தலை 'கிர்'ரிட்டது. போத்தின் முதல் மடல் அவிழ்ந்து விழுந்தது. புதுமையாய் அடுத்த மடல் சிரித்தது.

'ஸ்யாமளா, போகிற போக்கில் நிஜமாகவே என்னை ஏன் இப்படி ஆக்கிவிட்டுப் போய் விட்டாய்? உனக்கு நான் என்ன துரோகம் செய்தேனும்? நான் மயங்கி மயங்கி மலைக்கிறேனே, எதைக் கண்டு மயங்குகிறேன்? உருவமற்ற உன்னைக் கண்டா? உன் நினைவில் இழையும் என்னைக் கண்டா? பிரிவுக்கு ஆறுதல் சொல்லும் சாந்தியைக் கண்டா?...... எதைக் கண்டு, சொல்லேன்!'

ஸ்யாமளாவைப் பெண் பார்க்கச் சென்ற போது ரமணி மயங்கித்தான் போனான். அவனெதிரே அவள் நமஸ்கரித்து எழும்போது, அந்தச் செந்தாழை நிறமும், தரையில் புரண்ட கூந்தலின் கருமையும், கனி பழுத்தாற் போல் இளமையின் மேனிச் செழிப்பும்—நெஞ்சக் கிளர்ச்சியில் அவளை அப்போதே அள்ளிக் கொள்ள வேண்டுமென்றிருந்தது.

மகிழ்வோடு தன் நண்பர்களுக்கெல்லாம் அழைப்பிதழ் தந்துவிட்டுத் திரும்புகையில் தான் பல நாட்களுக்குப்பின் சாந்தியை மறுபடியும் தெருவில் சந்தித்தான். அவனுக்குள் இடி இடித்து, மின்னல் கிளை பிரிந்து, நாலா திசையிலும் தலை தெறிக்க ஓடிற்று.

பிறவியின் கன்னித் தூய்மையோடு, மலர் இதழ்களின் சுடர்ந்த எழில் குலுங்க, அவள் கை கூப்பி முகமன் காட்டியபோது, அவனைச் சந்தித்த ஆனந்தத்தில் அவள் நெஞ்சம் பொங்குவது அவள் முகம் பொங்குவதில் தெரிந்தது. அவன் அவனுக்குள்ளேயே அழுந்திப் போனான்.

இந்தக் குழந்தையை ஏமாற்றி விட்டதை எப்படிச் சொல்வதாம்?

மனம் இல்லாமலே, அழைப்பிதழ் ஒன்றைச் சாந்தியிடம் நீட்டினான் ரமணி. அவள் அழைப்பிதழைப் பிரித்துப் பார்த்தாள்.

பிதுங்கிய உதடுகளைப் பற்களிடையே மடித்துக் கொண்டு நிமிர்ந்தாள்.

"உங்கள் மணவாழ்வு இனிமையாய் இருக்கத் துதிக்கிறேன்......"—உடல் குலுங்க அடக்கமாட்டாத கேவல் அவளிடமிருந்து வெம்பியது.

நெஞ்சுக்குள் நெஞ்சாய் மதுரமாய்ப் பயிரிட்டு வளர்த்ததெல்லாம் இழந்துவிட்ட தவிப்பில் அவள் கண்கள் இதழ்களாய்க் கொட்டின போதுதான் அவனுக்கு அவள் உள்ளம் புரிந்தது. சித்திரத்தில் எழுதியது போல் அவன் நின்றான்.

சல்லாத் திரையிட்டு மறைத்ததை யெல்லாம் அன்றே தெளிவாகக் காட்டியிருந்தாள். இதெல்லாம் நிகழ்ந்தே யிருக்காதோ?

நிகழ்ந்ததெல்லாம் நிகழ்ந்த பின் நினைப் பதில் அர்த்தமில்லை. நிகழவேண்டு மென் றிருந்தது நிகழ்ந்தாயிற்று. அந்த நினைவோடு மண நேரத்தில் அவன் சியாமளாவின் கரம் பற்றுகையில் அவன் மனம் சலனமற்றுத் தான் போயிற்று.

பின்னர் வாழைத் தண்டிற்குள் வைத்த சிறு கல் கரைந்துவிடும் என்பது போல் சியாமளாவின் மிருதுத் தன்மையில், பரிவில், மணத்தில் அவன் அவனையே மறந்தாயிற்று. அப்போதைக்கு அவனுக்குச் சாந்தியைப் பற்றிய எண்ணம் எடுபட வகையேது!

மீட்டிய வீணைக்குச் சுருதி கூட்டினாற்போல் இணைந்து, சியாமளாவின் முழங்கை வளைவில் தன் கையைக் கொடுத்து ஆடித்திரிந்த நாட் களின் இன்பம் எங்கே? அவளின்றி அவ னில்லை என்று தெளிந்து விட்டபின் இரவு-பகல் பேதமின்றி அவனுக்குள் அவள் புதைந்து கொண்டு வெளிவர மனமில்லாமலே போன நாட்களின் கவடு எங்கே?

அவளில்லை இப்போது. அவள் இல்லாமலா போய் விட்டாள்?

**பா**ர்த்துக் கொண்டிருக்கும் போதே தாமரைப் போத்தின் இரண்டாம் மடலும் விழுந்து மூன்றாவது மடல் மலர்ந்தது.

மணமாகி ஆறேழு வருஷங்களுக்கு இன்பத் திளைப்பில் திருப்பமே இல்லாமல் இருந்தது இனிப்புத் திகட்டுவது போலத்தான் அவ ளுக்கும் அவனுக்கும் இருந்தது. எழிலொளி யாய்த் துலங்கும் சியாமளா தனக்கென்று தன் பொறி ஒளியாய் ஓர் எழிலைக் கைக்கொள் ளாமல் தர வேண்டும் என்று எண்ணினான் அவன். தன் அன்பின் காணிக்கையாய்த் தன் னிடமிருந்து பிரிந்த தன்னின் பகுதி ஒன்றை அவன் பாதங்களில் இட்டு மகிழச் சியாமளா வும் துடித்தாள். பெண்மைத் துடிப்பு அது!

ஒரு சமயத்தில் அதுவும் கூடி வருவது போலத்தான் இருந்தது.

ஆனால் முன்னே வரும் அலைதனைப் பின் அலை விழுங்கி விட்டுக் கரையில் மோதிச் சிதறுவ தைப் போல், வாழ்வில் பொருள்கூட்ட வரு கிறது என்று எதிர்பார்த்தது, கைப் பொருளை யும் பிடுங்கிக் கொண்டு விடும் என்று அவன் கண்டானா?....

இல்லை, அந்தச் சந்தர்ப்பத்தில் அங்கே பயிற்சி பெற்ற டாக்டராய்ச் சாந்தியைச் சந் திக்கப் போகிறோம் என்றுதான் நினைத்தானா?

என்றோ ஒரு நாள் விவரம் அறியாத தூக்க மயக்கத்தில் இதே போன்ற ஏதோ ஒன்றைக் கனவாய்க் கண்டதாய் நினைவில் உதிக் கிறதே - இது எப்படி?

**தா**மரையின் மூன்றாவது மடல் மறைந்து நான்காம் மடல் முகிழ்த்தது.

அரசாங்க அலுவலில் அமர்ந்து விட்ட ரமணிக்கு ஓர் இடம் என்றில்லாமல் ஊர் ஊராய் மாற்றலாகிக் கொண்டிருந்தது.

அன்று சியாமளாவுக்கு வலி கண்டு, அலை திரும்புகையில் மணலில் சிக்கிய மீனாய்த் துடித்துத் துடித்து வீழ்ந்த போது அவன் செயலிழந்து போனான். அந்தக் குக்கிராமத் தில் மருந்தேது, உதவியேது?

அடுத்த வீட்டுக்காரர் ஒரு மைலில் ஒரு டாக்டரம்மா இருப்பதாகச் சொன்னதும் அது சாந்தி என்று அவனுக்குத் தெரியவில்லை.

பதற்றத்தில் மூழ்கிப் போன தன் எதிரே சாந்தியை டாக்டராய்க் காணுகையில் அவள் தன் எதிரே ஒளி வட்டத்தில் தெய்வமாய் நிற்பது போலிருந்தது. அன்பு, வியப்பு, பக்தி எல்லாம் அவனுள் பொங்கின.

படுக்கையில் சியாமளாவைக் கிடத்திவிட்டு நிமிர்ந்தான். "இதுதான் சியாமளா! இவள் என் மனைவி..."

புன்முறுவலுடன் சாந்தி அவனுக்கும் சியாமளாவுக்கும் இடையே நின்ற திரையைத் தாழ்த்தினாள். திரைக்கு அப்பால் சுவரில் சாய்ந்தபடி அவன் நின்றான்.

'வீல்' என்று திரைக்குப் பின்னால் சியாம ளாவின் அலறல் கேட்டது. அவன் நெற்றி நரம்புகள் தெறித்தன.

சாந்தி அவன் எதிரே வந்து நின்றாள். "சியாமளா நம்மை ஏமாற்றி விட்டாள்!"

ரமணி புரண்டு புரண்டு அழுதான். அவன் கண்ணீரில் மாதங்கள் கரைந்து சென்றன. ஆனால் எத்தனை நாட்கள்தான் அழுது கொண்டிருக்க முடியும்?

"சா ந்தி!" — மெல்லத் தன் உதடுக விடைபட அவள் பெயரைக் கூட்டுகிறான்.

"ம்!" — மூடிய இமைகள் மறுபடியும் பிரிந்து கொடுக்கின்றன.

"நீ இன்னுமா இங்கே இருக்கிறாய்? சாப்பிடவில்லை?"

"நீங்களே சாப்பிடவில்லையே?"

"சாந்தி, என்ன இது?..."

என்ன இது என்று சொல்ல முடியாதது தான். என்ன இது என்று அவனுக்கே பிடி படவில்லை. பொட்டாக நின்று கல்லூரியில் மனத்தில் சேர்த்த எண்ணங்களை இன்னும் பசுமையாக வைத்துக் கொண்டிருக்கிறாள் சாந்தி. ஒருவித அசாத்தியப் பிடிவாதம். தன் மனநிறைவின் தனித்துவத்தைப்போற்றுவதற் காகக் கல்யாணம்வேண்டாம்என்றிருக்கிறாள். அவனுடைய நினைவோடு மருத்துவம் பயின்று டாக்டராய்ப் பணியாற்றுகிறாள். அவனை யன்றி அவளுக்கு வேறு நினைவேயில்லை.

தளிர் இலையில் தங்கும் பனித்துளி போல் எத்தனை தூய்மை அவள் அன்பில்! பெண் மையே தூய்மைதானே?

வாழ்வில்தான் தானும் ஏமாந்து, பிறரை யும் ஏமாற்றும் பித்தலாட்டங்கள் எத்தனை யெத்தனை! அவனை அவள்தான் ஏமாற்றி விட்டாளோ? அதனால்தான் பதிலுக்குச் சியா மளா அவனை ஏமாற்றிப் பார்த்தாளோ? இப்போது ஏமாற்றுவது யாரை, தன்னையே தானல்லவா?

சியாமளா தந்த ஏமாற்றத்தில் அவன் துடித்தபோது அவனிடம் சாந்தி காட்டிய பரிவுக்கு ஈடேது? அவனுடனே அவள் தங் கியதால்தானே சித்தப்பிரமை பற்றாமல் அவன் மீண்டான்!

"சாந்தி!" நெஞ்சோட்டத்தில் நைந்து அவன் அழைத்தான்.

பதிலில்லை. அவளை மூச்சுக் காற்று இழையும் சத்தம்கூடக் கேட்கவில்லை. அவள் எழுந்து போய் விட்டாள்.

திடீரென்று தனிமை பரவி அவனை இறுக்கி மூச்சுத் திணற அடித்தது. அச்சம் கவ்வியது. அவனும் உதறிக் கொண்டு எழுந்தான்.

தட தடவென்று இறங்கி ஓடியவன் சாந்தியின் அறை வாசலில் காலெடுசாமல் நின்றான். பிறகு பூனைபோல் அடிமேல் அடிவைத்துக் கட்டிலின் அருகே, சாந்தியின் பின்புறம் சென்று நின்றான். அவன் கண்கள் திகைத்தன.

கையிலே, ரமணியின் படத்தை வைத்துக் கொண்டு, அதற்குப் பூச்சரமிட்டு மார்பில் புதைத்தபடி மயங்கிப் போயிருந்தாள் சாந்தி. கல்லூரியில் எடுத்த படமது.

அவளைப் பார்த்துக் கொண்டு மௌனமாய் நின்றான் அவன். தானே அவளெதிரே நிற்கையில், தான் நிற்பதை உணராமல் தன் படத்தில் என்னதான் பார்க்கிறாள் சாந்தி?

அவனை அவனாலேயே அடக்கிக் கொள்ள முடியவில்லை. தீராத கேள்விக்கு விடை கிடைத்தாயிற்று. அவன் சுழன்றாடினான். அடக்கிவைத்த உணர்வெல்லாம் வெடித்துப் பரவுவதில் சுழலும் சுழற்சி—

அவன் அவள் மேல் குனிந்தான். அதை உணர்ந்து கொண்டபோது அவள் துள்ளி எழுந்தாள்.

"சாந்தி!"

"நீங்களா?"

"சாந்தி!"

சாந்தி ஓடிப் போய் அறையின் விளக்கை ஏற்றினாள். குப்பென்று மலர்ந்த ஒளியில் அவன் தலை குனிந்தான். அவன் படத்தின் மேல் அவள் பார்வை நிலைத்தது.

"இன்றைக்கு நான் உன்னைப் புரிந்து கொண்டேன், சாந்தி!"

அவள் விழிகள் மருட்சியுற்று அவனை நோக்கின. "நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?"

"இன்னும் மறைத்து ஒளித்து வைத்துக் கொள்வதில் அர்த்தமில்லை, சாந்தி! இந்த இணைப்பு நடந்தாக வேண்டும் என்பது தெய்வ நியதி என்றுதான் படுகிறது." அவன் குரல் கம்பிக்கொண்டது.

"எனக்கு நீங்கள் இன்று பேசுவது எதுவுமே புரியவில்லையே! சியாமளாவின்...."

"ஆமாம். சியாமளாவின் ஜீவனுடைய ஆசையும் அதுவாகத்தான் இருக்கும்! நாம் இணைந்தாக வேண்டும். சாந்தி...!"

அவன் ஆர்வத்தில் விம்மி நின்றான்.

"அது இந்த ஜன்மத்தில் நடக்குமா, என்ன?—" அவள் ஜன்னலுக்கு வெளியே பார்த்தபடி சொன்னாள்.

"—ஏன் நடக்காதாம்?—"

"என்னை மன்னித்துக் கொள்ள வேண்டும் அப்போது, காலேஜில், என் நெஞ்சோடு நெஞ்சாய் அந்த ஆசையிருந்தது. இப்போது இல்லை." அவள் இக்கினாள். அவன் திணறினான்.

"இப்போது அந்த எல்லைக் கோடெல்லாம் கடந்தாயிற்று. நெஞ்சில் அன்று பதிந்த உங்களை எண்ணி எண்ணி என்னைப் பதவியை நீங்கள் அடைந்துவிட்டதாலோ என்னவோ?"

"............"



"டேய் மண்டு! ஏதாவது விஷமம் பண்ணினாயோ, இந்தப் பிரம்பாலேயே விளாசிப்பிடுவேன், ஆமாம்."

"அது பிரம்பு இல்லே ஸார்; கரும்பு! மறந்துபோய்க் கொண்டுவந்துட்டீங்கபோல இருக்கு!"

"இன்று நீங்கள் வேறு. என் நெஞ்சின் வடிவம் வேறு. அன்பின் ஒளியில் வளர்ந்த அந்த நித்ய வடிவம் எனக்குத் தெய்வமாகப் படுகிறது. அந்த வடிவத்துக்கு நான் இந்தப் படத்தின் மூலம் அஞ்சலி செய்கிறேன். இதையும் ஒரு தவமாகத்தான் நான் நினைக்கிறேன்" என்றாள் சாந்தி உறுதியான குரலில்.

"சாந்தி!"

"இப்போது நமக்குள் இணைப்பு நேர்ந்தால் அந்தத் தவம் கலைந்து போகலாம். ஜீவனின் என்னைக் கனவை உடல் தாங்க நேரிட்டு, உள்ளத் தூய்மை அழிந்து போகலாம். அது தயவுசெய்து வேண்டாம்."

"எனக்கு உன்னைத் தவிர வேறு ஆதரவேயில்லையே, சாந்தி!"

"என்றும் நான் உங்களுக்கு ஆதரவாய் நிற்கிறேன். பணி செய்கிறேன். என் தவத்தின் ஒரு பகுதி அது. வேறு நினைவு நமக்குள் வேண்டாம். புலன்களிலிருந்து தனித்து நிற்கும் என் புனித அன்பை ஏற்றுக் கொள்ளுங்கள்... என் ஆசை அதுதான்!"

வெள்ளிப் பீடத்தில் நின்றெரியும் தீச்சுடரின் வெம்மை பட்டாற்போல் அவன் சொற்களில் அவன் தவித்தான்.

அவன் அவளுடைய அறையைக் கடந்து நடந்தான். கதவைத் தாளிட்டு, அதில் முகம் அழுத்திச் சாந்தி விசும்பிக் கொண்டிருப்பது அவனுக்குத் தெரியும்.

தாழைப்போத்தின் மடலெல்லாம் உதிர்ந்து அழிந்தாயிற்று. எஞ்சி நிற்கும் காம்பின் உட்சதை சிந்தும் மகரந்த மணம் இப்போது ஜீவனையே மயக்கியது.



அவளுக்கு ஏன் சாப்பிட்டோம் என்றே தோன்றிற்று...
கல்யாணச் சாப்பாடு பிரமாதம்!
ஆனால் வழுவான சாப்பாடு என் வயிற்றை கெடுத்து விட்டது
கவலைப்படாதே. ஈனோ சாப்பிட்டால் சீக்கிரம் சரியாய் விடும்
மறுநாள் காலை
நேற்று ஈனோ சாப்பிட்டதும் வயிற்றுக் கோளாறு பறந்து போய் விட்டது. இப்பொழுது என்ன புத்துணர்ச்சி!
ஒரு தேக்கரண்டி ஈனோ ஒரு டம்ளர் ஜலத்தில் போட்டால் உடனே பொங்கி கரைந்து நேர்த்தியான, புத்துணர்ச்சியளிக்கும் பானமாக மாறும். தளதளக்கும் ஈனோ 'ப்ரூட் ஸால்ட்' இரத்தத்தையளித்து சமன மூட்டக்கூடியது. வயிற்று கோளாறுகளிலிருந்து உடனடியாக நீடித்த நிவாரணமளிக்கிறது. ஜீரணசக்தியை சரியாக்குகிறது.
ENO
'FRUIT SALT'
ஈனோ சீக்கிரத்தில் அவளுக்கு குணமளித்தது
ஈனோ
'ப்ரூட் ஸால்ட்'
'ஈனோ' 'ப்ரூட் ஸால்ட்', என்ற வார்த்தைகள் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்குகள்
பீச்சம் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்
JWT-ENO.1043

# சொர்க்கத்தின் நிழல்

## அத்தியாயம் ஏழு

**ஜெகசிற்பியன்**

மாலை மூன்று மணியாகியும் வெய்யிலின் கானல் காட்சி இன்னும் விரிந்தேயிருந்தது.

அமைந்தகரை சாலையில் அரை மணி நேரமாக நின்று டாக்ஸிக்காகக் காத்துப் பார்த்துக் கால் கடுத்துப் போன தேவகி பஸ் நிலையத்தை நோக்கி நடையைக் கட்டினாள். பஸ்ஸும் அத்தனை சீக்கிரம் வருவதாயில்லை. அங்கு ஒரு பதினைந்து நிமிஷ நேரம் கழிந்தது. பொறுமையிழந்த அவள் மேலும் நடக்கலானாள். அவள் மனத்தில் பொங்கிக் கொண்டிருக்கும் ஆவேசத்தின் பிரதிபலிப்பாக நடையின் வேகம் மிகுதிப்பட்டது.

அந்த நெடுஞ்சாலையிலிருந்து வடக்கு நோக்கி ஒரு சிறிய சாலை பிரிந்தது. அழகப்பா நகருக்குச் செல்லும் சாலை அது. வலது பக்க நடை பாதையில் நடந்து கொண்டிருந்த தேவகி, அந்தச் சிறிய சாலையில் திரும்பக் கீழே இறங்கினாள். அதே சமயம், பெருத்த ஒலியுடன் வேகமாக வந்த மோட்டார் சைக்கிள் ஒன்று அவள் அருகில் வந்து நின்றது. திடுக்கிட்ட தேவகி தலைநிமிர்ந்தாள்.

“என்ன இது, இவ்வளவு தூரம் தனியே, கால்நடையாக வந்து விட்டீர்கள்?” என்று கேட்டுக் கொண்டே மோட்டார் சைக்கிளிலிருந்து கீழே இறங்கினான் விவேகானந்தன்.

திகைப்பு நீங்கிய தேவகி, “ஓ, நீங்களா? நல்ல சமயத்தில் வந்தீர்கள்!” என்று சொல்லிக் கொண்டே நடைபாதையில் ஏறி நின்றாள்.

விவேகானந்தன் அவள் முகத்தைப் பார்க்கவே கூசிக் குறுகினான். வெட்கமும் பயமும் அவன் மனத்தை உருட்டிப் புரட்டி எடுத்தன. ஆனாலும் தன்னைச் சமாளித்துக் கொண்டு, “எங்கே இப்படி, இந்த வெயில் நேரத்தில்...?” என்று இழுத்தான்.

“உங்களைப் பார்க்கத்தான் வந்தேன்! அதிர்ஷ்டவசமாக நடு வழியிலேயே நீங்கள் கிடைத்து விட்டீர்கள்!” தேவகி மெல்லச் சிரித்தாள். ஆனால் அந்தச் சிரிப்பில் உயிர் இல்லை.

வியப்புடன் நிமிர்ந்து அவளை நோக்கினான் விவேகானந்தன். அந்த ஒரே விநாடியில் அவன் மனம் வெவ்வேறு எண்ணங்களால் பாறையாகக் கனத்து விட்டது.

“உங்களிடம் ஒரு விஷயமாகப் பேச வந்திருக்கிறேன்; புறப்படலாமா?”

தன்னுடைய கடிதம் தீவிரமாக வேலை செய்துவிட்டது என்ற தீர்மானத்துடன், “ஓ! புறப்படலாமே!” என்று கூறிச் சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்தான் விவேகானந்தன். பிறகு புன்னகை தவழும் முகத்துடன், “என் வீட்டுக்கா, உங்கள் வீட்டுக்கா?” என்று வினவினான்.

ஒருகண யோசனைக்குப் பின், “ம்... கடற்கரைக்குப் போவோமே!” என்று தணிந்த குரலில் சொன்னாள் தேவகி.

“இது நல்ல யோசனை! நீங்கள் பஸ்ஸில் வருகிறீர்களா? அல்லது டாக்ஸி அழைத்து வரட்டுமா?”

“அதெல்லாம் எதற்கு? உங்களுக்குச் சிரமம் இல்லையென்றால் உங்கள் மோட்டார் சைக்கிளின் பின்னாலேயே நான் அமர்ந்து கொள்கிறேன்!”

விவேகானந்தனின் மனம் மகிழ்ச்சியால் துள்ளிக் குதித்தது. தனது காதலின் முக்கால் பங்கு வெற்றியடைந்து விட்டதாகவே அவன் தீர்மானித்துவிட்டான். அடுத்த சில நிமிஷங்களுக்கெல்லாம் அவ்விருவரையும் ஏற்றிக்கொண்ட அந்த யந்திர வாகனம் வாயுவேகமாக விரைந்து சென்றது.

அமைதி சூழ்ந்த அந்தச் சிறிய அறையில் குறுக்கும் நெடுக்குமாக உலவிக் கொண்டிருந்தான் மோகனசுந்தரம். அவ்வப்போது அவன் தன் நெஞ்சிலிருந்து நெட்டித் தள்ளும் பெருமூச்சு ஒலிகளைக் கேட்கக் கேட்க அபரஞ்சியம்மாளின் வயிற்றில் புளி கரைந்தது. கலங்கிய கண்களுடன் தன் மகனையே பார்த்துக் கொண்டிருந்தாள் அவள். ஒரே சீராக உலவிக் கொண்டிருந்த மோகனசுந்தரம் சட்டென்று திரும்பித் தன் தாயைப் பார்த்து, “அம்மா, கோமதி கடைசியாக உன்னிடம் என்னதான் சொன்னாள்?” என்று கரகரத்த குரலில் கேட்டான்.

“என்னடா! எத்தனை முறைகள்தான் இந்தக் கேள்வியைக் கேட்பாய்?” என்று கம்மிய குரலில் சொன்ன



அபரஞ்சி சலிப்புடன் தொடர்ந்து, "அவன் இன்றோ நாளையோ இங்கு வருவதாகச் சொன்னான்" என்றாள்.

"வேறொன்றும் சொல்லவில்லையா?"

"இல்லை! இல்லை!"

மோகனசுந்தரம் விறைப்புடன் போய் ஓர் இருக்கையில் அமர்ந்து தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டான்.

"இப்படியே எண்ணமிட்டுக்கொண்டிருந்தால் நாம் உருப்பட்டாற்போலத்தான்!" என்று துக்கம் தொண்டையடைக்கச் சொல்லிக்கொண்டே எழுந்த அபரஞ்சியம்மாள் சற்று நேரங் கழித்து, "ஏண்டா தம்பி, அந்த வக்கீல் நோட்டீஸுக்கு என்ன பதில் அனுப்பப்போறே?" என்று கேட்டாள்.

கோபமாகத் தலை நிமிர்ந்த மோகன், "பதில்தானே? நேரே போய் அந்தப் பயலின் கன்னத்தில் அறைந்துவிட்டு வரப் போகிறேன்; அதுதான் பதில்!" என்று முரட்டுத்தனமாகக் கூவினான்.

"நன்றாயிருக்கிறதே நீங்கள் சொல்வது! அப்படித்தான் நீங்கள் ஏதாவது செய்துவிடப் போகிறீர்கள்!"

தாயும் பிள்ளையும் சட்டென்று திரும்பிப் பார்த்தனர். தனக்கே உரிய ஒரு மாயப் புன்சிரிப்புடன் உள்ளே வந்தாள் கோமதி. அவளைக் கண்டதுமே அபரஞ்சியம்மாளுக்கு மூச்சு அடைப்பது போலாகிவிட்டது. தன்னிடம் சொன்ன விஷயங்களையெல்லாம் தன் மைந்தனிடமும் சொல்லத்தான் வந்திருக்கிறாளோ என்று எண்ணிப் பெரிதும் கலவரமடைந்துவிட்டாள் அவள்.

ஏதோ காணக் கிடைக்காத பொருள் ஒன்றைக் கண்டு விட்டவன்போல் முகம் மலரக் கோமதியைப் பார்த்தான் மோகன சுந்தரம். மறுகணமே தன் முகத்தை 'உம்'மென்று முறுக்கி வேறு பக்கம் திருப்பிக் கொண்டான்.

அவனுடைய இந்தச் சிறுபிள்ளைத் தனமான கோபத்தைக் கண்ட கோமதிக்குச் சிரிப்புத் தான் வந்தது. "என்ன, இரண்டு பேருமே என்னைப் பார்த்ததும் முகத்தைத் திருப்பிக் கொண்டிருக்கிறீர்கள்?" என்று இனிய குரலில் கேட்டுக் கொண்டே



மெள்ள நடந்து வந்த கோமதியின் காலில் ஏதோ காகிதம் தட்டுப்படவே அதைக் குனிந்து எடுத்தாள். மோகனசுந்தரத்திடம் தேவகி கொடுத்து விட்டுப் போன அந்தக் கவிதைப் பிரதிதான் அது!

தூக்கணாங் குருவிக் கூட்டைப் பார்க்கும் கவிஞனைப் போலக் கோமதியைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான் மோகனசுந்தரம்.

கீழே கிடந்து எடுத்த அந்தக் கவிதைப் பிரதியைப் பிரித்துப் பார்க்காமலே மேஜைமீது வைத்துவிட்டு நிமிர்ந்த கோமதி, முகத்தில் எவ்விதச் சலனத்தையும் காட்டாமல், "ஆமாம்; உங்களுக்கு ஏதோ கடிதம் வந்திருக்கிறதாமே?" என்று கேட்டாள்.

மோகனசுந்தரம் அவளிடம் பேச வெட்கப்படுகிறவனைப் போல்மெல்லச் சிரித்து வீம்பான குரலில், "நீதான் என்னிடம் சண்டை பிடித்துக் கொண்டு போனாயே. இப்போது ஏன் வந்து அதைப் பற்றி விசாரிக்கிறாய்?" என்றான்.

"சண்டை பிடித்துக் கொண்டு போனேனா? இல்லையே!" என்று நகைத்தாள் கோமதி.

மோகன் கலகலவென்று சிரித்தான். சிரித்துக் கொண்டே, "கேட்டாயா அம்மா, கோமதி சொல்வதை? எப்போதும் இப்படித்தான், என்னை உருட்டி மிரட்டுவதில் கோமதிக்கு ஓர் அலாதிப் பிரியம்!" என்றான் குறும்பாகக் கண்களைச் சிமிட்டியபடியே.

அபரஞ்சியம்மாளின் மனம் வேதனையுற்று வெந்தது. "கோமதி என்ன கேட்கிறாள், நீ என்ன சொல்கிறாய்?" என்றாள் உள்ளடங்கிய ஆத்திரக் குரலில். "அவள் ஏதோ, கடிதம் வந்ததா என்று கேட்கிறாள், மகனே...?"

மோகனசுந்தரம் முகத்தைச் சுளித்துக் கொண்டான். அடுத்தகணம் "கடிதமா, அல்லது கவிதையா?" என்று மோவாயை வருடினான் அவன்.

கோமதி கலீரென்று சிரித்தாள். "பார்த்தீர்களா, மாமி! உங்கள் பிள்ளைக்கு வக்கீல் நோட்டீஸ்கூடக் கவிதை போல் இனித்திருக்கிறது!"

அபரஞ்சியம்மாள் வேறு பக்கம் திரும்பிக் கண்களைத் துடைத்துக்கொண்டாள்.

"ஓ......அந்த வக்கீல் நோட்டீஸைப் பற்றிக் கேட்கிறாயா?" என்று அலட்சியமாகச் சொன்ன மோகனசுந்தரம், "அது உனக்கு எப்படித் தெரியும்?" என்றான்.

"எப்படியோ நான் தெரிந்துதான் கேட்கிறேன்...."

"ஆமாம், கோமதி! அந்தச் சங்கத்துக்காரன் வக்கீல் நோட்டீஸ் அனுப்பியிருக்கிறான், பத்தாயிரம் ரூபாய் நஷ்டஈடு என்னிடம் கேட்டு!"

"ஹா!" என்று தன் நெஞ்சை அழுத்திப் பிடித்துக் கொண்டாள் அபரஞ்சி அம்மாள்.

"எதற்காக அப்படிக் கேட்டிருக்கிறீர்கள்?" என்று மிகவும் அமைதியாக வினவினாள் கோமதி.

மோகனசுந்தரத்தின் முகம் குப்பென்று சிவந்தது. கோபமாகத் துள்ளி யெழுந்தவன் விரைந்து போய், மேஜைமீது கிடந்த வக்கீல் நோட்டீஸை வெடுக்கென்று எடுத்து அதைச் சுக்கல் நூறாகக் கிழித்துக் கசக்கி யெறிந்து விட்டு, "எதற்காகவா, கோமதி? அன்றையக் கச்சேரியில் நான் சரியாக நடந்து கொள்ளவில்லையாம். அவர்கள் சங்கத்தை அவமதித்து விட்டேனாம். அதனால் அவர்களுக்கு ஏராளப் பொருள் நஷ்டமும், மானக்குறைவும் ஏற்பட்டு விட்டனவாம். மடையர்கள்! என்னைப் பற்றி அவர்கள் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்? என்னிடமுள்ள இசைக் கலையைப் பற்றி அவர்களுக்கு என்ன தெரியும்? கொஞ்சமாவது கலா ரஸனையுள்ளவர்களாக இருந்தால் கச்சேரி சபாவில் உட்கார்ந்து கொண்டு கனைப்பதும் தும்முவதும் கர்த்தபங்களைப் போல் ஊளையிடுவதுமாக இருப்பார்களா? அதையெல்லாம் நான் சகித்துக் கொண்டு கச்சேரி செய்ய வேண்டும். அப்படித்தானே?.........கோமதி, நீயே சொல்: அவர்கள் மட்டும், என்னையும், எனது கலையையும் அவமதிக்கலாம்; நான் அவர்களை அவமதிக்கக் கூடாது - இது என்ன நியாயம்? சொல், கோமதி!" என்று உணர்ச்சி வயப்பட்டவனாய் உறுமிக் கூவினான்.

கோமதி இதைக் கேட்டு எவ்விதப் பரபரப்பும் அடையவில்லை. அமைதியாகவும் அழகுக் குளுமையாகவும் சிரித்தாள். சிரித்துக் கொண்டே, "நீங்கள் சொல்வது முற்றிலும் நியாயம்" என்றாள்.

மோகனின் முகம் மலர்ந்தது. "அப்படிச் சொல், கோமதி!" என்று மகிழ்ச்சியுடன் சொன்னவன் தனது தாயாரைப் பார்த்து, "கேட்டாயா அம்மா, கோமதி எப்போதும் என் பக்கம்தான் பேசுவாள்!" என்றான்.

"ஆனால் ஒரு விஷயம்" என்று தணிந்த குரலில் கூறிக்கொண்டே ஓரடி முன்னால் வந்த கோமதி சட்டென்று நிமிர்ந்து அவனைக் கூர்ந்து பார்த்தவாறு, "அவர்கள் பக்கமும் சில நியாயங்கள் இருக்கவே செய்கின்றன. எந்தக் கலையும் அதைச் சிருஷ்டிக்கிறவர்களுக்கு மட்டும் சொந்தமானது என்று நினைப்பது தவறு. அதனை அநுபவிக்க முன் வருகிறவர்களுக்கும் அதிலே பங்கும் பாத்தியதையும் உண்டு. அவர்களுடைய ஆதரவும் அன்பும் இருந்தால்தான் எந்தக் கலையும், எந்தக் கலைஞனும் வாழ முடியும். நம்முடைய மேதா விலாசங்களையே பெரிதாக எண்ணிக் கொண்டு மனம் போனபடி நடப்பது அறியாமை. நமக்கு நாமே நினைத்துக் கொள்ளலாம், நாம் பெரிய கலைத்தொண்டு செய்வதாக; ஆனால் நம்மை யாரும் அப்படித் தொண்டு செய்யக் கேட்டுக் கொள்ளவில்லை. நாமாகத்தான் முன்வருகிறோம். அதை நாம் மறந்து விடலாமா? நம்மிடமுள்ள கலைத்திறனை நாம் இனாமாக வழங்கி விடுவதில்லை; காசுக்குத்தான் விற்கிறோம். விற்காமல் போனால் நம்முடைய வயிறு காயும்-இதையும் நாம் மறந்து விடலாமா? எதையும் விற்பனைக்கு என்று கொண்டு வந்துவிட்ட பிறகு, அதை வாங்க வருகிறவர்களுடன் கொஞ்சம் ஒத்துப் போகத்தான் வேண்டும். மேலும், உங்களுடைய கச்சேரியைக் கேட்க வருகிறவர்கள் அவ்வளவு பேரும் மனிதர்கள்தாம்; அவர்களுக்குத் தும்மலும் வரும், தொண்டையும் காந்தலெடுக்கும், அழுகையும் வரும், சிரிப்பும் வரும், வெறியும் வெறுப்புங்கூட ஏற்படும். அதையெல்லாம் பொறுத்துக் கொண்டுதான் நாம் நமது கலைச் சரக்கை விலையாக்க வேண்டும். உங்களுடைய வீட்டில் நீங்கள் தனியாக அமர்ந்து குழல் வாசித்துக் கொண்டிருக்கும்போது உங்கள் அநுமதியின்றி யாராவது வந்து தொந்தரவு கொடுத்தால் அவர்களை ஏசிப் பேசி அவமதித்து விரட்ட உங்களுக்கு உரிமை உண்டு. ஆனால், நாலு பேருக்காக, நாலு பேர்கள் மத்தியில், நாலு காசை வாங்கிக் கொண்டு கச்சேரி செய்யப் போனால் நாலுக்கும் கட்டுப்பட்டுத்தான் நீங்கள் நடந்து கொள்ள வேண்டும்!" என்று சொல்லி நிறுத்தினாள்.

திறந்த வாயை மூடக்கூட மறந்து, அவள் முகத்தையே பார்த்துக் கொண்டு நின்ற மோகனசுந்தரம், "அப்படியானால் நான் அந்தக் கச்சேரியில் நடந்து கொண்ட முறை தவறுதான் என்கிறாயா, கோமதி?" என்று கம்மிய குரலில் பரிதாபமாகக் கேட்டான்.

"எனக்கென்னமோ அது தவறாகத்தான் படுகிறது!" என்று கூறி அழகாகச் சிரித்தாள் கோமதி.

"அந்தச் சங்கத்தார் வக்கீல் நோட்டீஸ் அனுப்பியிருப்பதும் சரிதான் என்கிறாயா?"

"அவர்கள் வரை அது சரிதான்!"

வெயிலில் வதங்கிய வாழைப்பட்டை போல் சோர்வுடன் சோபாவில் முடங்கி

உட்கார்ந்த மோகன், சிறு குழந்தை போல் அவளை ஏறிட்டுப் பார்த்து, "கோமதி, நிஜமாகச் சொல்கிறேன்; யாரையும் அவமதித்து, யாருக்கும் நஷ்டம் ஏற்படுத்த வேண்டும் என்பதற்காக நான் அப்படி நடந்து கொள்ளவில்லை. என்னமோ அப்படிச் செய்ய வேண்டுமென்று தோன்றியது. செய்து விட்டேன். தவறு என்றால் ஒப்புக் கொள்கிறேன். நீயே அது தவறு என்னும் போது எனக்கும் அது தவறாகத்தான் படுகிறது." என்றான் பயந்த குரலில்.



அபரஞ்சியம்மாளுக்கு அத்தருணம் அழுகையே வந்து விட்டது.

சற்றுநேரம் மௌனமாயிருந்த மோகனசுந்தரம், "இதற்கு என்ன செய்யலாம் கோமதி? நீதான் ஒரு யோசனை எனக்குச் சொல்ல வேண்டும்!" என்று கெஞ்சுவது போல் கேட்டான்.

"என்ன செய்வது? பேசாமல் அந்தச் சங்கத்தின் தலைவரிடம் மன்னிப்புக் கேட்டு ஒரு கடிதம் எழுதுங்கள். அவர் மிகவும் நல்லவர்" என்றாள் கோமதி. அவளுடைய குரலில்கூட ஒருவிதக் கரகரப்புத் தட்டியது.

"மன்னிப்புக் கடிதமா?" என்று கோபமாகக்கேட்ட மோகன் சட்டென்று தலை குனிந்து, "சரி, உன்னுடைய யோசனையை நான் மீறி நடக்க மாட்டேன்!" என்று தணிந்த தொனியில் முணுமுணுத்தான்.

"இன்னொரு விஷயம்கூட உங்களிடம் சொல்ல வேண்டுமென்று வந்தேன்..." என்று இழுத்தாள் கோமதி.

அபரஞ்சியம்மாளின் நெஞ்சு வேகமாக அடித்துக் கொண்டது. ஏதோ ஒரு பேரிடியைத் தாங்கத் தயாராவது போல், வாசல் நிலையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள் அவள்.

"உங்களுடைய நன்மைக்காகத்தான் இதைச் சொல்கிறேன்: உங்களால் பாதியில் நின்று போயிருக்கும் அந்தச் சினிமாப்படத்தை மீண்டும் தொடர்ந்து எடுத்து முடிக்க நீங்கள் ஒத்துழைக்க வேண்டும் என்பது என் அபிப்பிராயம். ஏனென்றால்..." என்று கோமதி சொல்லிக் கொண்டிருக்கும் போதே அதிர்ச்சியுடன் திரும்பிய அபரஞ்சியம்மாள் "கோமதி!" எனக் கூவினாள். கோமதி அவளைப் பார்த்து அமைதியாக இருக்கச் சொல்லிவிட்டு மீண்டும் தொடர்ந்தாள்: "உங்களுக்கு அது பல வகையிலும் நன்மை தரும். ஆனால் அந்த மியூசிக் டைரக்டர் ஜமதக்னியிடம் நீங்கள் தொடர்பு கொள்ள வேண்டியதில்லை. நேரே பட முதலாளியைப் பாருங்கள். வேறு மியூசிக் டைரக்டரை அமர்த்தினால், வாசித்துக் கொடுப்பதாகச் சொல்லுங்கள். அவர் அதற்கு ஒப்புக் கொண்டால், அப்படியே செய்யுங்கள். அதனால் உங்களுக்கு எவ்விதத் தீமையும் வராது."

அபரஞ்சியம்மாள் சந்தேகத்துடன் கோமதியை ஏறஇறங்கப் பார்த்தாள்.

மோகனசுந்தரம் மகிழ்ச்சியுடன் ஒரு துள்ளுத் துள்ளினான். "அம்மா! கோமதி எவ்வளவு புத்திசாலி பார்த்தாயா? இது நல்ல யோசனை! நான் அப்படியே செய்யப் போகிறேன்!" என்றான் மிகுந்த உற்சாகத்துடன்.

அபரஞ்சியம்மாளின் மூளை குழம்பியது. அவள் மௌனமாக உள்ளே சென்றாள்.

"அம்மா! எனக்கும் கோமதிக்கும் நல்ல டிபன் கொண்டு வா! பசிக்கிறது!" என்று குதூகலத்துடன் சொன்ன மோகனசுந்தரம், வலப் பக்கமாக ஒருக்களித்துச் சாய்ந்து, "கோமதி, இப்போது தான் ஞாபகம் வருகிறது. சற்று முன் இங்கே அந்தத் தேவகி என்பவள் வந்தாள். அவள் மிகவும் நல்லவள். படிப்பு, பணம் என்ற செருக்கே இல்லாதவள். தான் இயற்றிய புதிய கவிதையொன்றை என்னிடம் கொண்டு வந்து கொடுத்தாள். அதைக் கொடுக்கத்தான் வந்தாளாம். நான் இன்னும் அந்தப் பாட்டைப் பிரித்துக்கூடப் பார்க்கவில்லை. அதோ, மேஜை மீது கிடக்கிறதே. அதுதான்! எங்கே அதை எடுத்துக் கொண்டு வந்து இப்படி உட்கார். உனக்குத் தெரிந்த ஏதாவது ஓர் இராகத்தில் அந்தக் கவிதையை அமைத்துப் பாடு; நான் குழல் வாசிக்கிறேன்!" என்று உற்சாகமாகச் சொல்லிக் கொண்டே புல்லாங்குழலை எடுத்தான்.

பலவ்வேறு உணர்ச்சிகளால் உந்தப்பட்ட கோமதி, "ஓ... தேவகி இங்கு வந்தாளா? இது அவள் எழுதிய கவிதைப் பிரதிதானா?" என்று கேட்டுக்கொண்டே அந்தக் காகித மடிப்பை எடுத்துப் பிரித்து, அதன் பக்கங்களை மெல்லப் புரட்டினாள்.

முதல் இரண்டு அடிகளை மேலோட்டமாகப் பார்த்து வந்த அவளது கவனத்தை மூன்றாவது அடி வெகுவாகக் கவர்ந்தது. "விழி இறக்குமுன்னே, தலைவிதி இறுக்கு முன்னே..." என்று வாய்விட்டு இனிய குரலில் படித்துக்கொண்டே மறு பக்கத்தைப் புரட்டியவள் ஏதோ பலத்த அதிர்ச்சியால் தாக்குண்டவளைப் போல் படிப்பதைச் சட்டென்று நிறுத்தினாள். அவள் முகம் வெளுத்துச் சிறுத்தது. கதலித் தண்டு போன்ற கரங்கள் நடுங்கின. விழி வளையத்துக்கு மேலே புருவங்கள் வில்லாக வளைந்து நெளிந்தன. பரபரப்போடு தன் கையிலிருந்த காகிதத்தில் பார்வையைப் புதைத்தாள். மூன்றாய் மடிந்த நீலநிறக் காகிதங்களுக்கு இடையில் ஒரு வெள்ளைக் காகிதம் இணைந்திருந்தது. அதிலே கவிதை இல்லை; கவிதா நயத்துடன் கூடிய ஒரு காதல் கட்டுரை வரையப் பெற்றிருந்தது. அது தேவகியின் கையெழுத்தல்ல; விவேகானந்தனின் மிடுக்கான கையெழுத்து!

"ஏன் கோமதி, படிப்பதை நிறுத்திவிட்டாய்? படித்த இரண்டு வரிகளும் மிக நன்றாயிருந்தனவே! எங்கே, முதலிலிருந்து படி, கேட்போம்?" என்றான் மோகனசுந்தரம் ஆவலுடன்.

உணர்ச்சிக் கொந்தளிப்பிட்டுக் கொண்டிருந்த கோமதி எப்படியோ தன்னைச் சமாளித்துக் கொண்டாள். அவள் ஒரு சிறந்த நடிகையல்லவா? சுழற்றிவிட்ட பம்பரம் சுழலாமல் நிற்பதுபோன்ற ஒரு பொய்த் தோற்றம் தருகிறதே, அதைப் போல் தன்னை ஆக்கிக் கொண்டாள். "ஆமாம்! இது ஒரு நல்ல கவிதைதான்" என்று வழக்கம் போல் இனிய புன்முறுவலுடன் சொன்னாள்.

"அப்படியானால் பாடு, கோமதி! உன் பாட்டைக் கேட்டு நீண்ட நாட்களாகிவிட்டன!" என்று வற்புறுத்தினான் மோகனசுந்தரம்.

அவன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே கோமதி அவனுக்குத் தெரியாமல் அந்தக் கடிதத்தை மட்டும் உருவித் தன் கைக்குள் மறைத்து வைத்துக்கொண்டு கவிதைப் பிரதியை மேஜை மீது எறிந்துவிட்டு, 'மன்னியுங்கள். நான் ஓர் அவசர காரியமாக வெளியே போக வேண்டும்!" என்று சொல்லியவாறு புறப்பட்டாள்.

திடுக்கிட்ட மோகனசுந்தரம் துடிப்புடன் எழுந்து, "என்ன கோமதி, ஏன் திடீரென்று புறப்பட்டு விட்டாய்?" என்று கேட்டுக்கொண்டே அவள் கையைப் பிடித்து நிறுத்தத் தன் கரத்தை நீட்டினான்.

இதையறிந்த கோமதி சடாரென்று முன்னால் சென்று, அவனை விழித்துப் பார்த்து, "அந்தக் கோயில் குளக் கரையில் நான் சொன்னதை யெல்லாம் மறந்து விட்டீர்களா? அதை இன்று மட்டுமல்ல, என்றுமே மறக்காதீர்கள்!" என்று அழுத்தந் திருத்தமாகச் சொல்லிக்கொண்டே அங்கிருந்து சரேலென வெளியேறிப் போய்விட்டாள்.

## அத்தியாயம் எட்டு

எவ்வளவு பெரிய துன்ப துயரங்களையும், வீழ்ச்சி தாழ்ச்சிகளையும், ஏக்க ஏமாற்றங்களையும் ஏற்க நேரிட்டாலும் மனித மனம் இனிய கனவுகள் காணவே விரும்புகிறது. உயிரின் இயக்க நிலைக்கு உணவும் நீரும் காற்றும் மட்டுமே போதுமானவை என்று சொல்ல முடியாது; மனத்தின் இனிய கற்பனைகளும் இன்ப ஆசைகளுமே அதன் அடிப்படை ஊட்டங்களாய் இருக்கின்றன. இந்த ஓர் இயற்கைத் திறன் மட்டும் மனத்துக்கு இல்லையென்றால், இவ்வுலகம் கசந்து, வாழ்க்கை ஒரு சுமையாகி, வாழவேண்டுமென்ற பற்றும் அறுந்துவிடும்.

விவேகானந்தனின் மனமும் இப்போது அப்படித்தான் ஏதேதோ இனிய கற்பனைகளில் ஓரேயடியாகத் திளைத்துக் கிடந்தது. கடற்கரை மணலில் பதிய உட்கார்ந்து தேவகியின் முகத்தையே ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்தான்.

தான் எழுதிய கடிதத்துக்குப் பதில் சொல்லத்தான் தன்னை அவள் இங்கே அழைத்து வந்திருக்கிறாள் என்று அவன் முற்றிலும் தீர்மானித்திருந்தான். அவள் சொல்லப் போகும் பதில் என்னவாயிருக்கும் என்பதிலும் அவனுக்குச் சிறிதளவும் சந்தேகமில்லை. அவன் மனம் குதூகலித்தது. சற்றுத் தொலைவில் அலைச் சுருளிட்டு ஆர்ப்பாட்டம் செய்யும் கடலைப்போல் அவனுடைய மனம் மட்டற்ற மகிழ்ச்சியால் பொங்கவிட்டு நுரைத்தது.

ஆகா, மனித அறிவுதான் எவ்வளவு பலஹீனமானது! மனத்தின் அஸ்திவார மற்ற வெறும் கற்பனை மகாசக்தி வாய்ந்த அறிவை எத்தனை எளிதில் வென்றுவிடுகிறது! காதலும் கற்பனையும் அறிவை வெல்லக் கூடிய இரு பெரும் ஆயுதங்கள் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

நீலப் பெரும் பாயாய் விரிந்திருந்த கடலின்மீது தன் கவனத்தைச் செலுத்தி மௌனமாக உட்கார்ந்திருந்தாள் தேவகி. பயங்கர அசுரனொருவன் அந்தக் கடலின் நீள் விளிம்பை இழைப்புளியால் இழைத்துச் செதுக்குவதைப் போல வெண்ணலைச் சுருள்கள் மடிந்து சரிந்து கொண்டேயிருந்தன.

அவளுடைய மௌனத்தைக் கலைக்க வழி தெரியாமலும், அதை வளரவிட விரும்பாமலும் தவித்துக் கொண்டிருந்த விவேகானந்தன், மணல் அப்பிய தன் இரு கைகளையும் தட்டித் துடைப்பது போல் பாவனை செய்து கொண்டு, "உங்களுக்கு இந்த மாலைப்போதும் கடற்கரைச் சூழலும் மிகவும் பிடிக்கும் இல்லையா?" என்று கேட்டான் நாணம் தேங்கிய தணிந்த குரலில்.

எங்கோ தொலை தூரத்தில் சென்றிருந்த தன் பார்வையை மெல்ல இழுத்துக் கொண்டுவந்த தேவகி அவனைப் பட்டும் படாததுமாகப் பார்த்துப் புன்னகை செய்தாள். பிறகு தன் ஆள் காட்டி விரலால் மணலில் கோலம் போட்டுக்கொண்டே "அப்படிச் சொல்ல முடியாது. ஏனென்றால், அவ்வப்போதைய மனத்தின் தன்மையைக் கொண்டு இடம் பொருள் இரண்டின் தன்மையும் மாறி விடுகின்றன" என்றாள்.

பேச்சுக்கு ஒரு பிடிப்புக் கிடைத்து விட்டது என்று எண்ணியவனாய் நிமிர்ந்து உட்கார்ந்த விவேகானந்தன் பொலிவு பொங்கப் புன்முறுவல் பூத்தவாறு, "அப்படியானால் இப்போது இந்த மாலை நேரமும் கடற்கரைச் சூழலும் உங்கள் மனத்தின் தன்மைக்கேற்ப எவ்வாறு காட்சியளிக்கின்றன?" என்று கேட்டான். இதற்கு அவள் சொல்லும் பதிலையும் ஊகித்து விடலாம் என்பது அவனுடைய நினைப்பு.

தேவகி தலை நிமிராமலே சொன்னாள்: "எனக்கு இது மாலை நேரமாகவோ, கடற்கரையாகவோ தெரியவில்லை. பட்டை உரிக்கும் வெய்யிலில் நின்று கொண்டு ஏதோ ஒரு சட்டப் புத்தகத்தைப் படித்துக் கொண்டிருப்பது போன்ற உணர்ச்சிதான் ஏற்படுகிறது!"

விவேகானந்தன் விழிப்படைந்தான். அவன் மனம் வேகமாக அடித்துக் கொண்டது. "நீங்கள் சொல்வதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை" என்று இழுத்தான்.

"புரிந்துகொள்ள முடியாத அவ்வளவு பெரிய புதிர் எதையும் நான் போட வில்லையே!" என்று கூறிக் கேலியாகச் சிரித்த தேவகி சட்டென்று நிமிர்ந்து, "கலைகளைப் பற்றி உங்களுக்கு ஏதேனும் தனிப்பட்ட அபிப்பிராயம் உண்டா?" என்று கேட்டாள்.

எதிர்பார்க்காத இந்தக் கேள்வியால் சற்றே திணறிய விவேகானந்தன் தன்னைச் சமாளித்துக்கொண்டு, "மனித வாழ்க்கைக்குரிய முக்கிய தேவைகளில் அவற்றுக்கும் ஓரளவு பங்கு உண்டு என்பது பொதுவான அபிப்பிராயம். அவை இல்லாமலும் மனிதர் வாழ முடியும் என்பது என் சொந்த அபிப்பிராயம்" என்றான் புன்சிரிப்புடன்.

"கலைஞர்களைப் பற்றி?"

"கலைஞர்கள் என்று யாரையும் ஒரு தனி ஜாதியாகப் பிரித்துப் பேச எனக்குப் பிடிப்பதில்லை. முயற்சியின் காரணமாக ஒரு துறையில் சிலர் தனித் திறமை பெறுகிறார்கள்-அவ்வளவுதான். என்னைக் கேட்டால் தெருக் கூட்டுகிறவன் கூட ஒரு சிறந்த கலைஞன்தான் என்பேன்."

"நீங்கள் மனம் திறந்து பேசுகிறீர்கள். அது எனக்கு மிகவும் பிடிக்கிறது" என்றாள் தேவகி சிறுநகையுடன்.

"அதற்காகத்தானே நானும் இன்று வந்திருக்கிறேன்!" என்று உற்சாகமாகக் கூறினான் விவேகானந்தன்.

இச்சமயம், பரிதாபக் கோலத்திலிருந்த ஓர் ஏழைச் சிறுவன், கையிலொரு தகரக் குவளையுடன் அவர்களருகில் தயங்கித் தயங்கி வந்து நின்றான். விவேகானந்தன் அவனை ஏற இறங்கப் பார்த்து, "என்னடா?" என்றான்.

"பசியாயிருக்கு சாமி, எதனாச்சும் தர்மம் பண்ணுங்க......" என்று பயந்தவாறு இழுத்தான் பையன்.

"தர்மம்தானே? இரு" என்று கூறி விவேகானந்தன் தனது சட்டை ஜேபியைத் தடவினான். சிறுவனின் கண்களில் ஒளி யேறியது. ஆவலுடன் தகரக் குவளையை நீட்டினான். விவேகானந்தன் சட்டென்று குனிந்து கை நிறைய மணலை வாரி அந்தத் தகரக் குவளையில் கொட்டி, "போடா, இங்கே நிற்காதே!" என்று விரட்டினான். திடுக்கிட்ட சிறுவன் பயந்தபடி அங்கிருந்து ஓட்டமெடுத்தான்.

"பார்த்தீர்களா, தேவகி? அந்தப் பையன் இந்தச் சிறு வயதிலேயே பிச்சை யெடுப்பதை ஒரு கலையாகப் பயின்று கொண்டு வந்து விட்டான். உண்மையில்

பிச்சை எடுப்பது கூட ஒரு கலைதான். நம்மிடமுள்ள அர்த்தமற்ற தர்ம உணர்ச்சியால் வளரும் கலை இது!'' - கலகல வெனச் சிரித்தான் விவேகானந்தன்.

பிரமை பிடித்தவள்போல் உட்கார்ந்து அவனையே பார்த்துக் கொண்டிருந்த தேவகி ஒரு சலிர்ப்புச் சிலிர்த்து நிமிர்ந்து, ''பிச்சைக்காரனின் குவளையில் மண்ணை அள்ளிப் போடுவது கூட ஒரு கலைதானே? அந்தக் கலையில் நீங்கள் தனித் திறமை பெற்றிருக்கிறீர்கள்! ஆனால் நான் இப்போது உங்களிடம் பேச வந்த விஷயம் வேறு!'' என்றாள்.

''நானும் அதைத்தான் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்'' என்று உற்சாகத்தோடு கூறினான் விவேகானந்தன்.

சிறிதே தயங்கிய தேவகி தணிந்த குரலில், ''அன்றொரு நாள் உங்கள் சங்கத்தின் ஆண்டுவிழாவில் கச்சேரி செய்த அந்தப் புல்லாங்குழல் வித்வான்மீது நீங்கள் பத்தாயிரம் ரூபாய் நஷ்டஈடு கோரி வழக்குத் தொடரப் போவதாகக் கேள்விப்பட்டேன். அதுஉண்மைதானா?'' என்று கேட்டாள்.

விவேகானந்தனின் முகம் கண்டிச் சிறுத்தது. இப்படி ஒரு கேள்வி அவளிடமிருந்து வருமென்று அவன் எதிர்பார்க்கவே இல்லை. கரும்பு தின்னக் காத்திருந்தவனின் வாயில் காஞ்சிரங்காயைத் திணித்தமாதிரி இருந்தது அவனுக்கு. ''ஆமாம்; அது உங்களுக்கு எப்படித் தெரியும்?'' என்று குழறினான்.

''கேள்விப்பட்டுத்தான் கேட்கிறேன்.''

''அவனே வந்து உங்களிடம் சொன்னானா?''

''அப்படித்தான் வைத்துக்கொள்ளுங்களேன்....''

விவேகானந்தனின் மனம் வக்கரித்தது. ''நான் அப்படிச் செய்தது நியாயமில்லை என்கிறீர்களா?''

''அப்படிச் சொல்ல எனக்கு உரிமை இல்லை. ஆனால், நான் வேறொன்றைச் சொல்ல விரும்புகிறேன்.''

அவன் அவளை ஏறிட்டு நோக்கினான்.

''அந்த முயற்சியில் நீங்கள் வாதியாக நின்றால், நான் பிரதிவாதியின் பக்கம் நிற்பேன் என்பதைச் சொல்லிவிட்டுப் போகவே வந்தேன்!''

அதிர்ந்துவிட்டான் விவேகானந்தன்.

விருட்டென்று எழுந்த தேவகி, ''உங்களுக்கு மிகவும் சிரமம் கொடுத்து விட்டேன்; மன்னியுங்கள்'' என்று சொல்லிக் கொண்டே அங்கிருந்து வேகமாகச் சென்று மறைந்தாள்.

பொறி கலங்கிப் போய் உட்கார்ந்திருந்தான் விவேகானந்தன். இருள் வந்து சூழ்ந்து எவ்வளவு நேரமாகிய தென்றும் அவனுக்குத் தெரியவில்லை.

''விவேகா! விவேகா!'' என்ற குரல் கேட்டுத் திடுக்கிட்டு நிமிர்ந்தான் விவேகானந்தன். அவன் எதிரே தலைதெறிக்க ஓடி வந்து நின்றான் சாரங்கன்.

''என்ன சாரங்கா? என்ன விஷயம்? ஏன் இப்படிப் பதறியடித்து ஓடி வருகிறாய்?'' என்று கரகரத்த குரலில் கேட்டான் விவேகானந்தன்.

இரைப்பும் இழுப்புமாகச் சுற்று முற்றும் விழித்துப் பார்த்த சாரங்கன், ''வந்து...விவேகா!...நீ கோமதியைப் பார்த்தாயா?... நம் சங்கத்தில் உன்னைப் பார்க்க அவள் வந்தாளாமே?'' என்றான்.

''ஆமாம்; அப்புறம் அவள் போய் விட்டாள்! என்ன விஷயம்?'' என்றான் விவேகானந்தன் அலட்சியமாக.

''அவளுடைய தாயார் சிவகாமியம்மாள் இன்று மாலை ஐந்து மணி வாக்கில் என்னுடைய வீட்டின் குறுகலான மாடிப் படியில் தண்ணீர்க் குடத்துடன் ஏறும் போது கால் இடறிக் கீழே உருண்டு நிலைமை கவலைக்கிடமாக இருக்கிறது. ஆனால் அந்தப் பெண் எங்கு போனாள் என்று தெரியவில்லை. அவளுக்கு இன்னும் விஷயம் தெரியாது!'' என்று படபடத்தான் சாரங்கன்.

''சரி; எங்கேயாவது போய்த் தேடிப் பார்!'' என்று வெறுப்புடன் சொன்ன விவேகானந்தன் தொலைவில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த தன் மோட்டார் சைக்கிளை நோக்கி நடந்தான்.

உடலும் உள்ளமும் வெறுவாகச் சோர்ந்த நிலையில் வீடு வந்து சேர்ந்த தேவகி, மேஜைமீது அவள் பெயருக்கு வந்த ஒரு கடிதம் கிடப்பதைக் கண்டு அதை அலட்சியமாக எடுத்துப் பார்த்தாள். அது தபாலில் வந்த கடிதம் அல்ல; அவளுடைய பெயர் மட்டும் எழுதப்பட்டிருந்தது.

ஏதோ யோசனையில் கவரைத் திறந்து உள்ளிருந்த கடிதத்தை எடுத்தாள். அது மோகனசுந்தரத்தின் வீட்டிலிருந்து கோமதி எடுத்துப் போன விவேகானந்தனின் கடிதம்!

மாடியில் யாரோ பேசிக் கொண்டிருக்கும் அரவம் கேட்கவே, கையிலிருந்த கடிதத்தைப் பிரித்துக் கூடப் பார்க்காமல் மாடிப் படிகளிலேறி ஓடினாள் தேவகி.

அங்கே, சிவப்பிரகாசத்துடன், டாக்டர் ராமநாதனும், சுந்தரியம்மாளும் விவேகானந்தனின் திருமண விஷயமாகப் பேசிக் கொண்டிருந்தனர்! (தொடரும்)

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor. T. Sadasivam.


கேசப்
பராமரிப்பின்
ரகசியம்
ஸ்வஸ்திக்
பெர்ப்யூம்டு காஸ்டர் ஆயில்
தயாரிப்பாளர்: ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ்
லிமிடெட், பம்பாய்
SHILPI SOM ID

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon




# லைப்பாய் இருக்குமிடம்
# அதுவே ஆரோக்கியம் இருக்குமிடம்!

கொடுங்கோடை வெயிலில் தெரியும்,...குளுமையான லைப்பாய் ஸ்நானத்தின் அருமை! களைப்பையும், கசகசப்பையும் அடியோடு போக்கி. கிளுகிளுக்கும் ஆரோக்கியப் புதுமலர்ச்சியைத் தருவதில் லைப்பாய்க்கு ஈடு லைப்பாய்தான்! 'எல்லாம் இன்பமயம்.'

அன்றாட அழுக்கிலிருந்து யாராலும் தப்பமுடியாது. அழுக்குடன் கிருமிகளைக் கழுவிக் களைவது லைப்பாய் சோப். குடும்ப முழுமைக்கும் குன்றாத ஆரோக்கியத்திற்கான சோப் லைப்பாய்!

L.18-X23 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.